தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண் : 177.

# தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

## ஆறாம் தொகுப்பு

(இலக்கியம்)





தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல்நிலையம்.

கி. பி. 1981] [விலை ரூ. 

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல்நிலையத்

# தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

## ஆறும் தொகுப்பு

( இலக்கியம் )

பதிப்பாசிரியர் :
புலவர் வீ. சொக்கலிங்கம்,
தமிழாசிரியன்,
சரசுவதி மகால் நூல் நிலையம், தஞ்சாவூர்.





தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல்நிலையம்.

கி. பி. 1981.] [விலை ரூ.

# பதிப்பாசிரியர் முகவுரை

தஞ்சை, மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூல்நிலையத்தின்கண்ணுள்ள தமிழ்ப்பகுதியில் உள்ள சுவடிகளில், இதற்கு முன்னர் இலக்கியச் சுவடிகளின் எண்கள் 719 வரை 1, 2 ஆகிய பகுதிகளான விவர அட்டவணைகளிலும், மருத்துவச் சுவடிகள் 300 வரை, 3, 4, 5 ஆகிய பகுதிகளான விவர அட்டவணைகளிலும், வெளிவந்து விற்பனையாகி வருகின்றன.

தற்போது 720 முதல் 989 வரையிலான இலக்கியச் சுவடிகள் 6-வது தொகுதி விவர அட்டவணையாக வெளி வருகின்றது. 990 முதலான எண்கள் உள்ள இலக்கியச் சுவடிகளின் விவர அட்டவணை 7-ம் தொகுதியாக விரைவில் வெளிவர இருக்கின்றது. இத்தொகுதி வெளிவருவதற்கு, சுவடிகளின் குறிப்பு முதலானவைகளை எழுதி உதவிபுரிந்த நூல்நிலையத் தமிழாசிரியை திருமதி ச. திலகம் அவர்கட்கு நன்றி உரித்தாகிறது.

இது வெளிவரப் பொருளுதவி புரிந்த தமிழக அரசுக்கும், அனுமதி தந்த நூல்நிலைய நிருவாகக் குழுவுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இதிற் காணுங் குற்றங்குறைகளைப் பொறுத்து, நிறைவு செய்து வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடனும்.

புலவர் வீ. சொக்கலிங்கம்,
தமிழாசிரியன்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்.
19—2—1981.

# முன்னுரை

உலகப் பிரசித்திபெற்ற இந்நூலகத்தில். தமிழ் இலக்கியச் சுவடிகள் மட்டும் சுமார் 1,340 சுவடிகள் உள்ளன. இவைகளைத் தவிர வைத்தியச் சுவடிகளும் தனியாக உள்ளன. இந்த இலக்கியச் சுவடிகளின் தொகுப்பில் முன்பே இரண்டு தொகுதிகள் வெளிவந்துள்ளன. ஆக மொத்தம் ஐந்து தொகுதிகள் அச்சிட்டு, தற்பொழுது ஆறுவது தொகுதியாக இதனை அச்சிட்டுள்ளது. இத் தொகுப்பில் இலக்கியம். இலக்கணம், சமய நூல், சோதிடம் என விஷயக் கிரமமாக வரிசைப்படுத்தி எழுதப்பட்டுள்ளன.

இந்நூலில் முதலில் கொடுக்கப்பட்ட எண் இலக்கிய நூல்களின் தொடர் எண்ணிக்கையாகும். அடுத்து காணப் படுவது சுவடியின் எண்ணிக்கையாகும். ஒரு சுவடியில் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் இருந்தால் அவற்றைக் குறிக்க அடைப்புக் குறிப்புகளுக்குள் ஏ, பி, சி என்ற தொடர் எண்கள் குறிக்கப்பட்டுள்ளன. இம்மாதிரியே ஏனைய இலக்கியச் சுவடிகளின் தொகுப்பும் விரைவில் வெளி வரும்.

இத்தொகுப்பு நூலை வெளியிட பெரிதும் உதவித் தொகை அளித்து வரும் நமது தமிழக அரசினருக்கு நூல் நிலைய நிருவாகக் குழுவின் சார்பாக நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

இங்ஙனம்,

**துரை. சுந்தரேசன்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சியர் & நிருவாகக்குழுத் தலைவர்
சரசுவதி மகால் நூலகம்,

*தஞ்சாவூர்,*
*12—3—81.*

# பொருளடக்கம்

## சைவ சமயநூல்கள்

### சைவாகமங்களும் சைவசாத்திரங்களும்



### சைவத்திருமுறைகள்

### காமநூல்



### மருத்துவம்



### மந்திரங்கள்

## சோதிடம்



C

பக்கம்

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவைகள், பல்வேறு இடங்களில் உள்ளன. அவைகள் பழுதடைவதற்குமுன் எம்மிடம் அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவைகள் மக்களுக்குப் பயன்படும்.

எம்மிடம் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும் சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, எமது சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாக வருமாயின், சுவடி தந்தார் பெயரும் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் 5 பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளை எமது மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

*தஞ்சாவூர்,*
*12—3—81.*

**துரை. சுந்தரேசன்,** I. A. S.,
*மாவட்ட ஆட்சியர் & தலைவர்,*
*நிர்வாகக் குழு, சரசுவதி மகால் நூலகம்.*

# தஞ்சை சரசுவதி மகால்

## தமிழ்ச் சுவடிகளின்

## 6 - வது தொகுப்பு

( இலக்கியப் பகுதி )

வரிசை எண் : **1088** சுவடி எண் : **919**

## ஆசிரிய நிகண்டு.

ஏடுகள் : 51. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 8 - 9 வரிகள். அளவு : 22 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். *கிரந்தங்களின் எண்ணிக்கை : 1500. ஆசிரியர் : ஊற்றங்கால் ஆண்டிப் புலவர். முழுமை : முழுவதும் இல்லை. (இரு தொகுதிகள் மட்டுமே உள்ளன).

தொடக்கம் :

விநாயகர் துதி.

"ஏரா சிரியநிகண் டென்னுமீ ரைந்தொன்று
சீரார் தொகுதியதாய்ச் செப்புதற்கே - பேராரைச்
சேரானைச் சேர்ந்தாரைச் சேரும் விநாயகற்றுங்
காரானை மாமுகன்றாள் காப்பு."

முதலாவது தெய்வப் பெயர்த் தொகுதி

ஆசிரிய விருத்தம். சிவன் பெயர்.

சங்கரன் சம்பு சதாசிவ னுமாபதி
தாணுவே பூத நாதன்
சந்திரசே கரநீல கண்டனீ மத்தாடி
தற்பரன் பேயொ டாடி

---

* 32 எழுத்துக்கள் - ஒரு கிரந்தம்

அங்கணன் பசுபதி யரன்சிவ னுருத்திர
னழலாடி பாண்ட ரங்க
னந்திவண் ணன்பகவ னந்திநம் பன்சோதி
யமலனு னந்த னுதி
மங்கைபா கன்சுடலை யாடியர வாபரணன்
மழுவாளி கைலை யாளி
மாதேவ னிருமலன் மறைமுதலி யோகிமா
னிட.மேந்தி காம தகனன்
கங்கா தரன்கறை மிடற்றண்ண லைம்முகன்
காலகா லங்கி ரீசன்
கங்காளன் முத்தனித் தன்பரம னுலமர்
கடவுணீ றணிக டவுளே. -க

மு.பு.வு :

"அழிவில்லிய மானன்பசுப் புற்கலன் சீவ
னுவியான் மாச்சேதனன்
ஆதன்பி ராணனு யிரபிதான மணுவுமாம்
வயஞ்சினை காத்திரம்
வழுவில்சித் திரமங்க மேவுறுப் பாங்குச்சை
வசிவடுச் சுவடங்கிதம்
வன்சேக்கை யேதமும் பாமேலும் பேரென்பு
மதவங்க மத்தியக்காங்
கழியுமுடல் முழுவென்பு கங்காள மாகுங்
களேபர முடலெலும்பாம்
கந்துமொழி மூட்டுக் கொழுந்தினவை சந்தாங்
கடாலம்வெண் டலையோடதாம்
விழைவாயில் பொறிகரண மிடுகந்த மிந்திரிய
வினவிலோ ரைந்தாஞ்சுவை
மிகுபரிச மோசையொளி ,நாற்றமறி கருவிநா
மெய்செவிகள் மூக்காகுமே." -டுரு

இரண்டாவது மக்கட் பெயர்த் தொகுதி முற்றிற்று.

காலம் : ( Colophon )

ஊற்றங்கால் ஆண்டிப் புலவர் செய்த ஆசிரிய நிகண்டு மூல பாடம். கஅயஅ ஞூ சித்திரை மாதம் 25-ந் தேதி வாத்தியார் வேலாயுதஞ் செட்டியாரால் எழுதப்பட்டது.

குறிப்பு :

இது நிகண்டு நூலாகும். ஆண்டிப் புலவரின் தந்தையார் பெயர் பாவாடை வாத்தியார் போலும். ஆசிரியர் ஞானப் பிரகாசர். ஊர் ஊற்றங்கால். இதில் பதினேறு தொகுதிகள் உள்ளன. ஆயினும் இச்சுவடியில் இரண்டு தொகுதிகளே உள்ளன. இவ்விரண்டிற்கும் செய்யுட்தொகை மொத்தம் காப்பு நீங்கலாக 94. காப்புச் செய்யுளும் பாயிரமும் 4. ஆக 98 செய்யுட்கள். வேறு சுவடிகட்கும் இதற்கும் பாட வேறுபாடுகள் அதிகமாகக் காணப்படு கின்றன. எழுத்துக்கள் அழகாக உள்ளன. பிற நிகண்டுகளின் ஒப்புமையுடன் இதன் எட்டு தொகுதிகள் எமது சரசுவதி மகால் நூலகத்தில் அச்சாகி யுள்ளன.

---

வரிசை எண் : **1089** சுவடி எண் : **967**

## ஆசிரிய நிகண்டு

ஏடுகள் : 50. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும், ஒடிந்தும் உள்ளது. பக்கத்திற்கு : 10 - 11 வரிகள் அளவு : 15 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1,300 . ஆசிரியர் : ஆண்டிப்புலவர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

... ... புமிருபு ... ... முமொளி ... ... னமொரு ... ... கடியநான்குங் கொலச் ... ... ஈஙக்ளொரைந்தும் ... ... ஊௌந ... ... மதவாறும் விளங்குகின்றயிடி வருப் பெற்ற ... ... னறிருநா ... ,... பேசிப்பாபிற்றியறுப்பாம்.

## பாயிரம்

கன்னி ... ... வானைவள்ளி பங்காளி ... ... வரகொ
,.. ... சுந்தனை தென்பழனி முருகனைச் சிந்தை ... ..

முடிவு :

இரசதந்தாரம் யெண்டாது கவிக்காதபு தமிரதனம்
வெண்பொன் வெள்ளி யெழுவகைப் பெயரேயது
மயாவடுமைதாம் பிரமெருவைசல்லுச் சீருணங்

கருது செம்பாறு பெயர் இய்யஞ் சொன்னல் கருந்தாது
நீளக் ... ... பான கருஞ்சொற்ன ராசிரும்
பேழுபெயர் சத்தியாங் காணரி ... ... பெயர்.

மருவரிய வுரைகஞ்சம் வெண்கலமிரண்டு பெயர்மது
கந்தரா வின்பெயர்வங்கமுஞ் சிருசூம வெள்ளீய
மாகுமே வந்த காரீயப் பெயர்.

தெரிதரும் பத்திரஞ்சீசமே சீதுச் சிறந்த வீயப்
பொதுப்பெயர் செம்பின் மாயா புரியார்சூ... ..
சேர்ந்த பித்தளையாகுமே. -சு

குறிப்பு :

இது எமது 919-ம் எண் சுவடி போன்றது. இதில் முதல் ஐந்து தொகுதிகள் முழுதும் உள்ளன. 6-வது பொருட் பெயர்த்தொகுதியில் 4 செய்யுட்கள் வரை உள்ளன. பாடவேறுபாடுகள் மிகுந்து காணப்படுகின்றன. சுவடி மிகமிகப் பூச்சியரித்த நிலையில் உள்ளதால் சொற்கள் தெளிவாகக் காணக்கூடவில்லை. அச்சிடப்பட்டுளது.

---

வரிசை எண் : **1090** சுவடி எண் : **845**

## உரிச்சொல் நிகண்டு

ஏடுகள் : 12. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 10-11 வரிகள். அளவு :

32 × 4.2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 600. ஆசிரியர் : இம்முடிப் பட்டம் பெற்ற காங்கேயர் முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" சேந்த னுரைத்த திவாகரமாஞ் சாகரத்தை
யாய்ந்தெடுத்துக் காங்கயனு மன்பாக - வாய்ந்திலகு
சொற்பா வுருச்சொற் றுகைநமக்கே யாமென்று
கற்பார் கலைவல்லோர் காண்."

குமரன் துணை. குருவே துணை.
வேலுண்டு வினையில்லை மயிலுண்டு மலைவில்லை.
ஹரிஓம் நன்றாக. உருச்சொல்.

" திருமாலுஞ் செங்கமல மேயானுங் காணாப்
பெருமான் பிறைசூடும் பெம்மான் - அருள்மூர்த்தி
நன்னெஞ்சி னுன்மறையோன் றில்லை நடம்புரிவான்
என்னெஞ்சின் மேய யிறை." -க

அரவன் புராரி புராந்தக னண்ணல்
பரமன் பாசுதான் பித்தன் - அரனே
கிரியை வளைத்தோன் கிரியன் கிரீசன்
வரியுளு வைத்தோலோன் வான். -உ

முடிவு :

" குளமாகு நெற்றி சருக்கரை குட்டங்
களமா கவயரு கண்ட - முளவாங்
குடங்கரி மத்தகங் கும்பமெனக் கூறல்
தடங்கொங்கை வித்தந் தனம். -௧௪

ஞான மறிவு பனுவலு மாமென்பர்
நூனமாங் குன்றலு நிச்செய - மானு
மறைமந் திரம்வேத மாவாம் புரவி
சிறைவண்டு சூதந் திரு. -௧௫

பத்தாவது ஒருசொல் பல்பொருட் பெயர்த்தொகுதி முற்றும். ஆகத்தொகுதி 15-க்கு விருத்தம் 218. உருச்சொல் முகிந்தது. முற்றும். குமர நாயகன் துணை.

குறிப்பு :

முதல் (தெய்வப் பெயர்த்) தொகுதியிலிருந்து இறுதி தொகுதி ஒருசொற் பலபொருட் பெயர்த்தொகுதிவரை 10 தொகுதிகள் உள்ளன. இதில் 218 வெண்பாக்கள் உள்ளன. ஆசிரியர் காங்கேயன் என்பார் தொண்டை மண்டல செங்குந்த மரபைச் சார்ந்தவர். பின்னர் ஏட்டில் கீழ்க்கண்டவாறு காணப்படுகின்றது.

பெருமாபிள்ளை புத்திரன் பிச்சப்பிள்ளைக்கு எழுதிக்கொடுத்த சுவடி. நன்ருக நீடூளி காலம் வாள்க.

வேலுண்டு வினைஇல்லை.
மயிலுண்டு மலைவில்லை.
மாதாபிதாக்குருத்தெய்வந்துணை.

---

வரிசை எண். **1091** சுவடி எண். **807** (a)

## சூடாமணி நிகண்டு

ஏடுகள் : 85. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துள்ளது. பக்கத்திற்கு : 7 - 8 வரிகள் அளவு : $40 \times 3\frac{1}{2}$ செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 3000. ஆசிரியர் : (வீரைமண்டல புருடன்) குணபத்திரன். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்ருக

முதலாவது தெய்வப் பெயர்த் தொகுதி

பூமலி யசோகு நீழற் பொலிந்தவெம் மடிகள்முன்னு
ளேமமா முதனூற் சொல்ல விலக்கணத் தியன்றபாவாற்
ருமொரு வழிநூல்ச் சொல்லச் சார்புநூல் பிறருஞ் சொல்லத்
தோமிலா மூன்று நூலுந் தூபமென வுதித்ததன்றே -க

அங்கது போய பிற்றை அலகுநூல் பிறந்த மற்றை
செங்கதிர் வரத்தாற் ரோன்றுந் திவாகரச் சிறப்பின் மிக்க
பிங்கல ருறைநூற் பா(வி)ற் பேணினர் செய்தார் சேர
விங்கிவை யிரண்டுங் கற்க வெளிதல்ல வென்றே சூழ்ந்து. -உ

முடிவு :

இரவியு நெருப்புந் தானே தபனனென் றியம்ப லாமே
யிரவிதீய்க் கனலி யென்ப ரிரவிகள் ரிருபேர் மாலே
யிரவியொ டிரவே யல்லா மிரவியே வெயிலென் றூழா
யிரவியின் கிரணம் வாரி யின்கரை சோலை கானல் -ாஅய

அரவணை மாயோ னுடல் சோதிநாட் காலமாக் காலா
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

குறிப்பு :

இதில் 8, 9, 10, 12-வது தொகுதிகள் இல்லை. 11-வது தொகுதி யில் னகர எதுகையில் 8-வது செய்யுள் வரை இருக்கிறது. அதன் முடிவில் "ஆதியிற் பொருள் முற்றும்" என்று எழுதப்பட்டுள்ளது. பின் " அந்தத்திற் பொருள் " என்று எழுதப்பட்டு, அது முதல் 42 செய்யுட்கள் உள்ளன.

இவைகள் அச்சாகியிருப்பதாகத் தெரியவில்லை. ரகர எதுகை யின் முடிவில் "ரகரவெதுகை முற்றும். சங்கரலிங்கம் எழுதினது" என்றுளது.

---

வரிசை எண் : **1092.** சுவடி எண் : **807 (b)**

## உள்ளமுடையான் (சாதக சூடாமணி)

ஏடுகள் : $11\frac{1}{2}$ ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யரித்துள்ளது. பக்கத்திற்கு : 9 - 11 வரிகள். அளவு : $40 \times 3\frac{1}{2}$ செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 550. ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

சுன்பை அன்பை துருதிரு யோகந்திறன் றனக்கிரண்டிலத்த
பன்னே யல்லால் பற்றச் சுந்தரக் கோள்கணின்ளுற
சுன்பர யோகமாகும் தந்திர முடைய நாகுந்தராபதி
சமனுய் வாழ்வன் மந்திரி தனவான் கீர்த்தியுடையவன்
வாதுநல்லாய்

முடிவு :

ஒருபதில் வியாழ நிற்கில் லொண்ணுதல் மைந்தருண்டாம்
நிருபதி வரிசை யாலே நிதிபுவி மிகவும் வாய்க்குங்
கருமங்க ளரிந்து நல்ல கன்மங்கள் செய்து வாள்வன்
சுரிகுழல் மங்கை நல்லாய் தொகுத்தனர்
நுாலையாய்ந்தோர் -௬

குறிப்பு :

இது சோதிட நூல்களுள் ஒன்று. முதல் ஏட்டில் காப்புச் செய்யுளாக

"பழனிக் குமறன் திருத்தாள் பணிய பாக்கியம் வருந்
துள நித்தம் அடிமைக்கிப் புத்திவரந்துருஞ் சுப்பிரமண்ணியர்
வளநித்தம் பால்பழம் அறுசுவை யன்னம் மாமரையோற்க
குளநித்தம் பாக வரந்தரு மயூர குருபரனே"

என்றுளது. தலைப்பு உள்ளமுடையான் என்றுளது. ஆயினும் மேல் பாட்டின் பின்னர் :

"வேலுமயிலுந்துணை. ஆகாசராயர் துணை
சாதக சூடாமணி யெழுதத் துடங்கினது
சித்திராவுத்திரி ஞு சித்திரை மீ ௬ ௨"

என்று எழுதப்பட்டுள்ளது. இதன் பின்னர் சாதக சூடாமணி நூல் எழுதப்பட்டுளது. அது அடுத்த ஏட்டில் தொடர்ந்துள்ளது.

---

வரிசை எண் : **1093** சுவடி எண் : **807 (c)**

## சாதக சிந்தாமணி (லக்கின பலன்)

ஏடுகள் : $34\frac{1}{2}$. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 9-10 வரிகள் அளவு : $40 \times 3\frac{1}{2}$ செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2200 ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

கங்கைவெண் பிரைதேன் மலங்கு கடுக்கைவெள்
ளெருக்குஞ்சூடி
மங்கைதன் பாகம் வைத்த மான்மழு வேந்தி மைந்தன்
பங்கயப் பதங்கள் போற்றிப் பார்மிசை செனித்தமாந்தர்
தங்கள்சா தகமாஞ் சிந்தா மணித்தமிழ் சாற்ற
லுற்றேன். -க

முடிவு :

மாமறை வாழி தெய்வ வாணன் வாளி வாளி
கோமள விசைய வல்லி கொளுனனுங் குகனும் வாழி
நான்முகன் கமலதேவி நளினபொற் களங்கள் வாழி
பாமலி கவிஞர் செஞ்சொற் பனுவலும் வாளிவாளி

வேலுமயிலுந் துணை. சாதக சிந்தாமணி எழுதி முடிந்தது.

காலம் : (Colophon)

சித்திராவுத்திரி வருடம் வைகாசி மீ 4-ம் தேதி எழுதி முடிந்தது. உடுமலைப்பேட்டையிலிருக்கும் சங்கரநாராயண பிள்ளையவர்கள் குமாரன் பிச்சப்பிள்ளை யெழுதினது. சிவன் செயல். ராம செயம். குமரன் துணை. மீனும்பிகை முன்னிற் கவும். சரசுபதியம்மன் துணை. சொக்கனாத சுவாமி லட்சிக் கவும். திருமூற்தி துணை. வடிவேலன் முன்னிற்கவும்.

குறிப்பு :

இது சோதிட நூல்களுள் ஒன்று. இதன் முன்னுள்ள உள்ள முடையான் என்னும் நூலின் தொடக்கத்தில் சாதக சிந்தாமணி என்ற தலைப்பும் காப்புச்செய்யுளும் தொடங்கிய காலமும் கூறப் பட்டுள்ளன.

வரிசை எண் : **1094** சுவடி எண் : **807 (d)**

## ஆரூடக்கெவுளி (உரையுடன்)

ஏடுகள் : 11½. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யரித்துள்ளது. பக்கத்திற்கு : 10 வரிகள் அளவு :

$40 \times 3\frac{1}{2}$ செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 700. ஆசிரியர்: அறியக் கூடவில்லை. முழுமை: முழுவதும் உள்ளது.

தொடக்கம்:

"கற்பகப் பிள்ளைகள் வினைகருதி யெப்பொருளுந்
தொளுஞ தேற்றுவம் நாமே"

நூல்

"முந்திய கெவுளி தான மொளியும்வா றரிய வேண்டி
யிந்திரன் னனலோன் கால நியக்கர்கோன் வருணன் வாய்வு
சந்திர னீசா னென்னச் சாற்றிய திசைக ளெட்டும்
வந்தவா ரரிந்த ருக்கண் வருவது வகுற்றுச் சொல்வாம்"

என்பது கெவுளி சொல்லுந்தானமும் வறும் பலாபலமும் அரிந்தபடி - - - - -

முடிவு:

கெவுளி சொல்லுந் திசை நிரதி வாய்வு யிந்திரன்
யிந்த மூன்று திசையிற்ச் சொல்லில் தனக்காம்
அக்கினி யீசானன் வருணன் மேற்ச் சொல்லில்
இராசாக் களுக்காம் யிமன் குபேரன் நில்ச்
சொன்னல் பிரத்தியாருக்கா மென்றவாறு
யிவவகை நானுதவித மாய் ... ... ருகிறபலா
பலமரிந்து ஆரூடக் கெவுளியின் பலஞ்சொல்லு
வதென்றவாறு. - சயங

ஆரூடக் கெவுளிக் காதல் யெழுதி முகிந்தது
வேலுண்டு வினையில்லை. காந்திமதியம்மன் துணை.

குறிப்பு:

இது பல்லி சொல்லுக்குப் பலன் கூறும் நூல். சிறந்த நூலாகக் காணப்படுகின்றது, உரையுடன் முற்றும் இருக்கிறது. இறுதியில் ஆரூடக் கெவுளி காதல் என்றும், தொடக்கத்தில் ஆரூடக்கெவுளி என்றும் உள்ளது.

---

வரிசை எண் : **1095.** சுவடி எண் : **807 (e)**

## கெவுளி பலன்

ஏடுகள் : 5. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யரித்துள்ளது, பக்கத்திற்கு : 8 வரிகள் அளவு : 40 × 3½ செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

ஒன்று நினையாதிருக்குரபோது கெவுளி பலன்

பெண் கெவுளி.

"நாயறு மரணந் தீதாம் நாத்திங்கள் சிலுகு செவ்வாய்
ஆயபெ ணவள்க்கும் புந்தி யானபொன் பரப்பார்
பொன்னும்
பேயநல் வெள்ளி கள்ளர் விரவுடங் கேடு மந்த
நாயன்றப் பண்டம் பாளி லழகிய வளக்க தாமே"

**முடிவு :**

பருதியின் ஞளு நன்று பனிமதி பொல்லாச் செவ்வாய்ச்
சிருகுறு நன்றும் புந்தி செல்லிடிற் ருளாம் பொன்னன்
வருவது கருமந் தூரம் வைத்திடுஞ் சோதி வெள்ளி
யிருசனி பொருளும் பேறு மினியதோர் வளிபோ வற்கே!

என்றது நாயறுக்கு நல்லது. திங்களுக்குப் பொல்லாது போன காரியம் பலியாது. செவ்வாய் சிலுகு சண்டையுண்டு. நன்றும். புதன் சடுதியில் போவார். வியாளம் தாரம் பொய்க் காரியமாம். வெள்ளியில்ச் சடுதியில்க் காரியமாகும். சனியிலறப் பிறம் போக லாபமுண்டு. பொருள்ப் பேருண்டு. பாளில்ப் போக நன்மை யென்றவாறு. -டுசு

**குறிப்பு :**

இதுவும் பல்லி சொல்லுக்குப் பலன் கூறுவது. சோதிட நூல். 54 செய்யுட்களேயுள்ளன. மொத்த எண்ணிக்கை அறியக்கூடவில்லை.

வரிசை எண் : 1096 சுவடி எண் : 938

## சூடாமணி நிகண்டு
(11-வது தொகுதி)

ஏடுகள் : 37. ஏட்டின் நிலை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 9 - 10 வரிகள். அளவு : 32 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1500. ஆசிரியர் : வீரைமண்டல புருடன். முழுமை : முழுவதும் உள்ளது (11-வது தொகுதி மட்டும்).

தொடக்கம் :

" முடிவிலின் பத்து மூவா முதல்வனைப் போற்றி செய்தே
யடிதொரு மிரண்டு மொன்று மாதியிற் பொருள டக்கி
நடைபெறும் ககரமாதி னகரவீ ரெதுகை யாகப்
படியுமோற் சொற்பொ ருள்பல் பெயற்துகை
பகர லுற்றான்.

நன்றாகக் குருவாள்கக் குருவே துணை சீனிவாசந்துணை.

நூல்.

பகவநே யீசன் மாயோன் பங்கையன் சினனே புத்தன்
பகலே ஞளொரு முகூர்த்தம் பகலவ னடுவே தேசு
மகரமே சுராப்பூந் தாதம் வசிகூர்மை வசியம் வாளே
யகமன மனையே பாவ மாமிடப் பேரோ டுள்ளாம். -க

முடிவு :

" அன்வினை யொடுபெ யர்க்கு மிகுதிசா ரியையு நாற்ப்பேர்
மன்னிடுங் கனைத்த லென்ப திருளோசை யிருபேர் வைக்கு
மின்னனீ வொருசொற் பல்பேர்க் கியற்கவி முன்னூற்
றென்பான்
சொன்னவன் குணபத் திரன்றாள் சூடுமண் டலவன்
றானே." -ய௮

னகார எதுகை முற்றும்.

ஆக எதுகை ய௮க்கு கவி நாகூ. குருவே துணை.

யகவது நிகண்டு.

**காலம் : (Colophon)**

பிரமாதீச ஷு தையி மீ யாட உ எழுதினது. நன்றாக குருவே துணே.

**குறிப்பு :**

இது நிகண்டு நூல்களுள் ஒன்று. இந்நூலில் சூடாமணி நிகண்டின் 11-ஆம் பகுதி மட்டும் உள்ளது. பாட வேறுபாடுகள் அதிகம் உள்ளன. நூல் எழுந்தகாலம் ஒன்பதாவது நூற்றாண்டின் இறுதி. 10-ம் நூற்றாண்டின் தொடக்கம். சமண மதத்தைச் சார்ந்த மண்டல புருடரின் ஆசிரியர் குணபத்திரன் என்பவர். இந்நூல் அச்சிடப்பட்டுளது.

---

வரிசை எண் : **1097** சுவடி எண் : **909**

## சூடாமணி நிகண்டு

*(11, 12-வது தொகுதிகள்)*

ஏடுகள் : 50. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 10 - 11 வரிகள். அளவு : 26 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1700. ஆசிரியர் : வீரை மன்னன் மண்டலவன். முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

நிகண்டு பதினோராவது.

"முடிவிலின் பத்து மூவா முதல்வனைப் போற்றி செய்தே
யடிதொறு மிரண்டு மொன்று மாதியிற் பொருள டக்கி
நடைபெறு ககர மாதி னகரயீ றெதுகை யாகப்
படியுமோர் சொற்பொ ருட்பல் விதத்தொகை பகர
லுற்றாம்."

குருபாதம்

நூல்

"பகவனே யீசன் மாயோன் பங்கயஞ் சினனே புத்தன்
பகலே நாளொரு முகிர்த்தம் பகலவ னடுவே தேசு

மகரமே சுராப்பூந் தாதாம் வசிகூர்மை வசியம் வாளே
யகமன மனேயே பாவ மாமிடப் பேரோ டுள்ளாம்.'' -க

முடிவு :

"உரைத்தயிப் பலபேர்க் கூட்டத் தொருபெயர்த்
தொகுதி தன்னில்
விருத்தமு வைம்ப தின்மேல் விகுதியோ
ரெட்டுஞ் செய்தான்
செருக்கிலா ஞான சீலந் தெரிசன மிவையே பூண்டோன்
மருக்குளர்ப் பொலிசூள் வீரை மன்னன்மண்
டலவன் ருனே.'' -ாடுகூ

பனிரண்டாவது முற்றும்.

குறிப்பு :

முன்பிரதி போன்றது. முதலேடு முற்பகுதி முறிந்துள்ளது. திவாகரம், பிங்கலம் இவற்றின் வழி நூலாகுமிச் சூடாமணி நிகண்டு. விரைமன்னன் மண்டல புருடரால் செய்யப் பெற்றது. இவர் சைன சமயத்தவர். இவர் 10-ம் நூற்றுண்டின் தொடக்கமாதல் வேண்டும். அச்சிடப்பட்டுளது.

## இலக்கணம்.

வரிசை எண் : **1098** சுவடி எண் : No. 971 (a)

### நாற்கவிராச நம்பி யகப்பொருள்
(விளக்க உரையுடன்)

ஏடுகள் : 65. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பூச்சியரித்த நிலை. பக்கத்திற்கு : 12 - 13 வரிகள். அளவு : 38 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 6,000 ஆசிரியர் : நாற்கவிராச நம்பி. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

அகப்பொருளுரை பாடம்.

"எண்ணிய எண்ணிய வெய்துப கண்ணுதற்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே."

* * * *

பூமலி நாவன் மாமலைச் சென்னி
யீண்டிய விமயோர் வேண்டலிற் போந்து.

முடிவு :

... ... ... என்பது தீதில் பொருள் வேறே தோன்றினு மவற்றை யிதனுளெடுத் தோதப்பட்ட பொருள்களோடுங் கூட்டியுண்மைப் புலப்படச் சொல்லிப் பிறர்க்கு உணர்த் துதல் குணநடை யோர்களிலக்கண மென்றவாறு.

ஐந்தாவது ஒழிபியல் முற்றும்.

அகப்பொருள் விளக்கம் முற்றும்.

குறிப்பு :

இது அகப்பொருளிலக்கணத்தைச் சாரும். பாடபேதங்கள் மிகுந்து காணப்படுகின்றன. எமது சுவடி எண் 651 போன்றது. மிகவும் சிதைந்து, பூச்சியரித்து, மடிந்து ஒடிந்துள்ளது. அகத்திணை யியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என்ற ஐந்து இயல்களையுடையது. ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளிலும் வல்லவராயிருந்த நம்பி என்பார் நாற்கவிராசநம்பி என்று பெயர் பெற்றார். இவரே இந்நூலாசிரியரானதால் இந்நூல் நாற்கவிராசநம்பி அகப்பொருள் எனப் பெயர்பெற்றது. அருக சமயத்தைச் சார்ந்தவர் இவர். உரையாசிரியர் பெயர் விளங்க வில்லை. பதினைந்தாம் நூற்றாண்டினராகிய குலசேகர பாண்டியன் காலமே இந்நூலெழுந்த காலமாக இருக்கலாம் எனக்கருத இடமிருக் கிறது.

---

வரிசை எண். **1099** சுவடி எண். **971 (b)**

## நன்னூல் - உரையுடன்

ஏடுகள் : *117*. ஏட்டின் நிலைமை : மிகமிகப்பூச்சி அரித்த நிலை. பக்கத்திற்கு : *12-13* வரிகள். அளவு : *38 × 4* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *10,000*. ஆசிரியர் : பவணந்தி முனிவர். முழுமை : முழுவதும் உள்ளது.

" எண்ணிய வெண்ணிய வெய்துப கண்ணுதல்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே." -க

" தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவளத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றி
னெஞ்சுபக வெறிந்த செஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
வேம வைக லெய்தின்றா லுலகே." -உ

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
விலகொளி பரப்பி யாவையும் விளக்கு

முடிவு :

" பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே ".

என்னின் இந்நூலிற்கோர் புறனடையுணர்த்திற்று.

இதன் பொருள் : முற்காலத்துள்ள விலக்கணங் களுட் சில பிற்காலத் திறத்தலும் முற்காலத்தில்லன சில பிற்காலத்திலக்கணமாய் வருதலுங் குற்றமல்லவாங் கால வேற்றுமையது வாகலா னென்றவாறு.

இவற்றிற்கு முதாரண முன்னர் வந்துழி வந்துழிக் காட்டிஞ மாங்காங்குணர்க. -உக

ஐந்தாவதுரிச்சொல்லியன் முற்றும்.

" இருதிணை மூவிட நான்மொழி
யைம்பா லறுதொகை யேழ்வழு
வுருவெட் டொன்ப தாகுந்
தொகாநிலை வாய்ந்த வெச்ச
மொருபது கொளெட்டு முப்பொழு
தீரிட மோரி யல்பாய்
வருமொழி மூன்று முணர்க
வண்மை யருந்திருவே "

பொருபா னிரண்டெண் ணுன்கு வினைபோலுந் தானே
ரறுபத் தெட்டிடைதான் மூவேழின் மேலொன்றுவ
யிருபத்தொன்ருகச் சொற் சூத்திரத்தின் விதி
யிருநூற் ... ... தரவேண்டு.

சொல்லதிகார முற்றும்.
நன்னூல் முற்றும்.

திருமலை கொழுந்து விஞயகன் பாதாரவிந்தமே கெதி.
அனவரததான நாயகர் பாதாரவிந்தமே கெதி.
காந்திமதி பாதாரவிந்தமே கெதி.
குமரன் பாதாரவிந்தமே கெதி.
முத்துக்குமாரசுவாமி தேசிகன் பாதாரவிந்தமே கெதி.

**காலம் :- (Colophon)**

ககசுரு௫ மாசிமீ" உயவு சோமவாரம் புணர்பூச நட்செத்திரமுங் கூடின சுபதினத்தில் எழுதி முடிந்தது- திருச்சிற்றம்பலம்.

**குறிப்பு :**

இது இலக்கண வகையைச் சாரும். இது காண்டிகையுரை போன்றதெனினும் பதவுரையாக இல்லை: பொழிப்புரையாக உளது. இதன் பிற செய்திகள் எமது D64-632-ஆம் சுவடி எண்ணில். உள்ளன.

வரிசை எண் : **1100.** சுவடி எண் : **971 (c)**

## தண்டியலங்காரம்.

ஏடுகள் : 59. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பூச்சி யரித்த நிலை. பக்கத்திற்கு : 12-14 வரிகள். அளவு : 38 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 5000. ஆசிரியர் : தண்டியாசிரியர் (தமிழ்த்தண்டி யாசிரியர்) முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

அலங்காரம் முதலாவது பொருளியல்.

"சொல்லின் கிழத்தி மெல்லிய லிணையடி
சிந்தைவைத் தியம்புவல் செய்யுட் கணியே"

என்றது சூத்திரம். இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ வெனின் அணியிலக்கண முணர்த்தினமையி னணியதிகார மென்னும் பெயர்த்து. இவ்வதிகாரத்தின் முதற்கணெத்து அணிபெருஞ் செய்யுட்குமொருசா ரணிக்கு மிலக்கண முணர்த்தினமையாற் பொதுவிலக்கண மென்னும் (பொது வியலென்னும்) பெயர்த்து.

**முடிவு :**

அஃதேல் மாலைமாற்றுஞ் சுழிகுளமுஞ் சருப்பதோ பத்திரமுங் கோமுத்திரியு நான்குமே யன்றே யாண்டாசிரி யனல் வட நூலுரைக்கப்பட்டன. ஒழிந்தன மிறைக்கவி யீண்டுரைத்தன. மிகைபடக் கூறிற்றும்.

பிறவெனினுகா. வொழிந்த 'வொன்றின முடித்த றன்னின முடித்த' லென்னுந் தந்திரவுத்தியா னுரைக்கப் பட்டது. அல்லதூஉம் வடமொழி நூலாதலதனுக்கொரு விகற்பம்பட வுரைத்த விலக்கண மென்பது. 'முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி யழியா மரபினது வழிநூ லாகும்' என்பதாகலின் ஒழிபியன் முற்றும். -நமஅ

வேத வரசு தமிழரசு மெய்வடநூற்
போத வரசு புகழரசு - நீதி
நெறிமரையின் பேரரசு நீடுலகுக் கெல்லா
மறிவரசு கச்சியர சு.

தெண்டியலங்கார முற்றும். குமரன் துணை.

குறிப்பு :

இது இலக்கண வகையைச்சாரும். இதன் பிற செய்திகளை எமது சுவடி எண். D114-710-ம் எண்ணில் காணலாம், இதில் பாட வேறுபாடுகள் காணக்கிடக்கின்றன.

---

வரிசை எண் : **1101** சுவடி எண் : **971 (d)**

## இலக்கணக் கொத்து.

ஏடுகள் : 45. ஏட்டின் நிலைமை : மிகமிகப்பூச்சியரித்த நிலை. பக்கத்திற்கு : 12-13 வரிகள். அளவு: 38 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 4000. ஆசிரியர் : சுவாமிநாத தேசிகர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

இலக்கணக் கொத்து.

" தேக பந்தந் தீர்ந்தருள் பெறவே
யேக தந்த னிணையடி பணிவாம். " -க

" கற்றைச் செஞ்சடைக் கண்மூன் றுடையானை
யொற்றைச் செங்கதிர் வேலனை யுள்குவாம். -உ

முடிவு :

" இலக்கண மிலக்கிய முரையெனப் பெயர்பட்
டிருக்குமென் றெண்ணுக செய்யுளி னியல்பே. "

இலக்கனமுமுரையுஞ் செய்யுளாமோவெனிற் சூத்திரங் குறித்த யாப்பிற்றாகும். பலவகைத் தாதுவின் நூற்பா வகவலெனப் பலரு மொழிதலானுஞ் சூத்திரமுஞ் செய்யு

ளாதலினென நச்சினார்க்கினியாரெழுதலானும் விதித்தன செய்தலும் விலக்கியனவொழிதலும் பொருப்பு வில்லிபால் விருப்பமில் லோயென வாசகங்களைச் செய்யுளுறுப்புத் தோன்ற வெழுதலானு முண்டான்றின்னானோடினான் பாடினா னென வுதாரணங்களை யவ்வுறுப்புத் தோன்ற வெழுதலானு மிலக்கணச்செய்யு ளிலக்கியச்செய்யு ளுரைச்சூத்திர மெனப் பலரு மாளுதலானும் வடநூலாரு மிவ்வாறு கொள்ளுத லானு மின்னும் பலவாற்றானுமென்க. செய்யுளென்னுஞ் சொற்குப் பொருளொர்ந்துமுணர்க. -சடு

மூன்றுவதொழிபியல் முற்றும்.

நமசிவாயமூர்த்தி சகாயம். பாயிரம் ய௲. வேற்றுமை யியல் ௫௲. வினையியல் உ௰உ. ஒழிபியல் சய௫. ஆக சூத்திரம் ௱கஉ.

குறிப்பு :

இது இலக்கண வகையைச் சாரும். இந்நூலாசிரியர் ஈசான தேசிகர் என்ற வேறு பெயர் கொண்டவர். இதில் வேற்றுமையியல், வினையியல், ஒழிபியல், என்ற மூன்று இயல்களும், பாயிரமும், உள்ளன. தமிழிலக்கணம், இலக்கியம், அவற்றின் உரைகள் இவற்றில் காணப்படும் அரிய பெரிய செய்திகளைத் தொகுத்து இயற்றப்பட்டதாகலின் இதற்கு "இலக்கணக் கொத்து" எனப் பெயருண்டாயிற்று, இது அச்சிடப்பட்டுள்ளது.

வரிசை எண் : **1102** சுவடி எண் : **963**

## நேமிநாதம் உரையுடன்

ஏடுகள் : 100. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பூச்சியரித்த நிலை: பக்கத்திற்கு : 10-11 வரிகள். அளவு : 20 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 4000. ஆசிரியர் : குணவீரபண்டிதர் (நேமிநாதர்). முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" பூவின்மேல் வந்தருளும் புங்கவன்தன் பொற்பாத
நாவிஞ ஞனு நவின்றேத்தி - மேவுமுடி
வெல்லா முணர வெழுத்தி னிலக்கணத்தைச்
சொல்லா லுரைப்பன் ஞெருகுத்து." -க

என் எனின் எந்நூ லுரைப்பினு மந்நூற்குப் பாயிர முரைத்தே நூலுரைக்கப்படு வென்ப ஆகலின் பாயிர முரைத்தே நூலுரைக்கப்படுமென்க. பாயிரமென்பது முகவுரை. அப்பாயிரந்தான் பொதுவுஞ், சிறப்புமென இருவகைப்படும். அவற்றுள் பொதுப்பாயிரமென்பது எல்லா நூன்முகத்தானு மின்றியமையாதது.

முடிவு :

இங்காராயப்படாத சொற்கள் வழக்கினில் வந்தன வுளவெ லவற்றையும் இந்நூலுளடக்குவா யறிந்தடக்கிச் சொல்லுக வென்றவாறு.
என்,

" கிளக்க வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்த வற்றியா லுணர்ந்தன கொள."
வென்ருராகலின் - -எக.

ஒன்பதாவது எச்சமரபு முற்றும்.

தொல்காப் பியக்கடலுட் சொற்றீவிற் சுற்றளக்கப்
பல்காற்கொண் டோடும் படகென்னப் - பல்கோடி
கோமிகா மற்புலனே வெல்லுங் குணவீர
நேமிநா தத்தி னெறி.

நேமிநாதம் முற்றும்.
சாலிவாடீசுவர காந்திமதீசுவரி சகாயம்.

குறிப்பு :

இது இலக்கண வகையைச் சாரும். இதில் ஒன்பது அதிகாரங் களும் உரையுடன் உள்ளன. இதனைச் சின்னூல் என வழங்குவர். இதன் ஆசிரியராகிய குணவீரபண்டிதருக்கு நேமிநாதர் என மற்றொரு பெயரும் உண்டு. தொண்டை நாட்டுக் களந்தையம்பதி

யைச்சேர்ந்தவர். அமண் சமயத்தினர். இவரது ஆசிரியர் வச்சணந்தி தேவராவர். காலம் 12-ஆம் நூற்றூண்டு. வெண்பாப்பாட்டியலேயும் இவரே இயற்றியுள்ளார். இது உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது. இச்சுவடி தொடர்ந்து படிக்க இயலாதவாறு பூச்சிகள் அரிக்கப் பட்டுளது. பாடவேறுபாடுகள் உள்ளன.

---

## கணிதம்

வரிசை எண் : **1103** சுவடி எண் : **734**

### கணக்கதிகாரம்

ஏடுகள் : 73. ஏட்டின் நிலைமை : சில ஏடுகள் பூச்சியரித்துக் காணப்படுகின்றன. பக்கத்திற்கு : 6 வரிகள் அளவு : 34 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1300. ஆசிரியர் : காரி. முழுமை : முழுவதும் இல்லே.

தொடக்கம் :

" இக்கணக்கி லொன்று மிடையூறு வராமற்
பொர்க்கணவன் பெத்த புதல்வனே - யிக்கணக்கில்
நேரே விளங்கி நிகரன்றி நிற்குமாம்
பாரே விளங்குமாம் பார்."

" தவளத் தாமரைத் தாதார் கோவி
லவளைப் போற்றுது மருந்தமிழ்க் குறித்தே"

சீர்படைத்த வுந்திச் செழுங்கமலத் தயவாகப்
பார்படைக்க வென்று படைத்தருளுங்-கார்படைத்த
வோதமா மேனி யுறுவோ னுலகளந்த
பாதமே யாங்கெம்க்குப் பற்று
ஆதி மூற்தி அனந்த சயனன் புண்டரீக புருஷோத்தமன் பற்மனுபன் பவித்திர மூர்த்தி சாரங்கபாணி ஸ்ரீபாத பங்கயங்களே நமஸ்கரித்தோ மென்றவாறு. -க

முடிவு :

சந்திரகிரி ஆணிக் கோர்வை ஆனி ச ஞூ க புள்ளி டிசவ க்கு மாத்து புள்ளடியும் மேல்ப்புள்ளியும் க ச ஞூ புள்ளடியு மேல்புள்ளியும் உசஞூ மாத்துக்கு ரு புள்ளடியும் மேற்புள்ளி நடுவ மாத்துக்கு ரு வெட்டு மாத்துக்கு ரு வெட்டு மேற்புள்ளி க க்கு மாத்துக்கு ஞூரு வெட்டும் மேற் புள்ளி உருஞூ மாத்துக்கு ரு வெட்டும் மேற்புள்ளி நகூ மாத்துக்கு ... ..., ... ... ... ... ...

குறிப்பு :

இந்நூல் கணித சாத்திரங்களில் ஒன்ருகும்.

ஆரிய மொழியி லந்தண னுரைத்த
சீரிய லிலக்கத் திண்ணிய கணக்கைப்
பாரினில் தமிழா(ற்) பரிவுட னுரைப்பத்
துரியறக் கெதிரே சுடர்விடு விளக்கே

என்ற நான்காவது செய்யுளால் பிரம்மாவிஞல் ஆரிய மொழியில் இயற்றப்பட்டதைக் கணக்கதிகாரமென்ற பெயரால் தமிழில் காரி என்பார் இயற்றியுள்ளார் என்பதாகிறது. காரி என்பார் பொன்னி நாட்டில் முகரியம்பதியில் பிறந்தவர். கொறுக்கையர் மரபினர். பிழைகள் மலிந்து கிடக்கின்றன.

---

வரிசை எண் : **1104.** சுவடி எண் : **736 (a)**

## கணக்கதிகாரம்.

ஏடுகள் : *148 (1—148).* ஏட்டின் நிலைமை : பூச்சி யரித்த நிலையில் உள்ளது. பக்கத்திற்கு 5 - 7 வரிகள். அளவு : *45 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண் ணிக்கை : *4000.* ஆசிரியர் : காரி நாயனர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

விசுமில்லா கிற்றகிமா னிற்றகீம்.

யிக்கணக்கி லொன்று மிடையூறு வாருமற்
பொக்கணவன் பெற்ற புதல்வனே - யிக்கணக்கில்

நேரே விளங்கி நிகரன்றி நிற்குமாம்
பாரே விளங்குமாம் பார்.

"சீர்படைத்த வுந்தி செழுங்கம லத்தயனை
பார்படைக்க வென்று படைத்தருளுங் - கார்படைத்த
வேதமா மேனி யுரவோ னுலகளந்த
பாதமே யாங்கெமக்குப் பற்று."

முடிவு :

"ஆச்சரியம் தென்னமரம் அத்தனையும் குத்துமுலை
காச்ச தென(க்)குடந்தைக் காராளா - வாச்சதமிழ்
கும்பையா நீவந்து கூடாத னுளெல்லாம்
தக்குமே காம சாரம்."

"மகப்பட்ட தண்டலையின் வெண்பருந்தின் காலில்
அகப்பட்ட கோழிக்குஞ் சானேன் - மிகப்பெருத்த
கல்லையோ கைதொழுதோம் காக மணுகாமல்
யில்லையோ ரத்தினகிரி யீசா."

"ஏசுமுற வில்யிடா நின்று யெதிர்நின்று
பேசு மனயாளில் பேயிநன்று நேகமுல்லா
வங்கணத்தில் நன்று வலியபவை வாழ்குவில்லாச்
சங்கடத்தில் சாறுவதே நன்று."

குறிப்பு :

இது கணித சாத்திரங்களில் ஒன்று. இது 734-ம் எண் உள்ள சுவடியைப் போன்றது.

---

வரிசை எண் : **1105** சுவடி எண் : **736 (b)**

## வருஷ பலன்.

ஏடுகள் : 5 (149 - 153). ஏட்டின் நிலைமை : பூச்சி யரித்த நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 5 - 7 வரிகள்.
அளவு : 45 × 3 செ. மீ. எழுத்து : தமிழ்.

கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : அறியக்கூடவில்லை.
முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

பிரமாதி வருஷம் விசேஷமாயி மரணமுண்டு. ராசாக்களுக்குச் சாவுண்டு. பண்டங் குரையும். மழை மத்திபம். யெல்லாங் கெடும். சறுவ வார்த்தையுமுண்டு. துக்கங்களுண்டு.

விக்கிரம வருஷம் கலகமுண்டு. மழையற்பம். யெல்லாப் பிராணிகளுக்கும் உப்பசமாம். ராச்சியத்துக்குப் பயமுண்டு.

முடிவு :

ஷெய வருஷம் இரண்டுகால்ச்சீவன் நாலுகால்ச்சீவன் இதுக்குள்ளானதெல்லாம் பிறக்கும். சறுவ சபைக்குங் கேடு. பூமியிலுள்ள தானியத்துக்கும் அன்னமரிதாய் முறத்திலடங்கும். வேடுமீனுங்கு மகள்ள பண்டாயெழுந் திருந்து கலப்பையாயடங்கும். கோபமும் விரோதமுந் துக்கமும் மனசிலே காட்டும். கறுவகெடும். ஷய வருஷம் காட்டும். இப்படி வருஷகாலம் அறிந்து கொள்ளுவது.

யி வருஷபலம் முற்றும்.

குறிப்பு :

பிரபவ முதல் பகுதான்ய முடிய உள்ள இவ்வருடங்களுக்குப் பலன் கூறப்படவில்லை. பிரமாதி முதல் அக்ஷய முடிய உள்ள ஆண்டுகளின் பலன்கள் கூறப்பட்டுள்ளன. இடையில், பராபவ, பிலவங்க ஆகிய இரண்டு வருடங்களின் பலன் கூறப்படவில்லை.

வரிசை எண் : 1106 சுவடி எண் : 930

## கணக்கதிகாரம் - உரையுடன்

ஏடுகள் : 118. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. ஓரங்கள் சிறிது எலி கடித்துள்ளன. பக்கத்திற்கு : 5-6

வரிகள். அளவு: 26 × 3 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 1600. ஆசிரியர்: காரி. முழுமை: முழுவதும் இல்லை.

**தொடக்கம்:**

அரிஓம் நன்ருக குருவே துணை.

" இக்கணக்கி லொன்று மிடையூறு வாராமல்
முக்கணற்தம் பெற்ற முதல்வனே - இக்குமொழி
கானக் குறவள்ளி காவலர்க்கு முன்வந்த
ஞான முகனே அருள் ".

" நந்தி முகன்றனை ஞானக் கொழுந்தனை
புந்தியில் வைத்தடி போற்று கின்ருேமே.

இந்தக் கணக்கதிகாரம் திருவடி தேசத்திலே பிறந்து பெரியோர், சிறியோர், யாவரும் பாற்க வேணுமென்று பொற்கணவனென்று ஒரு ஞானியாருடம் பிச்சது... ...

**முடிவு:**

குருக்கமது மூணுக்கு கொற்றவனே தீப்பணம்
பெருக்கமுடன் ஏழாகும் பின்னுமதில் - சுருக்கமா
ஒண்ணே அரைக்கால் குருக்கல் உழுபவர்க்கு
திண்ணமுடன் இன்னதென்று செப்பு.

குப்பமொன்றில் நாலு குடிாஉயப தாகும்பொன்
செப்பமுடன் பங்கிடுதல் செப்பென்ருல் - தப்பறவே
இரண்டி லொன்றுநாலு யெட்டிலொன்று ஆரு
திரண்டபொன்னை நீதெளியச் செப்பு.

**குறிப்பு:**

இது கணித சாத்திரங்களில் ஒன்று. பிற கணக்கதிகாரத்திற்கும் இதற்கும் வேறுபாடு காணப்படுகின்றது. பல நல்ல கணக்குகள் உள்ளன. இந்நூல் இதில் முற்றுப்பெற்றதாகத் தெரியவில்லை.

## நீதி நூல்கள்

வரிசை எண் : **1107** சுவடி எண் : **859**

## உலகநீதி

ஏடுகள் : 7. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு: 4 வரிகள். அளவு : 37 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : உலகநாதன். முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

### காப்பு

" உலக நீதிப் புராண முரைக்கவே
கலைக ளாயிரங் கணபதி காற்பையே
அலைவி லாமல் அடியனை யாட்கொள்வாய்
மலைவள ரிளமுலை வள்ளிபங் காளனே. "

### நூல்

" ஓதாம லொருநாளு மிருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாப்புச் சொல்ல வேண்டாம்
மாதாவை புறங்கணித்து வாழ வேண்டாம்.
வஞ்சனைகள் செய்வாரோ டிணங்க வேண்டாம்,"

**முடிவு :**

" வேதனுக்கும் நாதனுக்குங் குருவான மூர்த்தி
வெள்ளானை யுவந்தளித்த தெய்வானை கேள்வன்
.மாதவர்க்கு மருமகனும் வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்த வேண்டி. "

" ஓதி வைத்த வாத்தியா ருலகநாதன்
உண்மையாய்ப் பாடிவைத்த உலக நீதி
காதலுற்று கருத்துடன் கேட்டிருக்க வல்லோர்
கருத்துடனே கயிலாசம் பெறுவார் கண்டீர். " -ழக

**காலம் :** (Colophon)

கOஅய ௵ விசுவாவசு௵ சித்திரை மாதம் உசதேதி முற்றிற்று.

**குறிப்பு :**

காப்புச் செய்யுளை அடுத்து "அருணசலபிள்ளையவாள்" குமார்த்தி தங்கம்மாள் வாசித்து வருகிற சுவடி. நன்ருக என்றுளது. சுருக்கமாக நீதிகளைப் புகட்டும் இந்நூல் முருகக் கடவுளை முன்னிலைப் படுத்திக் கூறும் ஈற்றடிகளையுடையது. பத்துப் பாடல்களைக் கொண்டது. அச்சிடப்பட்டுள்ள நூலுக்கு மிதற்கும் பாட வேறு பாடுகள் பல காணப்படுகின்றன.

---

வரிசை எண் : **1108** சுவடி எண் : **762**

## கொன்றைவேந்தன்

ஏடுகள் : 6. ஏட்டின் நிலைமை : மிகமிகச்சிதிலம்
பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 37 × 2 செ. மீ.
எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 60. ஆசிரியர் : ஔவையார். முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

ஹரி ஓம். நன்ருக. குருவாழ.
கொன்றை வோதம் செல்வநடியினை
யென்றே மேத்தித் தொளுவோம் நாமே.

அன்னையும் பிதாவும் முன்னிறு தெயிவம்
ஆலையந் தொளுவது சாலவு நன்று
இல்லற மல்லது நல்லற மல்லா
ஈய்யார் தோட்டம் தீய்யார் கொள்வார்

**முடிவு :**

வொத்த விடத்தில் நித்திரைக் களகு
வோதார்க் கில்லை வுணர்விடை யொழுக்கும்.
அறக்ரு அவ்யர் அறளிச்செயிதல் நீதிச்சொல்
... ... ... ... மூஞ்சது முஸ்த்தது

குறிப்பு :

இது நீதிநூல்களுள் ஒன்று. ஔவையார் இயற்றிய நீதிநூல்களுள் இது ஒன்றாகும். இது உரையுடன் அச்சிட்டிருப்பினும் பாட வேறுபாடுகளும் பிழைகளும் அதிகம் காணப்படுகின்றன.

இதன்பின் ஆத்திச்சூடி எழுதிய ஏடுகள் 5 சேர்க்கப்பட்டுள்ளன. அது மிக மிகச் சிதிலமாக உள்ளது. இந்நூலும் ஔவையார் இயற்றிய நூல்களில் ஒன்று. இதுவும் உரையுடன் அச்சிடப் பட்டிருக்கிறது. இதிலும் பாட வேறுபாடுகளும் பிழைகளும் மலிந்து கிடக்கின்றன.

வரிசை எண் : **1109** சுவடி எண் : **735**

## திருக்குறள் (மூலம்)

ஏடுகள் : 67. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும், சிதிலமாகவும் உள்ளது. பக்கத்திற்கு : 10 வரிகள். அளவு : 27 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1600. ஆசிரியர்: திருவள்ளுவர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" ஒள்ளியசீ ரைந்துகரத் தொற்றைக்கொம் பாவெனவே
வள்ளுவர்நூ னன்றாய் வரும்".

"ஆயிரத்து முன்னூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தினொடு பகர்வீரேற் - போயொருத்தர்
வாய்க்கேட்க வேண்டுமோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீத்திருக்கலாம்".

வாலசரசுபதிமுன்நிற்க.

நூல்

" அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு ".

முடிவு :

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.
ஊடுதல் காமத்துக் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.

திருவள்ளுவர் குறள் முடிந்தது.

சிவமயம்.

குறிப்பு :

இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. "திரு" என்னும் அடைமொழியோடு குறட்பாவால் இயற்றப்பட்டிருப்பதால் இதற்குத் திருக்குறள் என்னும் பெயருண்டாயிற்று. நீதிகளைக் கூறும் இந்நூலை இயற்றியவர் திருவள்ளுவர். தெய்வப்புலவராகிய இவருக்குப் பத்துப் பெயர்கள் உண்டு. இந்நூலுக்கும் பத்து வேறு பெயர்கள் உண்டு. அதிகாரத்துக்குப் பத்துப் பாக்கள் வீதம் 133 அதிகாரங்களைக் கொண்ட இந்நூல் 1330 குறட்பாக்களை யுடையது. அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என மூன்று பகுதிகளாகவுடையது. இல்லறவியல், துறவறவியல், அரசியல், அங்கவியல், ஒழிபியல், களவியல், கற்பியல் என்ற ஏழு இயல்களையுடையது.

திருவள்ளுவர், திருமயிலையில் வள்ளுவர் மரபிற் பிறந்து, வாசுகியம்மையாரை மணந்து நெசவுத்தொழில் செய்து இல்லறம் நடத்தி வந்தார். இவர் சங்க காலத்தவர் என்று கூற இடமிருக்கிறது. இவர் நூலுக்குப் பத்துப் பேர் உரை செய்திருப்பினும் அவற்றுள் பரிமேலழகர் உரையே மிகச் சிறந்ததாகக் கொள்வர் பலர். இது அச்சிடப்பட்டிருக்கிறது. சற்று சிதிலமாக உள்ளது. இந்நூல் ஒரு பக்கத்திற்குப் பத்து குறட்பாக்களாக எழுதப் பட்டுள்ளது.

வரிசை எண் : **1110.** சுவடி எண் : **902.**

## திருக்குறள் – உரையுடன்.

ஏடுகள் : 115. ஏட்டின் நிலைமை : நல்லநிலை: பக்கத்திற்கு 9 - 10 வரிகள். அளவு : 32 × 3 செ, மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 4,000. ஆசிரியர் . திருவள்ளுவர். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு."

என்பது அகரஞதமே உயிரெழுத்துப் பனிரெண்டு, மற்ற எழுத்துக்கெல்லாம் நிறைந்திருக்கு முரைமைபோலே அதிக பகவாஞன திருவுளம் சகல உயிர்கள் சருசரங்கள் உலக முதலானவைக் கெல்லாமொருதனே நிரம்பிப் பூரணமா யிருப்பானென்றவாறு." -க

**முடிவு :**

"பெரும் பொருளாற் பெட்டகத் தாகி யிருங்கெட்ட
நாற்றம் விளைவது நாடு."

என்றது குடிகளுக்கு ஏதேனுமகலாபவந்துகெட்டபோதி னும் அதிக செல்வம் பெருவதாக முழு விளைச்சல் எக்காலமும் கொடுக்கும், நாடு குடி நாட்டார் செல்வ நாடு என்றவாறு." -எ

**குறிப்பு :**

இந்நூலில் மொத்தம் 737 குறட்பாக்களே உரையுடன் உள்ளன. உரை இன்னருடையதென அறியக்கூடவில்லை. அச்சிடப்பட்டிருப்ப தாகவும் தெரியவில்லை: கடைசியில் ஒரு ஏட்டில் திருவள்ளுவ மாலை எழுதப்பட்டுள்ளது. கயிலாசசுந்தரந் துணை என்று கூறப்பட்டுள்ள தால் இது சைனர் உரையினும் வேருயது எனக்கருத இடமுளது. குறட்பாக்கள் இடம் மாறியுள்ளன; பாடபேதங்கள் மிகுந்து காணப் படுகின்றன.

வரிசை எண் : 1111 சுவடி எண் : 891 (a)

## நீதிசாரம் (உரையுடன்)

ஏடுகள் : 30. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது, ஓரங்கள் ஒடிந்துள்ளன. பக்கத்திற்கு : 8-9 வரிகள். அளவு : 22 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 900. ஆசிரியர் : மூக்கப்பன். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"அனைத்துல கெங்குந் தானுய் மாரதன் தேவனுகி
நினைத்தவ ருளத்தில் நித்தம் நெஞ்சமாய் நெடுமால்பாக
மனத்தினி லிருத்தி முன்ன மறைவல்லோ ருரைத்த நீதி
யினத்தினில்த் திரட்டி யுள்ள சாரம்நா னியம்ப
லுற்றேன்," -க

முடிவு :

"ஏர்பெறு நீதி சார வியல்பினைக் கற்போர் கேட்போர்
பார்பெறு மன்ன ராகிப் பரிவுடை மனத்த ராகித்
தார்பெறு மடவார் மைந்தர் தம்முடன் தளைத்தென்-
ஞளுஞ்
சீர்பெறு செல்வ முண்டாய்த் தினந்தொறும் வாள்வர்
தாமே." கூஅ

நீதிசார முற்றும்.

தேவி சகாயம்.

குறிப்பு :

எமது சுவடி எண் 354- நீதிசாரத்தினின்றும் சிறிது வேறுபட்டதாகத் தெரிகிறது. நீதிநெறிகளை விருத்தப்பாவினுல் உரைப்பது. 98 செய்யுட்கள் உள்ளன. 100 செய்யுட்களுடன் இதேநூல் வேறு சில மாற்றங்களுடனும் இருப்பதாகத் தெரிகின்றது.

---

வரிசை எண் : **1112** சுவடி எண் : **891 (b)**

## ருது சாத்திரம்

ஏடுகள் : 6. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும், முரிந்தும் உள்ளது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 22 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100 ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

பட்டது ஒரு துளி ரெத்தம் பட்டிருந்தால் பெண்ணே பெருவாள். ரெண்டு துளி பட்டிருந்தால் ஆணே பெருவாள். சிதறியிருந்தால் மலடியாவள். வெறுவயத்தில் கண்டால் வெகு தரித்திரத்தையடைவாள். அசனம் பண்ணினபிறகு கண்டால் நன்ருய் வாழ்ந்துண்டிருப்பாள்.

**முடிவு :**

ராசி பலன்

மேஷம், ரிஷபம், மிதுனம், மகர, கடகம் வாழ்ந்துண்டிருப்பாள். சிங்கம், கன்னி பல புருஷரை இச்சிப்பவள். துலாம் அனேகம் பிள்ளைப் பெறுவள். விரிச்சிகம், பலத்திரியாவள். தனுஷ, மகர, கும்ப, மீனம் பத்தாவை வேண்டி நெறுமையாயிருப்பள்..

ராசி பலன் முற்றும்.

வீரவிஞயகன் துணே.

**குறிப்பு :**

இது பெண்கள் பூப்பெய்தும்போது உண்டானவைகளைக் கொண்டு கூறும் சோதிடநூல். சிறந்த நூலாகக் காணப் படுகின்றது. பிழைகள் அதிகம்.

வரிசை எண் : **1113.** சுவடி எண் : **968.**

## நீதி வெண்பா (அ) நீதிசாரம் (உரையுடன்)

ஏடுகள் : 23. ஏட்டின் நிலைமை : மிகவும் பூச்சியரித்தநிலை ; ஏடுகள் முறிந்துள்ளன. பக்கத்திற்கு 9 - 10

வரிகள். அளவு : 25 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 800. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இருக்கிறது.

தொடக்கம் :

"மூதுணர்ந்தோ ரோதுசில மூதுரையைப் பேதையேன்
நீதிவெண்பா வென்று நிகள்த்தினேன் - நாதிபரம்
வாமான் கனதன் மணியுதரம் பூத்தமுதல்க்
கோமான் பெருங்கருணைக் கொண்டு."

" தாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசினைபால்
பூமருதேன் பட்டு புழுகுசவா - தாமழல்மற்
றெங்கே பிறந்தனவென் றெண்ணீரோ நல்லோர்கள்
யெங்கே பிறந்தாலு மென்."

என்பது சேத்திலே உற்பத்தியாகிய தாமரையும், பூமியிலே உற்பத்தியாகிய பொன்னும், சிற்பியிலே உற்பத்தியாகிய முற்றும், கமரிமான் மயிராகிய சவரமும், மாட்டின் வயத்தில் உற்பத்தியாகிய கோரோசினையும்,பசுவின் வயத்திலுற்பத்தி யாகிய பாலும், தாளையிலுற்பத்தியாகிய பூவும், இய்க் கூட்டிய தேனும், வண்டு சுத்திய நூல்ப்பட்டும், நாவிப் பிள்ளை பீசத்தில் யளிக்கப்பட்ட புழுகும், சவாதுப்பிள்ளை பீசத்தில் அளிக்கப்பட்ட சவாதும், காட்டகத்திலே பிறந்த அக்கினியும் யிதுகளெல்லாம் நசித்தமான யிடத்திலே பிறந்து மேன்பாட்டை யடைதல்போலே பெரியோர்க ளெங்கே பிறந்தாலு மேன்மையன்றி தாள்வுபடார்க ளென்றவாறு.

முடிவு :

" வானிருந்த ... ... யொனமதித ... விரும்புமே
தேனிருந்த ... ... ... ,... ... ...
நேசனை ... முலவிரும்பாரே நீடுபல
யோசினைதூ ரத்திருந்தா லும்" என்பது

நல்லோர்கள் ஒருதனுடனே சினெகிற்றுல் அந்தச் சினேகிதம் பிராண பரியந்தம் விடார்கள். அதென்

போலேவே தாமரைக்குஞ் செங்கழு நீருக்கும் சூரிய பகவான் மண்டலத்துக்கும், சந்திர பகவான் மண்டலத்துக்கும் வெகுதூரம். சூரியகாந்தியுஞ், சந்திரகாந்தியுங் கண்டவுடனே தாமரைப்பூவும் செங்கழுநீர்ப் பூவும் மலரும். அப்படி போலே நல்லோர்கள் யெங்கேயிருந்தாலும் எத்தனை குத்தஞ்செய்தாலும் நட்பு விடார்களென்றவாறு. -ாக

குறிப்பு :

ஏட்டு எண்ணிக்கை தெரியாவண்ணம் ஓரங்கள் ஒடிந்தும், ஏடுகள் மிகமிகச் சிதிலமாகவும் உள்ளன. இது எமது 376-ம் எண் சுவடி போன்றது. இதில் 101 செய்யுட்களும் உரையுடனிருப்பினும் பாடவேறுபாடுகளும், பிழைகளும் மலிந்து காணப்படுகின்றன. உரை வேறுபாடு காணப்படுகிறது. உரையாசிரியர் பெயர் முதலியன தெரியவில்லை.

---

வரிசை எண் : **1114.** சுவடி எண் : **815 (a)**

## வாக்குண்டாம் (உரையுடன்)

ஏடுகள் : 28. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 27 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 600. ஆசிரியர் : ஔவையார். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

“ வாக்குண்டாம் நல்ல மனமுண்டா மாமலரா
நோக்கொண்டார மேனி நொடுங்காது - பூக்கொண்டு
துப்பா திருமேனித் தும்பிகை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு.

முடிவு :

” சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
ஆந்தனையுங் காப்ப ரறிவுடையோர் - மாந்தர்

குரைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம்."

என்றது யெழுவாய் - அறிவுடையோர். ப-லை - காப்பர் - சௌ - அவரை செய்திடினும். இதினுள்ள உம்மை இறந்தது தழீ இயதனோடு இழிவு சிரப்பும் ஆம். சாந்தனை யும், ஆந்தனையும், குரைக்குந்தனையும் இவற்றிலுள்ள உம்மை முற்றுப்பொருளோடு உயர்வு சிரப்பும் ஆம் - ஏ-பிரிநிலை. ஆம், கண்டீர் என்னும் இரண்டசை நிலைகளில் பின்னது முன்னிலைக்குறியது.

வாக்குண்டாம் பதவுரை முற்றிற்று.

குறிப்பு:

இந்நூல் ஔவையார் இயற்றிய நூல்களில் ஒன்றாகும். இது மூதுரை எனவும் வழங்கப்படும். 30 செய்யுட்கள் உரையுடனும் இலக்கணக் குறிப்புடனும் காணப்படினும் பிழைகள் மலிந்து காணப் படுகின்றன.

---

வரிசை எண் : **1115** சுவடி எண் : **815 (b)**

## ஔவையார் சரித்திரம்

ஏடுகள் : 5. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 27 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 120. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

முறுக்கையன் துணை.

ஔவையார் சரித்திரம்

பாண்டியர் அரசாட்சி செய்துகொண்டு வந்த மதுரைமாநகரில் கடைச்சங்கமிருந்த காலத்தில் ஔவை யார் சோழ தேசத்தில் உறையூரென்னும் பட்டணத்தில் ஓர் சாவடியில் ஆதி என்பவளுக்கும், பகவனென்பவருக்கும்

முதற்புத்திரியாகப் பிறந்து. அத் தாய் தந்தையர்களுக்குள் ஏற்பட்டிருந்த உறுதிமொழிப்படி பிறந்த குழந்தையைத் தாய் விட்டு நீங்க மனம் பொறுமல் வருந்தியபோது சொல்லிய வெம்பா.

"இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானே - முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவனுக் கண்ணாய்
நெஞ்சமே லஞ்சாதே நீ.

முடிவு :

"மதுர மொழிநல் லுமையாள் புதல்வன் மலர்ப்பதத்தை
முதிர நினையவல் லார்க்குமுண் டோமுகில் போன்முழங்கி
அதிர நடந்திடும் யானையும் தேரும் தன்பின்வருங்
குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே."

ஔவையார் சரித்திரம் முற்றிற்று.
விநாயகர் துணை. சிவமயம்.

குறிப்பு :

ஔவையைப் பற்றிய பல கதைகள் பரம்பரையாக நமது நாட்டில் வழங்கி வருகின்றன. அதிக அற்புத சக்தி வாய்ந்த ஒரு நெல்லிக்கனியைத் தின்று அவள் நெடுங்காலம் வாழ்ந்தாள் என்றும், மற்றும் கதைகள் இருக்கின்றன. இவர் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி என்னும் நீதிச் செய்யுள் நூல்களை இயற்றியுள்ளார். இருப்பினும் இவரைப்பற்றி பல விவாதங்கள் இன்றும் இருந்துகொண்டுள்ளன. இந்நூல் இப்பிரதியில் முழுவதும் உள்ளது. அச்சிடப்பட்டுள்ளது. இதன் பின்னர் வேறு இரண்டு ஏடுகள் உள்ளன. ஒன்று நீதி சதகம், ஒன்று தேவி ரூப வலங்காரம் என்றுளது.

## பிரசித்த காவியங்கள்.

வரிசை எண்: 1116 சுவடி எண் : 749

## அரிச்சந்திரன் கதை - மயான காண்டம்

ஏடுகள் : 30. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது.
பக்கத்திற்கு : 6 - 7 வரிகள். அளவு : $19 \times 3$ செ. மீ.

எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : தெரியவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

" வல்லியு மகனு மந்த மறையவன் மனையிற் சேர்ந்து
சொல்லிய பணிக ளெல்லாஞ் சோர்வறச் செய்த பின்ன
ரெல்லியோர் சாம மென்ன எழுந்திருந் தெவ்வ முற்றி
யல்லிரண் டியாமஞ் சென்று லளித்தகூ ளுண்டு றங்கும். -க

**முடிவு :**

முன்ன வினையா லும்வினை முற்றுவதி னாலு
மென்ன பலபே சுவதிவ் வேளை யடிமீதே
பின்னை யடிவந்த துளவேர் பிறுதி யென்ன
இன்னொடி யில்வந் திடுமெனச் சிலரை விட்டான். -கூக

**குறிப்பு :**

அரிச்சந்திரன் கதை; மயானகாண்டம் எனும் இந்நூல் அபூர்த்தியாயுள்ளது. 36 செய்யுட்களைக்கொண்ட 10 ஏடுகளும், 91 செய்யுட்களைக்கொண்ட 20 ஏடுகளுமாயுள்ளன. முன்னைய 36 செய்யுட்களும் பின்னருள்ளதில் 36 செய்யுட்களாக இருக்கின்றன. பிழைகள் அதிகம்.

---

வரிசை எண் : **1117** சுவடி எண் : **816**

## நளவெண்பா.

ஏடுகள் : 47. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் எலி கடித்துள்ளன. பக்கத்திற்கு : 5 - 6 வரிகள். அளவு : 26 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 750. ஆசிரியர் : புகழேந்திப் புலவர். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

" முன்னம் நழன்கதையை முன்னூற் கலையிலிடப்
பொன்முகனைக் கைமுகனைப் போற்றிடு — முன்னம்
வருகாலஞ் செலகாலம் நீள்கால மூன்று
மொருகாலம் வாரான் கலி."

முடிவு :

" தீது கலிமுன்னஞ் (செய்)தவனைச் சென்றுணர
யேது வேனய மியம்பென்னச் - சூதாட
மையாளி யிற்றுயிலும் (மா)னையரன் வன்மையுடன்
கையாளி வைய்த்தான் களித்து." -சாஉஎ

காலம் :- (Colophon)

. . . . ஆவணிமீ 14-ந் தேதி நாயிற்றுக்கிழமையும் ஆதித்த சுராமும் பெற சுபயோக சுபதினத்தில் நளன் சரிதம் எழுதி முகித்தென எளுதியது.

குறிப்பு :

இந்நூல் மிகவும் ஓரத்தில் சிதைந்தும், பூச்சியரித்தும் உள்ளது. 18-ஆம் ஏட்டிற்குப்பின் 39-ஆம் ஏடு காணப்படுகின்றது. இடையில் 20 ஏடுகள் காணப்படவில்லை. அச்சிடப்பட்டுள்ளது.

---

வரிசை எண் : **1118.** சுவடி எண் : **904**

## நைடதம் (உரையுடன்)

ஏடுகள் : 235- ஏட்டின் நிலைமை : சற்றே பூச்சி யரித்துளது. பக்கத்திற்கு : 9 – 10 வரிகள். அளவு : 32 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 10,000. ஆசிரியர் : அதிவீரராமபாண்டியர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

காப்பு

" தளைவிரி கடுக்கை மாலை தனிமுதற் சடையிற் சூடுங்
குழவிவெண் டிங்க ளிற்ற கோட்டது குறையென்
- றெண்ணிப்
புளைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புர விளைத்து நோக்கு
மனைமத களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம்.

என்றது தளைந்து விசாலம் பொருந்திய கொப்புகளை யுடைத்தான கொன்றைமாலையை யணிந்த வொப்பில்லாத

வஷ்துவாகிய சிவனுடைய சடாமகுடத்திலே தரித்த விளமை பொருந்திய வெள்ளை நிறமான சந்திரனை முன்பு பாரத கதை யெழுதுகிர , . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . .

முடிவு :

விரியிருள் சீய்க்குங் கற்றை வெண்ணிறக் கவரி வீச
வெரிமணி அடப்பை தாங்கி இன்னமை மகளீற் பெற்ற
பரிசிலைத் துமணியொழவர் கெடகம . . . , . . -ாா

குறிப்பு :

இது எமது 177-ம் எண்ணுள்ள சுவடி போன்றது. இதில் தொடக்கமுதல் சுயம்வரப் படலத்தில் 107-ம் செய்யுள் முடிய உரையுடனிருக்கின்றன. பாடவேறுபாடுகள் காணக்கிடக்கின்றன. பிற செய்திகளை எமது விவர அட்டவணைத் தொகுதி 1 ; பக்கம் 125-ல் காண்க.

## பிரபந்தங்கள்

வரிசை எண். **1119** சுவடி எண். **966**

## திருவாரூர்க் கோவை

ஏடுகள் : 78. ஏட்டின் நிலைமை : மிகமிகப்பூச்சியரித்தநிலை. பக்கத்திற்கு : 8 - 9 வரிகள். அளவு : 40 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை: 3500. ஆசிரியர் : எல்லப்ப நயினார். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

"வீறுதியா கப்பெருமாள் வீதிவிடங் கப்பெருமாள்
கூறுமரு மைப்பெருமான் கோவைக்குப் - பேறுடனே
வாக்குதவு மைந்துகர வாரணமும் வானவரை
காக்குமயி ராவதமே காப்பு."

காட்சித்துறை

தேர்கொண்ட காமன் கவிகையும் வேழமும் செஞ்சிலையும்
போர்கொண் டவம்பு யக்குடமுங் கொண்டொரு
புற்றிடத்தே
வேர்கொண் டிருப்பவ ராரூரர் வீதி விடங்கர்வெற்பில்
கார்கொண்ட காவி லொருபசுந் தோகையென்
கண்ணுற்றதே !

வாகை மாரன் வரிசை கொளங்க
தோகையைக் காவிற் ரேன்றல் கண்டது. -க

முடிவு :

தலைவன் மனையின்கண் வந்து தலைவியைப்
புணர்ந்து கார்ப்பருவங்கண்டு மகிழ்தல்

"சேலே வயற்றிரு வாரூரர் செம்பொன் றியாகர் தண்டைக்
காலே யெனப்பொற் சிலம்பிடை யார்த்துக் கரியகண்டம்
போலே விளங்கிச் சடைபோல் மின்னியப் பொற்சடையின்
மேலே யிருக்கு நதிபோல வாழ்கவிம் மேகங்களே."

புலந்த தலைவன் றலைவிமெய்ப் போகங்கலந்து
கார்ப்பருவங் கண்டு மகிழ்ந்தது. சூகூகூ

புற்றிடங் கொண்டபுய பூதர னெல்லன் மானிலத்தே
கற்றிடங் கொண்ட புலவோர்கள் யாருங் களிக்கவுமை
யுற்றிடங் கொண்டதியா கேசர் பரத்துக் கும்பர்தொழும்
புற்றிடங் கொண்ட திருவாரூர்க் கோவை புகன்றனனே."

திருவாரூர்க் கோவை புகன்ருே னெல்லப்ப
நயினுரென் றியம்பியது. -ரு0

முற்றும்.

குறிப்பு :

இது தொண்ணூற்ருறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்ருகும். அகப்பொருட் கோவையின்பாற்படும். ஆரூர்க்கோவை எனவும் பெயர்பெறும். கோவை, நானூறு செய்யுட்களால் பாடப்பெறுவது. இது 500 செய்யுட்களைக் கொண்டுள்ளது. கட்டளைக் கலித்துறை யாலானது.

வஷ்துவாகிய சிவனுடைய சடாமகுடத்திலே தரித்த விளமை பொருந்திய வெள்ளை நிறமான சந்திரனை முன்பு பாரத கதை யெழுதுகிர , . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

முடிவு :

விரியிருள் சீய்க்குங் கற்றை வெண்ணிறக் கவரி வீச
வெரிமணி அடப்பை தாங்கி இன்னமை மகளீற் பெற்ற
பரிசிலைத் துணியொழவர் கெடகம . . . , . . -ாா

குறிப்பு :

இது எமது 177-ம் எண்ணுள்ள சுவடி போன்றது. இதில் தொடக்கமுதல் சுயம்வரப் படலத்தில் 107-ம் செய்யுள் முடிய உரை யுடனிருக்கின்றன. பாடவேறுபாடுகள் காணக்கிடக்கின்றன. பிற செய்திகளை எமது விவர அட்டவணைத் தொகுதி 1 ; பக்கம் 125-ல் காண்க.

## பிரபந்தங்கள்

வரிசை எண். **1119** சுவடி எண். **966**

# திருவாரூர்க் கோவை

ஏடுகள் : 78. ஏட்டின் நிலைமை : மிகமிகப்பூச்சி யரித்தநிலை. பக்கத்திற்கு : 8 - 9 வரிகள். அளவு : 40 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை: 3500. ஆசிரியர் : எல்லப்ப நயினுர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

"வீறுதியா கப்பெருமாள் வீதிவிடங் கப்பெருமாள்
கூறுமரு மைப்பெருமான் கோவைக்குப் - பேறுடனே
வாக்குதவு மைந்துகர வாரணமும் வானவரை
காக்குமயி ராவதமே காப்பு."

## காட்சித்துறை

தேர்கொண்ட காமன் கவிகையும் வேழமும் செஞ்சிலையும்
போர்கொண் டவம்பு யக்குடமுங் கொண்டொரு
புற்றிடத்தே
வேர்கொண் டிருப்பவ ராரூரர் வீதி விடங்கர்வெற்பில்
கார்கொண்ட காவி லொருபசுந் தோகையென்
கண்ணுற்றதே!

வாகை மாரன் வரிசை கொளங்க
தோகையைக் காவிற் றோன்றல் கண்டது. -க

முடிவு :

தலைவன் மனையின்கண் வந்து தலைவியைப்
புணர்ந்து கார்ப்பருவங்கண்டு மகிழ்தல்

"சேலே வயற்றிரு வாரூரர் செம்பொன் றியாகர்தண்டைக்
காலே யெனப்பொற் சிலம்பிடை யார்த்துக் கரியகண்டம்
போலே விளங்கிச் சடைபோல் மின்னியப் பொற்சடையின்
மேலே யிருக்கு நதிபோல வாழ்கவிம் மேகங்களே."

புலந்த தலைவன் றலைவிமெய்ப் போகங்கலந்து
கார்ப்பருவங் கண்டு மகிழ்ந்தது. சகூகூ

புற்றிடங் கொண்டபுய பூதர னெல்லன் மானிலத்தே
சுற்றிடங் கொண்ட புலவோர்கள் யாருங் களிக்கவுமை
யுற்றிடங் கொண்டதியா கேசர் பரத்துக் கும்பர்தொழும்
புற்றிடங் கொண்ட திருவாரூர்க் கோவை புகன்றனவே."

திருவாரூர்க் கோவை புகன்றோ னெல்லப்ப
நயினாரென் றியம்பியது. -ரூா

முற்றும்.

குறிப்பு :

இது தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றாகும். அகப்பொருட் கோவையின்பாற்படும். ஆரூர்க்கோவை எனவும் பெயர்பெறும். கோவை, நானூறு செய்யுட்களால் பாடப்பெறுவது. இது 500 செய்யுட்களைக் கொண்டுள்ளது. கட்டளைக் கலித்துறை யாலானது.

திருவாரூர்க் கோவை என்பது திருவாரூரில் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள தியாகராசக் கடவுளைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பட்டதாகும். சொற்சுவை, பொருட்சுவை நிரம்பப் பெற்றது. சைவ எல்லப்ப நாவலரால் பாடப்பெற்றது. இச்சுவடி மிகவும் சல்லடைக்கண்ணாக உள்ளது. பிறசெய்திகளை எமது தமிழ்க் காட்டலாக்கு Vol. I. பக்கம் 140-ல் காண்க.

## அந்தாதி

வரிசை எண் : **1120** சுவடி எண் : **910**

### அருணகிரியந்தாதி

ஏடுகள் : 26. ஏட்டின் நிலைமை : சிறிது எலி கடித்தது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 35 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 350 ஆசிரியர் : குகைநமச்சிவாயர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

" சத்திதரு முத்திதருஞ் செந்திருவைச் சேரவைக்கும்
பத்திதரு மெஞ்ஞானம் பாலிக்குங் — கொத்தி
அரிமகனைக் காய்ந்த அருணேசன் தந்த
கரிமுகனைக் கைதொழுதக் கால். "

வீர விநாயகன் துணை.

நூல்

" கார்கொண்ட மேனியெனுங் கஞ்சனுங்கா ணுப்பெருமை
ஆர்கொண் டுரைசெய்வா ரம்புவியில் — சீர்கொண்ட
அருணகிரி மேவுகின்ற அய்யாநீ வேண்டி
கருணைபுரி யாதிருந்தக் கால். " -க

முடிவு :

" உரையெனும் வஞ்செழுத்தை உள்ளபடி யுன்னி
லுரையாக நீய்தருவை உண்மை — கரையெனலெ
யென்ஞர் புரமெரித்த யீசா அருணகிரி
கண்ணு ரமுதே கார். "

அருணகிரி அந்தாதி சங்கரலிங்கம் படித்தது.

முற்றும்.

வீரவினயகன் துணை.

குமரன் துணை.

குறிப்பு :

இது எமது 135, 136, 137, 480-d போன்றது. இதில் பாடவேறு பாடுகள் மலிந்து காணப்படுகின்றன. கடைசிப்பாடல் முற்றிலும் வேறுபட்டுக் காணப்படுகின்றது. முதலேட்டில் 'சங்கரலிங்கம் படிக்கிற அருணகிரி அந்தாதி' என்றுளது. இது எமது சரசுவதி மகாலில் வெளியிடப்பட்டுள்ளது.

வரிசை எண் : 1121. சுவடி எண் : 843.

## ஆறெழுத்தந்தாதி அல்லது சடாட்சர அந்தாதி

ஏடுகள் : 32. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் பூச்சியரித்துள்ளன. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 17 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300. ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" ஆனந்த மாறெழுத் தாலய மாமென தவுகமெல்லாந்
தானந்த மாதி முதற்பொரு ளாவிசத் தாங்கமும்நீ
மோனந்த முன்னுள தென்னுள துன்னுள தென்னுளதாம்
ஈனந்தம் போக்கி யெனைநீய தாக்கிய தென்குருவே. " -க

முடிவு :

"வை(யஞ்) (ச)லமங்கி கா(ல்வான்) பலவுயிர் (வான)
முடி(வே)வட்
டெய்யும் பாமுதலி சார்வதெல் லாமெம்பி ரான்முருகோன்
தெய்யென நின்ருட நின்ஞற் சிலம்போசை திருவிளையாட்
டையநின் னங்கம தென்னங்க மாய்நின்ற தானந்தியே."
-ாஉ

சடாட்சர வந்தாதி முற்றும். வேலுண்டு வினையில்லை.

குறிப்பு :

'சடாட்சரம்' எனப்படும் ஆறெழுத்தின் புகழைக்கூறும் இந்நூல், பூச்சியரிக்கப் பெற்றுளது. 102 பாடல்களைக் கொண்டது. கட்டளைக் கலித்துறையினுலாயது. அச்சு நூலுக்கும் இதற்கும் பாட வேறு பாடுகள் மிகுதி. இறுதியில் சில்லரை ஏடுகள் 4 சேர்க்கப் பட்டுள்ளன.

வரிசை எண் : **1122** சுவடி எண் : **825**

## செளுவையந்தாதி.

ஏடுகள் : 49. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 32 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"பாலுங் கனிமொழி பாகர் கேட்கப் பயின்றயிசை
நாலும் பரவுஞ் செளுவையந் தாதியை நானுரைக்க
வேலும் பருமயி லும்வள்ளி நாயகர் வேளுந்தண்டைக்
காலுங் குமரன் வடிவுமெப் போதுமென் கண்ணிற்குமே."

செளுவையந்தாதி.

"திருந்தும் பரிபுர செந்தா மரையையென் சென்னிவைக்க
பொருந்துந் திருவுள நாளெந்த நாள்புவி மேற்பரந்து
வருந்தும் படிவரும் வெங்காள கோபத்தை வாரியமு
தருத்துங் கருணைக் கடலே செழுவைக் கதிபதியே."

முடிவு :

" . . . . புதிய வரிமன்றப் பாவைமைக் கொலியமு
. . . . தங்க . . மணிச்சங்கு காளுள் ளுடைந்துமலர்
. . . . நறும்புன்னை யார்செளு வேசர்சொற் பாடியுந்தா
. . . . சுரும்பினங் காளனங் காளெ னருகிருமே." -கூஅ

குறிப்பு :

இது செழுவை நகரில் வீற்றிருக்கும் கடவுள்மீது பாடியதாகும். ஆசிரியர் முதலியன அறியக்கூடவில்லை. கட்டளைக் கலித்துறையா லானது. கடைசி ஏடுகள் இல்லாததால் முழுவதும் இல்லை. செய்யுள் நடை சிறந்தது. பிழையதிகம்.

---

வரிசை எண் : **1123** சுவடி எண் : **975**

## புகலூரந்தாதி.

ஏடுகள் : 17. ஏட்டின் நிலைமை : எலி கடித்து, சிதைந்த நிலை. பக்கத்திற்கு : 8 - 9 வரிகள். அளவு : 23 × 3. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : நெற்குன்றைவாணர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

காப்பு.

" உரைசெய் மறைக்குந் தலைதெரி யாவொரு கொம்ப
னென்றே
பரசு மவர்க்குப் பருநிழ லாகும் பழனமெல்லாந்
திரைசெய் கடற்றுறைச் சங்க முலாவுந் திருப்புகலூர்
அரசி னிடத்து மகிழ்வஞ்சி யீன்றதோ ரத்திநின்றே "

நூல்.

பூக்கம லத்து விழிவளர் வானென்றும் போற்றியவூர்
மாக்கம லத்து மகிழ்கின்ற வூர்மது வானிறைந்த
தேக்கம லத்து வழியே பரக்குந் திருப்புகலூர்
நோக்கம லத்துயர் சோதிநெஞ் சேயெம்மை
நோக்குதற்கே.

முடிவு :

அடைக்கல நாய னடித்தா மரைக்குல(த்) தஞ்செழுத்தாம்
படைக்கல நாவிலுண் டஞ்சே னெவற்கும் பனிமொளியா
ருடைக்கல நாணல முள்ளம் பலியோ டுகந்துகொள்ள
. . . . . . . . . . . . .

குறிப்பு :

இது சிற்றிலக்கிய வகையைச்சாரும்.. அந்தாதித் தொடையால் பாடப்படுவது. இந்நூலில் 98 பாடல்களே முழுமையாகக் காணப் படுகின்றன. 99-வது பாடல் 3 வரிகளே உள்ளன. இதன் பிற செய்திகளை எமது சுவடி எண் 158-இல் காணலாம்.

---

வரிசை எண் : **1124** சுவடி எண் : **747**

## மருதூரந்தாதி உரையுடன்

ஏடுகள் : 33. ஏட்டின் நிலைமை : மிகமிகச் சிதிலம் பக்கத்திற்கு : 6-8 வரிகள். அளவு : 31 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1000. ஆசிரியர் : தலைமலைகண்ட தேவர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" (திருப்ப)ங் கையத்தன மா துக் களித்தவன் செந்துவர்
வாய்த்
திருப்பங் கையத்தன்பு கூர்மரு தூர(ன் றி)ரையெழுந்த
திருப்பங் கயத்தன்ன வாகத்த ஞன்முகன் றெம்முன்மழுத்
திருப்பங் கயத்த னி(ருப்ப)னென் னெஞ்சிற் றிருக்கறவே. "

என்றது, திருப்பங்கையத்தன மாதுக்களித்தவன் = அழகிய திரு(மே)னியி லொரு பாதியை யழகிய தனமுடைய மாதாகிய பார்பதியாருக்குக் கொடுத்தவன், செந்துவர் வாய்=சிவந்த பவள (நிறத்தினை) யுடைய, திருப்பங்கைத் தன்புகூர் மருதூர்=(லட்) சுமியானவள் அன்பு கூர்ந் . . .

முடிவு :

என்னுடைய உயிர்போம் வேளையிலே . . . ருந்திய அலையினுடைய புனல்சூழ்ந்த மருதூரிலே வாழ்ந்திருக்கு முக்கண்ணுடை ஈஸ்பரனே யெனக்கு . . . . . . . . . .

குறிப்பு :

இந்நூல் மருதூரில் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள சிவ பெருமான்மீது தலைமலை கண்ட தேவர் எனும் புலவர் பாடிய யமக வந்தாதி. மருதூர், பாண்டி நாட்டில் உள்ளது. அது தற்போது நயினர்கோயில் என்றழைக்கப்படுகின்றது. இந் நூலாசிரியர் சேது நாட்டைச் சேர்ந்தவர். கல்வியிற் சிறந்த இவர் மறவர் குலத்தினர். இவர் மணம் செய்து கொள்ளுவதற்காகப் பொருள்வேண்டி திருப்பூ வணத்திலுள்ள ஒரு தாசி வீட்டில் களவு செய்வதற்காக அவளது படுக்கை அறைக்கண் இருந்த கட்டிலடியில் பதுங்கியிருந்தார். அந்தத் தாசி திருப்பூவணநாதர்மீது செய்யுளொன்று பாடிமுடித்துப் பின் உறங்கும் வழக்கமுடையவள். அன்று வழக்கம்போல் அவள் பாடத்தொடங்கிய செய்யுள் முடிவுபெறவில்லை. அதனல் அவள் மயங்குகையில் கீழே ஒளிந்திருந்த தேவர் அதனைப்பாடி முடித்தார். திடுக்கிட்ட தாசி அவரை நோக்கி "நீ யார் ?" என வினவ, அவர் தன் வரலாற்றினைக் கூறிப் பொன் பெற்று வந்து மணமுடித்துக் கொண்டார். மிகமிகச் சிதிலமாயுள்ள இந்நூல் முழுமையின்றியும், எலிகடித்தும், முறிந்தும், சிதைந்தும் இருக்கிறது. முன் பகுதி இல்லாமையால் ஏடுகள் தலைதடுமாற்றமாயுள்ளன. இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது. சுவடி நல்ல நிலையில் இல்லாததால் தெளிவா கக் கூறமுடியவில்லையாயினும் இது, சுவடி எண் 141ஐ ஒத்திருக் கின்றது.

இத்துடன் ஞானனுபூதியில் இரண்டேடுகள் கோக்கப்பட்டுள் ளன. மிகவும் சிதைந்துள்ளன. தெளிவாக இல்லை.

வரிசை எண்: **1125** சுவடி எண் : **973**

## திருமுருகாற்றுப்படை – நச்சர் உரை.

ஏடுகள் : 25. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பூச்சி யரித்த நிலை. பக்கத்திற்கு : 10–11 வரிகள். அளவு : 29 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1300 ஆசிரியர் : (மூலம் – நக்கீரர்) உரை – நச்சினர்க்கினியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

உலகமுவப்ப – உலகமென்பது முதற்கணவனெனுந் துணையுமொரு தொடர். உலகமென்பது – பலபொருளொரு சொல்லாய் நிலத்தையு முயிர்களையு மொழுக்கத்தையுமுணர்த்திநிற்குமேனு மீண்டுவப்ப வென்றதனன், மண்ணிடத்து வாழுஞ் சீவாத்துமாக்களை யுணர்த்துதநுதலிற்று. ஏர்புவலன்றிரிதருவென்பது – எழுந்து மகமேருவை வலமாகத் திரிதலைச் செய்யும், பலர் புகழ் ஞாயிறு - எல்லாச் சமயத்தாரும் புகழும் ஞாயிற்றை, கடற்கண்டாங்கு - கடலிடத்தே கண்டாற்போல. இது வினையெச்சவுவமம் "விரவியும் வரூஉ மரபினவென்ப" என்பதனாற் றொழிலுவமமும் பற்றி வந்தது.

முடிவு :

தத்துவங் கடந்தபொருள் யென்பது சார்பிலனாற் தானருவாயமைதீர் சுடரென்பதா . . . யுற்றவாருகையிலுறு பொருணறுமலதாமு . . , . . . தரு நாற்றம் போற்யற்ற லாவதோர் நிலையாய் பொருளென்பதனையுணர்ந்தோர் கூறியவாற்றானுணர்க. முருகாற்றுப்படையே வீடு பெறுதற்குச் சமைந்தானொரிரவலனை வீடு பெற்றானொருவன் முருகனிடத்தே யாற்றுப்படுத்ததென்று பொருள் கூறுக.

திருமுருகாற்றுப்படைக் காசிரியன்
நச்சினார்க்கினியாரெழுதிய வுரை முற்றும்.

குறிப்பு :

இது No. 227 சுவடியைப் போன்றது. திருமுருகாற்றுப்படை, பத்துப்பாட்டுள் முதற்பாட்டாகும். இதனை யியற்றியவர் நக்கீரர். உரைகண்டவர் நச்சினார்க்கினியர். இதன் விளக்கம் எமது சுவடி எண் 227-ல் காணலாம்.

இந்நூலின் இறுதியில் ஆவரண பூசைமந்திரம், பதமந்திரம் 81, ஆகியவை எழுதிய சில ஏடுகள் இணைக்கப்பட்டுள்ளன. முதல் முகப்பேட்டின் கடைசியில்

'நெஞ்சி நெருப்பிட்டிருப்பா ரடுப்பிநெருப்பில்லையே'
என்றெழுதப்பட்டுளது.

ஏசல்

வரிசை எண் : 1126 சுவடி எண் : 892

## திருப்பரங்குன்றத்து ஏசல்.

ஏடுகள் : 6. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 22 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இருக்கிறது.

**தொடக்கம் :**

" திருவான் பரங்கிரி சேந்தன் குமரன் . . . .
வருவாள் மகள்தனைத் தாயேசு மேச . . . .
குருவாம் விகட தடமே ருவையொரு கொம்பனேமே
யுருவாம் பறங்கிரிக் கற்பகன் பாத முரைக்குதுமே"

**முடிவு :**

" பாலிலது பழம்நழுவி விழுந்தாப் போலாச்சுதடி-
மகளேஉன்
பாக்கியம் வாசித்தமடி பரங்கிரி சண்முக ரிடத்தில்க்
குடியாய்நீயுங்
கோலமுடன் மங்களமாய்க் கூடியிருந் தென்னளும்
வாழிப்பின்னும்
குவலயத்தி லதிகமழை பெய்துகுடி தளைத்தோங்கும்
வாழி. -ம்க

முற்றும்.

**குறிப்பு :**

சிற்றிலக்கிய வகையைச்சாரும் இந்நூல் தாய் மகள் ஏசல் என்னும் பெயரால் சண்முகப் பெருமானுடைய புகழைக் கூறுவது. 11 செய்யுட்கள் உள்ளன. இதன் பின்னரும் ஒரு நூல் ஏசல் போலக் காணப்படுகின்றது. 12 ஏடுகளில் உள்ளது. நீதியையும் போதிப்பது. முழுமையும் இல்லை. இன்ன ஏசல் என்று விளங்கிற்றிலது.

## காதல்

வரிசை எண் : **1127.** சுவடி எண் : **858.**

### கூளப்பநாயக்கன் காதல்.

ஏடுகள் : 28. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 38 × 2·5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 400· ஆசிரியர் : சுப்பிரதீபக் கவிராயர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

காப்பு

" பேராரும் பெஞ்சைப் பெரியநா கேந்திரன்மேற்
சீராருங் காதலென்று செப்பவே—வேரிதரும்
அக்கனித ரச்சொலிமுன் னப்பனைவ லத்தில்வறு
கைக்கெசமு கக்கடவுள் காப்பு."

நூல்

" பொன்மாது மேவுதிம்ம ராயனருள் பூண்டிருக்கும்
நன்மா னிதிபெரிய நாகயன்மேற் காதலுக்கு -க
வந்துதவுஞ் கோலமதுர வாக்கு தவி யெப்பொருளுந்
தந்துதவ வேணுமெங்கள் தந்திமுகத் தோனே. -உ

முடிவு :

" தண்டையொலி மேளந் தளங்கள் நெகிள்ந்தகுறல்
வண்டு கரும்புருவ மாற்றலார் போற்பாற்க -உாகக
வெம்பியெனைப் பாய்ந்தடர விட்டதன் பாரமெனுங்
கம்பமத வாளைதனைக் கைப்பிடியா கப்பிடித்து." -உாஉ

குறிப்பு :

நாமக கூளப்ப நாயக்கனைப் பாட்டுடைத் தலைவனாகக்கொண்டு பாடிய காதல் பிரபந்தமாகுமிது. இது தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்று. அச்சிடப்பட்டுள்ளது. இந்நூல் பற்றிய விபரங்களை எமது 95-வது எண் சுவடிக் குறிப்பில் காண்க. இந்நூலின் இறுதியில் அருணசலேசுவரர் பதிகம் முதலியன ஆறு ஏடுகளில் காணப்படுகின்றன. இவ்வேடுகள் மிகச் சிதிலம்.

குறவஞ்சி

வரிசை எண் : **1128** சுவடி எண் : **821**

## ஞானக் குறவஞ்சி

ஏடுகள் : 42. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் எலிகடித்தும், பூச்சியரித்தும் உள்ளன. பக்கத்திற்கு : 6–7 வரிகள். அளவு: 23 × 2.5 செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 900. ஆசிரியர் : குமரகுருபரன் & பீருமுகம்மது. முழுமை : முழுவதும் இருக்கிறது.

**தொடக்கம் :**

"சீரிலங்கும் வழந்தோங்கும் திருப்புகள்க்கு
 விருப்ப மளித்துப் பரவும்
தாரிலங்கும் கடம்புபுனை சண்முக
 சிகாமணிமேல்த் திகழு ஞானத்
தேரிலங்கும் குறவஞ்சி மதுரமொளி
 விஷ்த்தாறம் எனுஞ்சீர் பாடக்
காரிலங்கும் கற்பகத்துக் கணபதிபொற்
 சரணமலர் கறுத்தில் வைப்பாம்."

**முடிவு :**

சத்தலி சென்ம யித்தனையார் சொன்னரடி-சிங்கி-அது
புத்தியாய் பீறு முகம்மது சொன்னது – சிங்கா.
ஆகக்கண்ணி - அயசு

இன்பமத்த யோகிக்கி யிருளு வந்து மூடுமோ
 வுனவாச மொப்பி . . . . . . . . . .
ஒப்பி . . . . . . . . . . . . . . . . .
. . . . . . அப்படி ஒப்பியாகுருந்தால் ரொம்பவும் அபகாரம் வந்து நேரும். இது அறியவும்.

சிவமயம். வேலுண்டு வினையில்லை.
மயிலுண்டு பயமில்லை.

**குறிப்பு :**

ஏடுகள் மிகமிகச் சிதிலமாகவும் சிதைந்தும் காணப்படுகின்றன. குறவஞ்சி என்பது குறத்திப் பாட்டு. தலைவன் பவனி வருதல் முதலான செய்திகளைக் கூறுவது. இதில் சிங்கன் - சிங்கி தருக்கம்

போலவே ஞானமார்க்கம் போதிக்கப்பட்டுள்ளது. இது மூன்று பகுதிகளாக உள்ளது. முதலிரண்டும் குமரகுருபரன் என்பவரால் இயற்றப்பட்டதாகத் தெரிகின்றது. எளிய நடையில் உள்ள இத் தத்துவ நூல் மிகவும் பயனுடையதாகும். சிங்கன், சிங்கி தருக்கம் மட்டும் உள்ள மூன்ருவது, பீருமுகம்மது என்பவராற் செய்யப்பட்ட தாகும். தலைவன் பவனிவரல் முதலானவைகள் இதில் இல்லை. இது எமது சரசுவதி மகால் நூலக வெளியீடாக வெளிவந்துளது.

## தூது

வரிசை எண் : **1129**. சுவடி எண் : **799**

## நண்ணுவூர் சங்கமேசுவரிமேல் விறலிவிடு தூது

ஏடுகள் : 62. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் எலி கடித்தும், சிதைந்தும் உள்ளன. பக்கத்திற்கு : 7–11 வரிகள் அளவு : 40 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை: 1200. ஆசிரியர் : வரத பாரதி முத்தையர் (போலும்) முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

பொன்மா தருமைமிஞ்சு பூமாத ருட்குலவு
தென்மா தவன்மகிமை சீராமன்–நன்னயமாய் -க

அன்னுள்ப் படியளந்த தல்லாம லெவ்வுயிர்க்கும்
இன்னுள்ப் படியளக்கும் எம்பிரான்–முன்னுளில் -உ

முடிவு :

சின்னி விறலி சொல்ல பாவலறும் யேதுசொல்வார்
மின்னுற் மறுங்கின் விறலியே–உன்னுலே - கூ௱௫கூ

ஊடல் விலக்க உபாயமிலை யோவுனக்கோர்
சாடை சொல்லிச் சேற்க சமத்திலையோ – ஞடோறும் -கூ௱சூய

குறிப்பு :

சுவடி ஓரத்தில் மிகச் சிதிலமாக உள்ளது. மனைவியிடம் ஊடல்கொண்ட கோபத்தோடு வெளியூர் சென்று, வேசை வசப் பட்டுக் கெட்டு மீண்டு, சங்கமேசுவரர் சங்கமேசுவரி ஆகிய கடவுளை அடைந்து, பொருள்பெற்று மீண்ட சோடச அவதானி என்பான் மீண்டும் தன் மனைவியின் ஊடலைத் தீர்க்குமாறு விறலியை வேண்டி அவளைத் தூது விடுத்த விறலிவிடு தூதாகும் இது. இது சொல் நயமும், பொருள் நயமும் நிரம்பப்பெற்றது. கர்நாடக இராகங்களைக் கொண்டு சிலவரிகளில் சிலேடை நயம்படப் பாடியுள்ளது பாராட்டத் தக்கது. இது எமது சரசுவதி மகாலில் அச்சாகியுளது.

---

## சதகம்.

வரிசை எண் : **1130.** சுவடி எண் : **805.**

## குமரேச சதகம்.

ஏடுகள் : *41.* ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : *6 — 7* வரிகள். அளவு : *42×3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *1000.* ஆசிரியர் : குருபாத தாசர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"பூமேவு புல்லைப் பொருந்துகும ரேசர்தம்மேல்
தேமே வியசதகஞ் செப்பவே—கோமேவிக்
காக்குஞ் சரவணத்தான் கம்பகும்பத் தைந்துகரக்
காக்குஞ் சரவணத்தான் காப்பு."

அவையடக்கம்.

மாரிக்கு நிகரென்று பனிசொரிதல் போலவு
மனைக்கு நிகரென்று சிறுபெண்
மணல்வீடு கட்டுவது போலவுஞ் சந்திரன்முன்
மருவு மின்மினி போலவும்,

முடிவு :

நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடோறுங் கற்ற பேர்கள்
ஞானயோ கம்பெறுவர் பதவியா வும்பெறுவர்
நன்முத் தியும்பெ றுவரே !

காலம் :- (Colophon)

விசுவாவசுஹு சித்திரைமீ கசுஉ சோமவாரமும் உத்திரட்டாதி நட்சத்திரமுங் கூடிய சுபதினத்தில் சுடலை முத்தம்மாள் வாசித்துவந்த குமரேச சதகம் முற்றுப் பெற்றது.

கடவுள் துணை. நீடூழி வாழ்க.

மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

குறிப்பு :

குமரேசர் மீது பாடிய நூறு செய்யுட்களைக் கொண்டது. சதகம் என்பது நூறு செய்யுட்களைக்கொண்ட நூலாகும். புல்வயல் என்னும் தலத்து முருகவேளைப் பாட்டுடைத் தலைவனுகக்கொண்டு பாடிய பாடலாகுமிது. நீதிகளைப் போதிப்பது. அச்சிடப்பட்டுளது.

---

வரிசை எண்: 1131 சுவடி எண் : 908

## குமரேச சதகம்.

ஏடுகள் : 48. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 8 — 9 வரிகள். அளவு : 23 × 3·5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 800. ஆசிரியர் : குருபாததாசர். முழுமை : முழுவதும் உள்ளது.

குறிப்பு :

நீதிகளைப் போதிக்கும் இந்நூல் முன்பிரதி போன்றது. இதில் ஒரு ஏடு காலியாக உள்ளதால் 53-ம் பாடலில் பிற்பாதியும், 54-ம் பாடலும், 55-ம் பாடலில் முற்பாதியும் இல்லை. அச்சாகியுள்ள நூலின் பாடல் வரிசைக்குமிதற்கும் நிறைந்த பாடபேதங்கள் காணப்படுகின்றன.

வரிசை எண் : 1132 சுவடி எண் : 928

## தண்டலையார் சதகம்

ஏடுகள் : 48. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் சிறிது முறிந்த நிலை. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 30 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : படிக்காசுப் புலவர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

நீத்தார் பெருமை

" அட்டதிசை யெங்கணும்போய் அலைந்தாலும் பாதாள
மதில்ச்சென் றாலும்
பட்டமென வானூடு பரந்தாலு மென்னபதில்ப்
பலனுண் டாமோ
பிட்டுவர மண்சுமந்த தண்டலைநீ ணெரியேமுன்
பெரியோ கையில்
யிட்டபடி யொளிந்துசும் மாயெருசைப் படிவருவ
தில்லைத் தானே." -ரு

முடிவு :

சற்பமுள்ள மதிபுனலோ டக்கறுகு கொன்றை தும்பை
தன்னைச் சூடி
பற்பலசெந் தமிள்வாணர் கவிசொரியத் தண்டலையாற்ப்
பதியில் வாழும்
அற்புவிடை மடந்தையுமை மயிலையொரு பாகம் வைத்தோ
னருமை பாடல்
கற்பவர்கேட் போர்படிப்போர் கற்பகநா டாசிறுந்து
கையிலை சேர்வார். -சூஅ

குறிப்பு :

இது நூறு பாடல்களைக் கொண்டது. சதகம், பிரபந்த வகையைச் சார்ந்தது. இதில் 3-ம் செய்யுள் முதல் 98-ஆம் செய்யுள் முடிய இருக்கின்றன. பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன. இறுதியில் சக்கரங்களுடன் கூடிய இரண்டு மந்திர ஏடுகள் காணப்படுகின்றன.

---

காலம் :- (Colophon)

விசுவாவசுஹு சித்திரைமீ கசூஉ சோமவாரமும் உத்திரட்டாதி நட்சத்திரமுங் கூடிய சுபதினத்தில் சுடலை முத்தம்மாள் வாசித்துவந்த குமரேச சதகம் முற்றுப் பெற்றது.

கடவுள் துணை. நீடூழி வாழ்க.

மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

குறிப்பு :

குமரேசர் மீது பாடிய நூறு செய்யுட்களைக் கொண்டது. சதகம் என்பது நூறு செய்யுட்களைக்கொண்ட நூலாகும். புல்வயல் என்னும் தலத்து முருகவேளைப் பாட்டுடைத் தலைவனுகக்கொண்டு பாடிய பாடலாகுமிது. நீதிகளைப் போதிப்பது. அச்சிடப்பட்டுளது.

---

வரிசை எண்: 1131 சுவடி எண் : 908

## குமரேச சதகம்.

ஏடுகள் : 48. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத் திற்கு : 8 — 9 வரிகள். அளவு : 23 × 3·5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 800. ஆசிரியர் : குருபாததாசர். முழுமை : முழுவதும் உள்ளது.

குறிப்பு :

நீதிகளைப் போதிக்கும் இந்நூல் முன்பிரதி போன்றது. இதில் ஒரு ஏடு காலியாக உள்ளதால் 53-ம் பாடலில் பிற்பாதியும், 54-ம் பாடலும், 55-ம் பாடலில் முற்பாதியும் இல்லை. அச்சாகியுள்ள நூலின் பாடல் வரிசைக்குமிதற்கும் நிறைந்த பாடபேதங்கள் காணப்படுகின்றன.

வரிசை எண் : 1132 சுவடி எண் : 928

## தண்டலையார் சதகம்

ஏடுகள் : 48. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் சிறிது முறிந்த நிலை. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 30 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : படிக்காசுப் புலவர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

நீத்தார் பெருமை

" அட்டதிசை யெங்கணும்போய் அலைந்தாலும் பாதாள மதில்ச்சென் ருலும்
பட்டமென வானூடு பரந்தாலு மென்னபதில்ப் பலனுண் டாமோ
பிட்டுவர மண்சுமந்த தண்டலைநீ ணெரியேமுன் பெரியோ கைய்யில்
யிட்டபடி யொளிந்துசும் மாயெருசைப் படிவருவ தில்லைத் தானே." -ந

முடிவு :

சற்பமுள்ள மதிபுனலோ டக்கறுகு கொன்றை தும்பை தன்னைச் சூடி
பற்பலசெந் தமிள்வாணர் கவிசொரியத் தண்டலையாற் பதியில் வாழும்
அற்புவிடை மடந்தையுமை மயிலையொரு பாகம் வைத்தோ னருமை பாடல்
கற்பவர்கேட் போர்படிப்போர் கற்பகநா டாசிறுந்து கையிலை சேர்வார். -கூஅ

குறிப்பு :

இது நூறு பாடல்களைக் கொண்டது. சதகம், பிரபந்த வகையைச் சார்ந்தது. இதில் 3-ம் செய்யுள் முதல் 98-ஆம் செய்யுள் முடிய இருக்கின்றன. பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன. இறுதியில் சக்கரங்களுடன் கூடிய இரண்டு மந்திர ஏடுகள் காணப்படுகின்றன.

வரிசை எண் : 1133 சுவடி எண் : 989

## தண்டலையார் சதகம்

ஏடுகள் : 35. ஏட்டின் நிலை : ஏடுகள் புகை படிந்தும், ஒடிந்தும் உள்ளன. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 41 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500 ஆசிரியர் : படிக்காசுப் புலவர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

நூல்.

"வரமளிக் குந்தண் டலையார் திருக்கோவிலுள்
புகுந்து வலமாய் வந்து
ஒருவிளக் காகிலும் பசுவிநெய் யுடனே
தாமரை நூ லொளிவாய் வைத்தால்
கருவிளக்குப் பிறப்பு மில்லை யிரப்பு மில்லை
கைலாசங் காணி யாகும்
திருவிளக் கிட்டார் தமையே தெய்வ மறிந்திடும்
வினையுந் தீருந் தானே." -க

முடிவு :

"உபகாரஞ் செய்தவற்கு குறிப்பரிந்து செயும் வரிசையுளம்
நில்லாது
அபசாரஞ் செய்தவரை அடித்தாலும் வைதாலுமது
நில்லாது
சுபமாகுந் தண்டலையார் வளநாட்டில் திருடனுக்குந்
தொழில் நில்லாது
விபசாரி யானவளை மேனியெல்லாஞ் சுட்டாலும்
மெய்நில் லாதே" -எம

குறிப்பு :

இது முன் பிரதி போன்றது. இதில் 70 பாடல்களே உள்ளன. தொடக்கத்தில் உள்ள காப்புச் செய்யுள், அறப்பளீசுர சதகத்தின் காப்புச் செய்யுள். அடுத்த, ஒடிந்த ஏட்டில் உள்ளது, இந்நூலின் காப்புச் செய்யுள். இதன் இரண்டாவது அவையடக்கப் பாடல் இல்லை. இது மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அச்சாகியுள்ளது. இதன் ஆசிரியர் சாந்தலிங்கக் கவிராயர் என்று திரிசிரபுரம் சபாபதிப் பிள்ளை அவர்களால் கூறப்பட்டுளது. அது, இதற்கு முன்பே அச்சாகியுளது. அச்சு நூலுக்கும் இதற்கும் மிகுந்த வேறுபாடுகள் காணப்படுகின்றன.

## பிள்ளைத்தமிழ்

வரிசை எண் : 1134 சுவடி எண் : 943

### மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

ஏடுகள் : 49. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 44 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1000. ஆசிரியர் : குமரகுருபரர். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

விநாயகக் கடவுள் துதி

" கார்கொண்ட கடவுள்மதக் கடைவெள்ள முங்கட்
கடைக்கடைக் கல்லுமெல்லை
கடவாது தடவுக் குழைச்செவி முகந்தெறி
கடைக்கா றிரட்ட வெங்கோன்
போர்கொண்ட வெண்டோட் பொலன்குவடு பொதியும்
பொடிதுடி யடித்துவைத்துப் [வெண்
புழுதியாட் டயருமோ ரயிரா(ன) வணத்துலவு
போர்க்களிற் றைத்துதிப்பாம்

**முடிவு :**

வங்கணெடு நிலம்விடர் படக்கிழித் தொடுவே
ரடி(யிற்) பழுத்தபலவி
னளிபொற் சுளைக்குடக் கனியுடைந் தூற்றுதே
னருவிபில மேழுமுட்டிப்
பொங்கிவழி பொழின்மதுர மதுரைநா யகிதிருப்
பொன்னூச லாடியருளே !
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே !! -ரு

**குறிப்பு :**

சிற்றிலக்கிய வகையைச்சாருமிந்நூல். இதில் ஊசற்பருவத்தில் 3-ம் செய்யுள் முடிய இருக்கின்றன. அச்சு நூலுக்கும் இதற்கும் பாட வேறுபாடுகள் மிகுந்து காணப்படுகின்றன. பாட்டு வரிசையும் மாறுபட்டுக் காணப்படுகின்றது. மதுரையில் கோயில்கொண் டெழுந்தருளியுள்ள மீனாட்சியம்மைமீது பாடப்பட்டதாகும்.

மாலை

வரிசை எண் : 1135 சுவடி எண் : 813 (a)

## கதிர்காம மாலை

ஏடுகள் : 9. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 28 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

" சீரார் கதிர்காமச் செந்தூ ரறுமுகன்மேற்
பாராரு மாலைதனைப் பாடவர மேயருள்வாய்
தாரார் குழலுமையாள் தானீன்ற தற்பரமே
காராரு மேனி கணபதியே காப்பாமே."

நூல்

" நித்த முனைத்துதித்து நீணிலத்தோர் கொண்டாட
பத்துலட்சங் கோடிதமிழ்ப் பாடவர மேயருள்வாய்
அத்த னருள்குமரா ஆய்ன் மருகோனே
கத்தனே யெங்கள் கதிர்காம வேலோனே."

முடிவு :

" மணக்கோல மாகையினல் வந்தீர் மதியாமல்
இணக்கோ அவளுமக்கு இட்டமருந் தின்பிசகோ
பிணக்கோஎன் னேடுமக்குப் பேசாமல் மோடிபண்ண
கணக்கோ தான் சொல்லுங் கதிர்காம வேலோனே."

காலம் :

கூ0எ(ய)கூ சோபகிருது-ஸு தை-உ உயகூஉ
முற்றிற்று.

குறிப்பு :

இது முருகன் தோத்திரப் பாடல்களில் ஒன்ருகும். அச்சிடப்பட்டுள்ளது. சுடலைமுத்து சுவடி என்றுளது. 30 சந்த விருத்தங்களைக்கொண்டது.

வரிசை எண்: **1136** சுவடி எண்: **813(b)**

## திருச்செந்தூர் மாலை

ஏடுகள்: 9. ஏட்டின் நிலைமை: பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு: 3-4 வரிகள். அளவு: 28×3 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 100. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் உள்ளது.

தொடக்கம்:

காப்பு

" பத்தன் பரமன் பரதேசி காவலன் பன்னுதமிழ்ச்
சித்தன் திருச்செந்தூர் மாலையைக் கூறிடச் சீர்துளசி
மத்தன் மருகன் மயிலேறி வேளுக்கு மால்தவிர்த்த
கத்தன் கறிமுகன் காரானை காப்பே கூறுமே. "

நூல்

" கோள்கொண்ட சூரன் கொடுமுடி யானதைக்
கொத்திக்கொத்தி
வாள்கொண்டு கூறிட்ட வானவ னேவள்ளல் மால்மருகா
நாள்கொண்டு நானுந்தன் பாதார விந்தத்தை
நம்பிக்கொண்டேன்
ஆள்கொண்டு நீயென்னை யாள்வாய் திருச்செந்தி
லாதிபனே "

முடிவு:

" கூறுந் திருச்செந்தூர் மாலையென் னேரமுங் கூறிநித்தம்
நீறுந்தரித்து நினைக்கவல் லார்க்குநெடு நாளைக்கெல்லாம்
பேரும் பலனும் பெருகிய செல்வமும் பிள்ளைகளும்
ஆறு முகந்தரு வாரெந்த நாளைக்கு மன்புறவே,"

காலம்: ( Colophon )

கஊஎ(ய)கூஞு சோபகிருதுஞு பங்குனிமீ' உகஉ
முற்றிற்று.

குறிப்பு:

இதுவும் முருகன் தோத்திரப்பாடல்களில் ஒன்றாகும். காப்புச் செய்யுளின் பின்னர் 'சுடலை முத்து சுவடி' என்றுளது.

வரிசை எண் : **1137** சுவடி எண் : **813 (c)**

## மூதுரை.

ஏடுகள் : 9. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 3 – 4 வரிகள். அளவு : 28 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : ஔவையார். முழுமை : முழுவதும் உள்ளது.

### காப்பு.

" ஆதி யனாதி யவையா ருரைத்ததமிழ்
ஓதுவா ரோதும் பரிசெல்லாம் நீதியாய்
ஆதிரை யானை யடிபணிந் தேற்ற
மூதுரை யானது முப்பதும் வருமே."

### நூல்.

" நன்றி யொருவருக்குச் செய்தக்கா லந்நன்றி
யென்று தருங்கொ லெனவேண்டாம் — நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்."

முடிவு :

" முப்பதா மாண்டளவில் மூன்றத் தொருபொருளைத்
தப்பாமல் தன்கைப்பட் டானாகினல் — செப்புங்
கலையளவே யாகுமாங் காரிகையாந் தங்குள்
கலையளவே யாகுமாங் சாரிகையாந் தங்கள்
முலையளவே யாகிவிடு மூப்பு."

**காலம் :-**

கஅஎகூ வரு குரோதி-வரு சித்திரைமீ 22உ
முற்றிற்று.

**குறிப்பு :**

மூதுரை என்பது ஔவையார் என்னும் தமிழ் மூதாட்டியார் அருளிய செவ்விய தமிழ் நூல்களில் ஒன்றாகும். இந்நூல் மூதுரை யென்னும் பெயரானே தொல்காப்பியவுரை முதலியவற்றில் வழங்கப்பட்டுள்ளது. வாக்குண்டாம் என்னும் பெயராலும் பிற்காலத்தவரால் வழங்கப்பெறுகின்றது. நீதிகளைக் கூறுவது. 32 செய்யுட்கள் உள்ளன. அச்சாகியுள்ளது.

வரிசை எண் : 1138 சுவடி எண் : 813 (d)

## உலகநீதி

ஏடுகள் : 6. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 3–4 வரிகள். அளவு : 23 × 8 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : உலகநாதன். முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

"ஓதாம லொருநாளு மிருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாப்புச் சொல்ல வேண்டாம்
மாதாவைப் புறங்களித்து வாழ வேண்டாம்
வஞ்சனைகள் செய்வரோ டிணங்க வேண்டாம்."

**முடிவு :**

"ஓதிவைத்த வாத்தியா ருலக நாதன்
உண்மையாய்ப் பாடிவைத்த உலக நீதி
காதலுற்றுக் கருத்துடன் கேட்டிருக்சு வல்லோர்
கருத்துடனே கயிலாசம் பெறுவார் கண்டீர்."

**காலம் :-**

கல௭(ய)கூ ஆு சோபகிருது ஆு கார்த்திகை மீ௳ கூஉ.
முற்றிற்று.

**குறிப்பு :**

இது முருகப்பெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்டது. இந்நூற் பெயர் உலகநீதி என்பதும், இதனை இயற்றியவர் உலகநாதன் என்னும் பெயருடையவரென்பதும் இதன் இறுதிச் செய்யுளால் விளங்குகின்றது. இந்நூல் பெரும்பாலும் பேச்சு நடையிலே அமைந்திருக்கிறது. இப்பிரதியில் முழுவதும் உள்ளது. அச்சிடப்பட்டுள்ளது. பாடபேதங்கள் நிறைந்து காணப் படுகின்றன.

வரிசை எண். 1139 சுவடி எண். 837 (a)

## சச்சிதானந்தமாலை

ஏடுகள் : 18. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 10–11 வரிகள். அளவு : 13 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300.

ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

வாக்குண்டாம் நல்ல மனதுண்டாம் வாள்மலராய்
நோக்குண்டா மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பா திருமேனி தும்பிக்கை யான்பாதந்
தப்பாமல்ச் சார்வார் தமக்கு.

* * * *

நூல்

முச்சுட ராகி யொன்ருய் முடிந்ததோர் சோதி பாத
மச்சுத னயனுங் காணு யகண்டமா யளவி லாத
சட்சிதா னந்த மான சதாசிவ குருவைப் பாட
மெச்சுட ருதைய மான விளக்கொளி யுண்மை சொல்வாம்.

முடிவு :

சிரமகுட முடியிலே கனகமணி யசைவிலே
சிவஞான தீப மதுபார்
திருமருவு சிவசோதி பதிபெருகு கெதிவீடு
தெரிசினங்க ளாக முடியும்
சரமுமிது பதிசேர்வை சகலகலை யனுராக
சாயூட்சிய பாத மிதுவே
தற்பரா னந்தசபை நிட்களா னந்தசிவ
சச்சிதா னந்த குருவே." -௩௨

சச்சிதானந்தமாலை முற்றும்.

குருவே துணை.

காலம் :-

சுபகிறுதி௵ காத்திகை மீ 9-ந்தேதி புதன்கிளமை புந்திவாரமும் ரோகணி நட்செத்திரமும், சுபயோக சுபகரணமும் பெற்ற சுபதினத்தில் எளுதிமுகித்தென் திருவாலைப்பதி நாட்டாண்மை சங்க்ரக் குமார சுவாமியா பிள்ளையவர்கள் குமாரன் மந்திரநாதன். இந்தச் சுவடி படித்தவரும் எழுதினவரும் கேட்டவரும் சிவபதங் பெறுவார்கள். குருவினுட பாதாரவிந்தமே கெதி.

விநயகன் துணை.

குறிப்பு:

இது வேதாந்த நூலைச் சார்ந்தது. சச்சிதானந்த குருவே என்றதனை மகுடமாகக் கொண்ட நூலாகுமிது. காப்புச்செய்யுட்கள் இரண்டும், மாலை 30-ம் ஆக 32 பாடல்கள் உள்ளன. முதலேட்டில் 5 வெவ்வேறு காப்புச் செய்யுட்கள் உள்ளன. அச்சிடப்பட்டுளது.

---

வரிசை எண்: **1140.** சுவடி எண்: **837 (b)**

## வராகிமாலை

ஏடுகள்: *19(19–27)*. ஏட்டின் நிலைமை: நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு: *9–11* வரிகள். அளவு: *13 × 3* செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: *400*. ஆசிரியர்: அறியக் கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம்:

காப்பு.

"அலமு சலந்தண்டு யங்கையிற்சங் காளி
யிலகுமணிப் பூமுடி மெலிந்து — சிலைநுதலாள்
மாவடிவுங் கண்ணுள் வராகி யெனுங்குளிகை
நாவடக்கி யுண்டே நமக்கு."

* * * *

நூல்.

"இருகுழை கோமழந் தாள்புட்ப ராக மிரண்டுகண்ணுங்
குருமணி நீலங்கை கோமே தகமநகங் கூர்வயிரந்
திருநகை முத்துக் கனிவாய்ப் பவழஞ் சிறந்தவல்லி
மரகத நாமத் திருமேனி யும்பச்சை மாணிக்கமே" -க

முடிவு:

"வருந்துணை யென்று வராகியென யன்னையை வாள்த்தி நின்று
பொருந்தினர் தம்மைப் புரமெரிப் போர்தன் புல்லருடல்
பருந்துக்கும் பூதப் பசாசுக்கும் நாய்க்கும் பகர்ந்திடவே
விருந்துண்ணப் பட்டுக் கிடப்பகண் டீருடல் வேறுபட்டே" -எகூ

குறிப்பு:-

இது 833-a போன்றது. இதில் 79 செய்யுட்கள் மூலம் மட்டும் இருக்கின்றன. அச்சாகியுள்ளது.

வரிசை எண் : 1141. சுவடி எண் : 837 (c)

## சூரசங்காரத் திருப்புகழ்

ஏடுகள் : 6. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 9-11 வரிகள். அளவு: 13 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

ஓம் அரகரநமசிவாய ஆனந்தரூபனுய ஆதிகோசாதனுய
அட்சரப் பிற தெட்சனுய் அதிரவுங்கேசனுய
அதிபுவனுதனுய
அமராயடமடம் திரிசூலி டமரானந்தி ஆனந்தபயிரவி
நடன பயிரவிகாலபயிரவி காளகண்ட திரிபுரானந்தப்
பயிரவி அண்டரண்ட பயிரவி ... ... ... ...
... ... ... ... ... ... ... ...

**முடிவு :**

" அப்பனே ஒப்பிலாமணியே சிவசிவமகேசன் சிவஞான
ரூபனே நித்தனே அத்தனே நீலமயிலேசனே சுத்தனே
அப்பனே சூரசங்காரனே அகிலபுவனந்தோறும் ஆதியே
சோதியே அறுமுகப் பெருமாளே."

செகதீசுபரி பாதாரவிந்தமே கெதி
திருப்புகழ் முற்றும்.

சூரசங்காரத் திருப்புகளுக்கு சக்கரம் :






**குறிப்பு :**

இது அருணகிரிநாதரால் இயற்றப்பட்டதாக இருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது. ஆனால் அருணகிரியாரின் திருப்புகழின் பின்னர் சக்கரங்கள் குறிப்பிடும் வழக்கம் இருப்பதாகத் தெரியவில்லை. செய்யுள் நடை அருணகிரிநாதருடையது போல் காணப்படுகின்றது. அச்சாகியிருப்பதாகத் தெரியவில்லை.

---

வரிசை எண் : **1142** சுவடி எண் : **837 (d)**

## ஆறுமுகநயினார் அகவல்

ஏடுகள் : *3.* ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : *9-11* வரிகள். அளவு : *13 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *30*. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

பொன்னிற மேனியும் பொற்பமா முடியு
மின்னறு முகமும் விழிகள்பன் னிரண்டும்
நீறணி நெத்தியும் நீணகை வாயும்
கூறெண் வடிவுங் கூரிய மூக்கும்

**முடிவு :**

" நினைந்தது முடிக்கும் நிமலா போற்றி
ஆன ரமுதே யரசே போற்றி
சேன பதியே சேசே போற்றி
ஆதி யந்தமும் நடுவுந் தெரியாச்
சோதிமெஞ் ஞானச் சுடரே போற்றி
போற்றி போற்றியென் றுன்னை
சாற்றுவன் றிருத்தாள் தந்தரு ளெமெக்கே."

திருச்சிற்றம்பலம்

**குறிப்பு :**

இது கேசாதி பாத வருணனையினையுடைய நல்ல சந்தமுடைய அகவற்பாவாலாயது. நடை சிறப்பாயுளது. பிழைகள் சற்றேயுள்ளன. அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

---

வரிசை எண் : 1143 சுவடி எண் : 837 (e)

## விபூதி தோத்திரம்.

ஏடுகள் : 5. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 9 – 11 வரிகள். அளவு : 13 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 60. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

" கொண்டுகொண் டிட்டவெகு ரூபங்க ளுக்களகு
கோலஞ் சமைந்த நீறு
கொடியயெண் ணுயிரஞ் சமணரைக் கழுவினில்க்
குலைக்களங் கண்ட நீறு
துண்டகண் டப்படக் கொடுவலிய யசுரரைத்
துணியவேல் தொட்ட நீறு
சொல்லரிய பூதப்பி ரேதப் பசாசுபிணி பில்லிவஞ்
சனைசூனியந் துடரிட் டடிக்கும் நீறு."

**முடிவு :**

" முத்துமணி ரத்தினமுடி முத்தண்டை யுங்காலு முளுநீல
மயிலேறி நித்தமு முன்னிற்க வேணும் முருகா [மாக
அத்தனுர் பங்கிலுரை நித்திய கலியாணி யகலாம லென்
மடியவர்க் கருள்தரு கிருபைசெய் பழனிமலை [னுளு
யறுமுகவர் தரு திருவெண் ணீரே." -ம

விபூதி தோத்திரம் முற்றும்.

**குறிப்பு :**

திருநீற்றின் பெருமையினைக்கூற எழுந்த இந்நூல் பல வரலாறுகளை உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றது. பத்துப் பாடல்களைக் கொண்டது. பிழைகள் அதிகம். அச்சிடப்படவில்லை.

வரிசை எண் : 1144. சுவடி எண் : 837 (f)

## போற்றிக் கலிவெண்பா.

ஏடுகள் : 9. ஏட்டின் நிலைமை : நல்லநிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 9 – 11 வரிகள். அளவு : 13 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு.

“ நாற்றிக்கும் போற்றும் நதிமதுரைச் சொக்கரையான்
போற்றிக் கலிவெண்பா போற்றிசெய்யச் — சீற்றமுடன்
றைக்குஞ் சரமுகைத்தோன் சாயவிழித் தோனுதவுங்
கைக்குஞ் சரமுகத்தொன் காப்பு.”

வெண்டா மரையாள் விளங்குமணி நூபுரஞ்சூழ்
தண்டா மரையே சரணம்.

நூல்.

பூமேவுங் கற்பகநா டாளும் புரந்தரனுர்
தீமை விருத்திரனைச் செற்றபழி — போமாறு
பொற்கமலந் தோய்ந்து விமானமிசை பூசிக்க
நற்கருணை செய்த நலம்போற்றி — நற்றவத்தோர்

முடிவு :

வண்ணங்கேட் டற்சித்த மாமுனிவன் தாள்போற்றி
தண்ணங்கை யற்கண்ணி தாள்போற்றி — யண்ணலருள்
போற்றி மதுரைநகர் விண்ணிழிந்த பொற்கோயில்
போற்றி கருணைமுகப் போது.

திருச்சிற்றம்பலம்.

ஞானதேசிகன் துணை.

குரு வாழ்க. சொக்கலிங்க மீனுட்சி துணை. தனலெட்சுமி துணை.
சிவன் உமையே துணை. சுப்பய்யன் வள்ளி தெய்வயானை துணை.

குறிப்பு :

இது கந்தர் கலிவெண்பாவின் வேருயது. மதுரை மீனுட்சி சொக்கநாதர்மீது பாடிய பாடலாகும். இதனை இயற்றியவர் பெயர்

அறியக்கூடவில்லை. நடை சிறந்து காணப்படுகின்றது. இறுதியில் கல்லாலின் புடையமர்ந்து எனத்தொடங்கும் திருவிளையாடற் புராணப் பாடல் முதலாக, முளைத்தானை எனத்தொடங்கும் தேவாரம் ஈறுகச் சில பாடல்கள் எழுதப்பட்டுள்ளன.

வரிசை எண் : **1145** சுவடி எண் : **837 (g)**

## கபிலரகவல்.

ஏடுகள் : *4.* ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : *10–11* வரிகள். அளவு : *13×3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *100.* ஆசிரியர் : கபிலர். முழுமை : முழுதும் உளது.

தொடக்கம் :

கவுலவரகவல்

நான்முகத்தோன் கூறிய நானு வளிவகை
யான சிறப்பி னரும்பொருள் கூறுங்கா
லாண்முதிதோ பெண்முதிதோ
யான்ற உரைமுதிதோ
காள முதிதோ கோள முதிதோ

முடிவு :

யென்னு ளாகிலு மேற்பவர்க் கிட்டுப்
புலையுங் குலையுஞ் சினமும்
நிலையறக் களைந்து நிற்பதை யறிந்து
யானு மல்லது மில்லைப்
பேணி வகுப்பது பிளையெனப் படுமே !

கவுலரகவல் முற்றும்.

குறிப்பு :

ஆதிபகவன் என்பார்க்குப் பிறந்ததாகக் கருதப்படும் எழுவரில் ஔவையார் திருவள்ளுவர் போல, கபிலரும் ஒருவர். சாதிவேறு பாடுகள் கூடாதெனக்கூறும் இந்நூல் பாடவேறுபாடுகளை மிகுதி யாகக் கொண்டுளது. இந்நூல் உலகத்தின் இயல்பினைக் கூறுவது.

வரிசை எண் : **1146** சுவடி எண் : **837 (h)**

## திருப்புகழ்

ஏடுகள் : *8.* ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : *8-9* வரிகள். அளவு : *13 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *100.* ஆசிரியர் : அருணகிரியார். முழுமை : இல்லை.

**தொடக்கம் :**

விந்துப் புளகித யின்பத் துறுவது
சிந்திக் கருவில் நிரம்பிச் சிறுதுளி
விரித்த தழகொடு தரித்த தொருசுழி
யிரத்த குளிகையொ டுரத்து ளாவது

**முடிவு :**

தொந்திப் புணர்செயல் கண்டுத் திளநகை
யிஞ்சொற் சொலியவள் முன்புத் தொருகணை
தொடுத்த வெளழ்வா யெடுத்த தனிமயில்
நடத்தி வளர்கிரி தனக்குள் மருவிய—பெருமாளே. -க

**குறிப்பு :**

அருணகிரியார் இயற்றிய இத்திருப்புகழ் திருவருணையில் பாடப் பட்டது. அச்சுப் பாடலுக்கும் இதற்கும் பல வேறுபாடுகள் பாட பேதமாகக் காணப்படுகின்றன. ஒரே பாடல்தான் உளது. இதன் பின்னர் 'தாருற்ற வேலொருகை நவகோடி பானுமதி', எனத் தொடங்கும் பாடல்களும், 'வீரப்பிரசண்ட மயிலேறி வருகடவுள்' எனத்தொடங்கும் பாடலும் காணப்படுகின்றன. இதன் பின்னர் சக்கரங்களுடன் கூடிய மந்திர சாத்திர ஏடுகள் 3 காணப்படுகின்றன.

---

வரிசை எண் : **1147.** சுவடி எண் : **894**

## சச்சிதானந்தமாலை.

ஏடுகள் : *19.* ஏட்டின் நிலைமை : சிறிது ஏடுகள் முறிந்துள்ளன. பக்கத்திற்கு : *6* வரிகள். அளவு *23 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *200.* ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இருக்கின்றது.

தொடக்கம் :

" முச்சுட ராகி யொன்றாய்
முடிந்ததோர் சோதி பாதம்
அச்சுத னயனுங் காணா
வகண்டமா யளவில் லாத
சச்சிதா னந்த மான
சதாசிவ குருவைப் பாட
மெய்ச்சுட ருதைய மான
விளக்கொளி யுண்மை சேர்வாம்-" -க

முடிவு :

பரமுமிது பொருளுமிது பாசமிது தெளிவுமிது
பதினாலு லோக மிதுவே
பாவவினை யாலரவு மோசமிது பாழறிவு
பாழுதன நடன மிதுவே
யுபையமிறு காலோசை யிரவுபக லன்றியே
யுச்சார சார மதிலே
யொளிவெளியி லொளியாக யுபநிடத நடனமா
யூழிவிதி வாழி யெனவே
சிரமகுட முடியிலே கனகமணி யசைவிலே
சிவஞான தீப மதுபார்
திருமருவு சிவசோதி பெருகுகதி தருவீடு
தெரிசினைக ளாகி முடியும்
சரமுமது பதிசேர்வை சகலகலை யறிவாக
சாயுட்சிய பாத மருள்வாய்
தற்பரா னந்தசபை நிற்களா னந்தசிவ
சச்சிதா னந்த குருவே. -நய

சச்சிதானந்தமாலை முற்றும்.
சுந்தரமூர்த்தி துணை.
வீரவிநாயகன் துணை.
வீரவிநாயகமூர்த்தி துணை.
சுப்பையா துணை.
சிவகாமயம்மன் துணை.

குறிப்பு :

இது வேதாந்த நூல். பாயிரத்தில் 4 பாடல்கள் இருப்பினும் ஆசிரியர் பெயர் அறியக்கூடவில்லை. சச்சிதானந்த குருவைப் போற்றி வணங்கும் பாடல், "தற்பரானந்த சபை நிற்களானந்த சிவ சச்சிதானந்த குருவே" என்ற ஈற்றடியினைக் கொண்டது. பாயிரம் நீங்கலாக முப்பது செய்யுட்கள் இருக்கின்றன. பாட்டு முதல் நினைப்புச் செய்யுளும் காணப்படுகின்றது. பின்னர் வேறு பாடல் எழுதிய ஏடு ஒன்று இருபுறமும் முறிந்து காணப்படுகின்றது. நிறைந்த பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன.

---

வரிசை எண் : **1148** சுவடி எண் : **893 (a)**

## சதுர்க்கோண மாலை.

ஏடுகள் : 8. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 13 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 160. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" உத்ததலம் பெருந்துரையு நாடென்னுந் தேசம்
உள்புகுந்து சங்குநதி தீர்த்த மாடி
நித்தம்வளம் நாடணுகி வைகுண்ட மேவி
நெடியோனை யடிபணிந்து நிலவு ஞலே
கத்தனையு மந்திசந்தி உச்சி மூன்று
காலமுநீ தெரிசித்து கவலை தீரப்
பெத்தனையே நெஞ்சகமே யிந்தப் பேறு
பெத்தவற்குப் பிரவியுமுண் டென்றென்ன
லாமோ. -க

முடிவு :

" தேடறிய திருமேனி அயனு மாலும்
தேடியரி யாதபளம் பொருளை நீயும்
தேடியரிந் தாடியகால் சிவந்த பாதந்
தெரிசித்து சதிர்கோண மாலை பத்தும்

பாடிவிட்டாய் நெஞ்சகமே பற்றுங் கற்று
படித்தோர்கள் பழவிளேகள் ஒளித்து மேலும்
பாடிவிட்டாய் சுயவாகுப் பெறுவ ரின்னூல்ப்
பயனறியில் மெய்ஞ்ஞானத் தலேவர் தாமே. -மிக

சதுர்க்கோணமாலே.

**காலம் :-**

வென்னிமாலே பிரந்த நட்சியெத்திரம் சீலக வரிஷசம் வைய்யாசி மாதம் ரெண்டாந்தேதி வெள்ளிக்கிழமை பரணி நட்சியெத்திரம்.

**குறிப்பு :**

இந்நூல் 759 (e) போன்றது. 11 செய்யுட்கள் இருக்கின்றன.

வரிசை எண் : **1149** சுவடி எண் : **893 (b)**

## ரோமரிசி ஞானம்.

ஏடுகள் ; 7. ஏட்டின் நிலேமை : நல்ல நிலேமை. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 13 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : ரோமரிஷி. முழுமை : முழுதும் இல்லே.

**தொடக்கம் :**

" கண்டுகொள்ளு இப்படியேநீ காய சித்தி
கருத்தில்வைத்து மனமிரங்க செய்தா யானல்
உண்டுகொண்டு அமுற்தமதை யிருக்க லாகும்
ஒருவருசம் ஒருநாள்ப்போல் உனக்குத் தோணும்
பண்டுசெய்த பளவினேக ளல்லாம் போகும்
பரமகுரு பாதமதைக் காண லாகும்
திண்டுமுண்டு செய்யாதே மகனே நீயும்
தீற்கமான சாயுச்சியபதஞ் சார்ந்து நில்லே."
-நாஙய

குண்டலிசக்தி துணே.

முடிவு :

"சொல்லிவிட்டேன் ஞானமது மனத்தி னாலே
சொலப்பெரிய அரிவதுக்கு அவுள்த மாகும்
வல்லியெனுந் திரோதாய மாய்கை போச்சு
மசக்கமென்ற அறிவெல்லா மாண்டு போச்சு
கொல்லிமலை தனிலேறி யென்ன செய்ய
குடிகெடுத்த பாசம்வந்து கூடுங் கூடும்
சல்லியமென் றெண்ணாதே ஞானந் தன்னை
சார்ந்தாகா லுந்தனுக்குச் சாவு போச்சே."

- நாசய

குண்டலி சக்தி துணை.

குறிப்பு :

தத்துவத்தைப் போதிக்கும் இந்நூல் 330 முதல் 340-வது பாடல் வரை 11 பாடல்கள் உள்ளன. எளிய நடையில் உள்ளது.

வரிசை எண் : 1150. சுவடி எண் : 893 (c)

## அகத்தியர் யோகம் பதினாறு.

ஏடுகள் : 13. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 13 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"ஆதிமறை சாஷ்த்திரங்கள் பிறந்த வாறும்
யடிமுடியு நடுவாகிப் பொருள்மூன் றாகி
வேதியனு மால்சிவனு நின்ற வாரும்
வேதமுட னாகமங்கள் பிறந்த வாறும்
சாதிபலத் தொளிமுரைய ளான வாறுத்
தன்னுள்ளே அனுஷ்ட்டாங்கமஞ் செய்யும் வாறும்
ஓதிவந்தால் யவரவர்கள் செய்த வாறும்
ஓம்காரக் கணபதி காப்ப தாமே."

-க

முடிவு :

"காணப்பா காவியத்துக் காக யிந்தக்
கரும்பொருளை பதினாரில் கருதிச் சொன்னேன்
வீணப்பா வென்றுசொல்லி யிந்த நூலை
வெளிவிட்டா லுந்தனுக்கு யென்மேல் லாணை
ஆணையப்பா முக்கால் மாணை யாணை
அறிந்துணர்ந்த ஞானிகளை அடுத்துச் சாறு
பானப்பால் உண்டிருந்தால் பறத்தைப் போற்றி
பதினாறு சிவசூட்சம் பொருள்தான் முற்றே."

குறிப்பு :

பதினாறு செய்யுட்களைக்கொண்ட இந்நூல் யேக தத்துவ வகையைச் சாரும். நல்ல நூலாகக் காணப்படுகின்றது. பிழைகள் மிகுதி. இதன் பின்னர் 'ஆமப்பா' எனத்தொடங்கும் பாடலொன்று எழுதிய ஏடு ஒன்றுள்ளது.

வரிசை எண் : **1151** சுவடி எண் : **916**

## சபாபதி மாலை.

ஏடுகள் : 50. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் சிறிது ஒடிந்தும் முறிந்தும் உள்ளன. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 24 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 400. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"மலைக்கால்ப் பொளிந்து நன்னீர் கதித்தெரி வரையுதிரங்
குலைத்தோடில் வடசிறத் துண்டங் கலமாரிக் குரையது
போல
வலைத்தாதா வுதிருத்தா னுகந்து மிகுந்து மென்மேல்
தலைத்தொங்கு மன்றிக் குரையாது ரற்றின சபாபதியே"
-க

முடிவு :

"அறுக்கன் மகாதிசை ஆண்டாறு மூன்றில டவற்கெ
பெறுக்கிய லக்கத்தை முன்போல் நிதமும் பெருக்கிக்
கண்ட

திருக்குமறம் வியாழத்தின் புத்தியற மிவையென்பத்
தொன்ருய்த்
தறுக்கியந் தத்திசை கொள்வார்கள் ரற்றின
சபாபதியே.'' -ஈ

குறிப்பு :

தோத்திரப் பாடல் வகையைச் சேர்ந்தது. இந்நூல் "இரத்தின சபாபதியே" என்ற முத்திரை அடியினைக் கொண்டது. நூறு பாடல்களுக்கும் அட்டவணை எழுதிய மூன்று ஏடுகள் முதலில் கோர்க்கப்பட்டுள்ளன. சோதிடம் என்த்தகு பாடல்களும் இதில் காணப்படுகின்றன.

---

வரிசை எண் : **1152.** சுவடி எண் : **849**

## சுப்பிரமணியர் மாலை

ஏடுகள் : *16.* ஏட்டின் நிலைமை : மிகவும் பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : *4* வரிகள். அளவு : *43 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *200.* ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"சிர்பெருகுந் தென்பழனிச் சண்முகவேழ்
சுப்பிர மன்னியர் மாலைபாடக்
கார்பெரு குங்கரி முகவேழ்க்
கணபதியை அனுதினமுங் கருத்திலுன்னிப்
பார்பெருகும் பழனிமலைக் கதிபதிமேல்
பைந்தமிளால் மாலை பாட
ஆர்பெருகும் ஆனைமுகத் தைங்கரனே
அனுதினமும் அருள்செய் வாயே.'' -க

முடிவு :

"அருகோணச் சக்கரம் அடவுடன் செய்து
அட்சரச் சூலமு நிரைத்து

விரசுடன் வீர வாகுவா பீஷம்
விட்டுநால் வாசலு நிரைத்து
சுருதியாய் அருமுக பீஷமும் விட்டு
சோதியே பவாவெனச் செவித்து
உருதியாய் அருமுக தெரிசினை கொடுப்பார்
உயிர்குறு சுப்பிர மன்னியனே.'' -௩௰௨

குறிப்பு :

பழனிமலைமீது எழுந்தருளியுள்ள முருகப்பிரான்மீது பாடியருளிய மாலையாகுமிது. முற்றுமில்லாததால் செய்யுள் எண்ணிக்கை இத்தனை என்பது தெரியவில்லை. 32 செய்யுட்கள் இருக்கின்றன. அச்சாகியுள்ளதாகத் தெரியவில்லை.

வரிசை எண் : 1153. சுவடி எண் : 924

## தவுகீது மாலை.

ஏடுகள் : 28. ஏட்டின் நிலைமை : நல்லநிலை. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 17 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1600. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு.

''எல்லா வுயிர்க்கு மிரணமிக வேகொடுக்கும்
வல்லானைக் கண்டு மகிள்வதற்கு — நல்லவர்கள்
தவுகீது மாலைதனைச் சாற்றினேன் தாரணியில்
அவமேது மில்லா தவற்கு.''

நூல்.

''பூரணமா யகத்தைச் சமதாய் பொங்குமீ ரேழுலகுங்
காரணமாய் நிரைந்த யிரையருள் காவலன் காப்பாமே. -க
காலமலா மூன்று மறிந்து கருத்துறவே தெளிந்து
வாலகுரு விரசூல் முகம்மது வள்ளலுங் காப்பாமே.''-உ

முடிவு :

" நின்றுநின்று பார்த்து நிலையா யிருப்பவர்க்கு
விண்டுவிண்டு தானுரைக்க வேணுமோ—யென்றும்
நானென் றிருப்பவனே நாடுவார் நாட்டமெல்லாம்
தானென் றிருக்குமே தான்.''

-ாகூக

நன்றாக நாயன் துணை.

குறிப்பு :

இது வேதாந்த நூல்.முகமதியர்களின் தத்துவத்தினைக் கூறுவது. பிழைகள் மலிந்து காணப்படுகின்றன. இந்நூலில் 191 கண்ணிகள் உள்ளன. எளிய இனிய நடையில் உள்ளது.

---

வரிசை எண் : **1154** சுவடி எண் : **882 (உ)**

## திருமேனிக் கருப்பு

ஏடுகள் : *11.* ஏட்டின் நிலைமை : ஓரங்கள் முறிந்தும், பூச்சியரித்தும் உள்ளன. பக்கத்திற்கு : *4* வரிகள். அளவு: *39 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : **200** ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

"நெஞ்சமே வேறு நினையாத பஞ்சவற்குத்
தஞ்சமே யாயிருந்த தாடாளன் — மிஞ்சவே
கல்லை யுருவாக்கி னன்கழலே சரணாகத்
தொல்லைத் தமிழால் துதி."

நூல்.

"மன்றார் பசுந்துளப மாலையுஞ் சாத்தி மகிள்ந்திருந்து
சென்றாயர் வீட்டினிற் பால்வெண்ணெய் சேரத்
திருடித்தின்று
அன்றாட்சி கைகொண் டடித்ததற் கொய்தானு
மல்லால்க்
கன்றால் கனியெறிந் தோதிரு மேனிக் கறுத்ததுவே.''

முடிவு :

... ... ... ...த்தை நாற்பத் திரண்டையுஞ் சீருடனே
... ... ... ... வாகேட்க வல்லார்தம் மாரியராய்
... ... ... ... நீடுழி வாழ்ந்துபின் ஞயகமாய்ப்
... ... ... ... ண்டத் தீடேற்றித் தெய்வபதந்தருமே."

திருமேனிக் கருப்பு முகிந்தது முற்றும்.
குமரஞயகன் துணை.
ராமசெயம்.

குறிப்பு :

இது கண்ணபிரானுடைய திருமேனி, கறுமைநிறம் கொண்டதன் காரணம் கூறும் நூல். இதில் கோபாலனுடைய திருவிளையாடல்கள் பேசப்படுகின்றன. செய்யுட்களின் தொடக்கம் உள்ள ஏடுகள் முறிந்துள்ளன. 42 செய்யுட்கள் உள்ளன.

---

வரிசை எண் : **1155** சுவடி எண் : **882 (b)**

## அம்பிகை மாலை

ஏடுகள் : 8. ஏட்டின் நிலை : முறிந்தும் பூச்சியரித்தும் உள்ளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 39 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுதும் உளது.

தொடக்கம் :

கடக்குந் திருவிளையாட்டோ டறுபத்தி நாலுஞ் சொக்கர்
அடக்குந் தென்கூடலி லம்பிகை மாலை யருவிமதத்
தடக்கும் பகம்பச் சிறுகட் புகர்முகத் தாலவட்டம்
முடக்குந் தடக்கை ஒருகோட்டு வாரண முன்னிற்கவே!

நூல்.

திருவே விளைந்தசெந் தேனே வடிவிட்ட தெள்ளமுதே
உருவே மடப்பிள்ளை ஓதிமமே ஒற்றை யாட்டைபூந்
தருவே நின்ருமரைத் தாளேசரணஞ் சரணங்கண்டாய்
அருவே யணங்கர சேமது ராபுரி யம்பிகையே. -க

முடிவு :

... ... ... ... ததமு தூட்டிப் பேயினுயிர்
... ... ... ... கானவட்குன்னற் சென்ருல்
... ... ... ... ல்ம்பிகை மாலே யய்யாறுகவி
... ... ... ... ம் பொன்னுடும் படைப்பவரே ! -நய

அம்பிகை மாலே முகிந்தது முற்றும்.

குறிப்பு :

மதுரைக்கரசியாம் மீனுட்சியம்மை மீது பாடிய மாலேயாகுமிது ஓரங்கள் முறிந்திருப்பதால் சரியான குறிப்புகள் கிடைக்கவில்லே. 30 கட்டளேக் கலித்துறைகள் உள்ளன. அய்யாறுகவி என இறுதிப் பாடலில் காணப்படுவதால் அது இந்நூலின் 30 செய்யுட்களேக் குறிப்பதோடு இதன் ஆசிரியர் அய்யாறுகவி என்றிருக்கலாமோ என ஐயுற இடமுள்ளது.

---

வரிசை எண் : **1156.** சுவடி எண் : **882 (c)**

## கந்தரனுபூதி

ஏடுகள் : 8. ஏட்டின் நிலேமை : பூச்சியரித்தும், ஓரங்கள் முறிந்தும் உள்ளன. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 39 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அருணகிரிநாதர். முழுமை : முழுவதும் இல்லே.

தொடக்கம் :

காப்பு.

" ... ... ... ... ... ... ... ... ... ... ... திருமகனுர்
... ... ... ... ... திதனேக் கட்டுரைக்கு — முந்தவே
பாரதத்தை மேருவினில்ப் பண்பாக வேபொறித்த
கார்முகத்துக் குஞ்சரமே காப்பு."

நூல்.

" ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் படியே பணிய வருள்வாய்
தேடுங் கயமா முகனேச் செருவிற்
சாடுந் தனியா னேசகோ தரனே."

முடிவு :

" ... ... ... ... ... பூதியடங்கலுமே
... ... ... ... ... பத்திமூன்றிலொன்றைப்
... ... ... ... ... ராபயன சொன்னோர்கள்
... ... ... ... ... ளலபெற்றிடுவார்." – சஉ

கந்தரனுபூதி முகிந்தது முற்றும்.

குறிப்பு :

இந்நூல் அச்சிடப்பட்டுளது. ஏட்டின் ஓரங்கள் ஒடிந்துள்ளன. காப்புச் செய்யுளும் இறுதிச் செய்யுளும் நீங்கலாக 43 பாடல்களே உள்ளன. எஞ்சிய பாடல்கள் காணப்படவில்லை. பிழைகள் அதிகம்.

வரிசை எண் : 1157 சுவடி எண் : 833 (a)

## வராகி மாலை (சக்கரத்துடன்)

ஏடுகள் : 18. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும் எலி கடித்தும் உள்ளது. பக்கத்திற்கு : 5–6 வரிகள் அளவு : 18 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" பெருக்குங் கருணை வராகிதன் மாலையைப் பேசுதற்கு
நெருக்குங் குவிமுலை அம்பிகை வாமநிறைந் துமகிழ்ந்
திருக்கும் பரன்சுதன் அங்குச பாசம்விட் டென்வினையைக்
கருக்குந் தகமை விநாயகன் சேவடி காப்பதுவே "

நூல்

### வசீகர மாரணம்

இருகுழை கோமளந் தாள்பற்ப ராகம் இரண்டுகண்ணுங்
குருமணி நீலங்கைக் கோமே தகம்நகங் கூர்வயிரந்
திருநகை முத்துக் கனிவாய் பவழஞ் சிறந்தவல்லி
மரகத (நா)மத் திருமேனி யும்பச்சை மாணிக்கமே -க

முடிவு :

பச்சைக்காயி மற்றும் பலகார மெல்லாம்
சேர வைக்கவும் வடை தோசை
பணியார மெல்லாம் ... .. ... ...
இந்த மெரை தேவியை அற்சினை
பண்ணவும்.

காலம் : (Colophon)

வெகுதானிய ௵ தை மாசம் ௨ தேதி பல்லடந்
தாலூக்கா.............

குறிப்பு :-

தோத்திரத்துடன் கூடிய மாந்திரீக நூல். வராஹி என்னும் தெய்வத்தினைப் போற்றி வணங்கி வரம் வேண்டுவது. செய்யுட்களுக் கெல்லாம் சக்கரங்கள் உள்ளன. அதிக பிழைகள் காணப்படு கின்றன. அச்சிடப்பட்டுள்ளது. கடைசியில் ஒரு ஏடு 'வராகி மாலை' என்ற பெயரால் 'அலமுகலந்தண்டு' எனத் தொடங்கும் பாடலுடன் இருக்கிறது.

வரிசை எண் : 1158 சுவடி எண் : 833 (b)

## மீனாட்சியம்மை அகவல்.

ஏடுகள் : 10. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும், எலி கடித்தும் உள்ளது. பக்கத்திற்கு : 5 — 7 வரிகள். அளவு : 18 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

குறிப்பு :

இந்நூல் எண் 830 (d) பிரிவைப்போன்றது. அச்சாகியுள்ளது.

வரிசை எண் : 1159 சுவடி எண் : 898 (a)

## வராகி மாலை (சக்கரங்களுடன்)

ஏடுகள் : 28. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை.

பக்கத்திற்கு: 6-7 வரிகள். அளவு: 18 × 3.5 செ. மீ. எழுத்து: தமிழ். கி எண்ணிக்கை: 250. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் உள்ளது.

தொடக்கம்:

காப்பு.

"பெருக்குங் கருணை ,வராகிதன் மாலையைப் பேசுதற்கு
நெருக்குங் குவிமுலை யம்பிகை வாமம் நிறைந்துமகிழ்ந்
திருக்கும் பரன்சுத னங்கிஷ பாச னெனதுவினை
கருக்குந் தகமை விஞயகன் சேவடி காப்பதுவே."

தேவி சகாயம்.

முடிவு:

மாரணவராகி சக்கரங்களுக்கு யேகாட்சர மந்திரம். "ஓம் வராகி சிவசம்வராகியனும் வராகியனுப் பிரணமான வராகி யடங்கி யொடுங்கிப் போகச்-சிவா. ஆம்-ஈம்—ஊம். மாறய மாறய."

மூலமந்திர முற்றும்.

குறிப்பு:

இது தோத்திர நூலாகும். திருமால் வடிவமாக உருக்கொண்ட சக்தி வராகியாவாள். அத்தெய்வத்தை வணங்கிப் பேறுபெறும் வழிகள் இதில் கூறப்பட்டுள்ளன. 25 என்னும் எண்ணுள்ள ஏடு காலியாக உள்ளது. இந்நூலின் இறுதியில் சல்லியம் கூறப்பட்டுள்ள 4 ஏடுகள் இணைக்கப்பட்டுள்ளன.

---

வரிசை எண்: **1160** சுவடி எண்: **898 (b)**

## சிதம்பர ரகசியம்.

ஏடுகள்: 11. ஏட்டின் நிலைமை: நல்ல நிலைமை. பக்கத்திற்கு: 11 வரிகள். அளவு: 18 × 3.5 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 200. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம்:

"எதிரில்லா அஞ்செழுத்தாய் அஞ்சுமுக மாகி
எண்ணிறந்த ஒருனூற் றிருபத் தஞ்சாய்

எதிரில்லா விஞ்சையாய் கலைக்கியான மாகி
யிகலகுத மிரண்டுக்கு முன்னே தோன்றி
எதிரில்லாத் தோற்றெடுக்க மெனுவகையு மாகி
எதிரில்லா அஞ்செழுத்தின் மகிமை தன்னை
யே:ற்றுறேன் ஒவ்வொன்றுக் கிருபத் தஞ்சே."

முடிவு :

காணப்பா ஈசானம் இருபத் தஞ்சுங்
களங்கறச் சொல்லிவிட்டேன் நூற்றிருபத்தஞ்சும்
பூணப்பா யிதினலே சித்தி முத்தி
பூணவே லடிக்குமடா பூசை வேணும்
ஊணப்பா அஞ்செழு ... ... ... ... ... ... ... ...

குறிப்பு :

இது தத்துவத்தைக் கூறும் நூலாகும். 41 செய்யுட்கள் உள்ளன. 12-வது ஏடு காணவில்லை. 13, 14 ஏடுகளில் வேறு செய்யுட்கள் காணப்படுகின்றன.

---

வரிசை எண் : **1161** சுவடி எண் : **898 (c)**

## சுக்கிஷம் திருமந்திரம்.

ஏடுகள் : 3. ஏட்டின் நிலை : நல்லநிலை. பக்கத்திற்கு : 9 வரிகள். அளவு : 18 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 60. ஆசிரியர் . அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"முடிந்தவிம் மந்திர மூலம தாக
வடுத்தவி லக்கமு மக்கரந் தானு
மடுத்திடு வீச மறைவதி னுறு
மெடுக்குங் கரும மினிச்சொல்லு வோமே." -க

முடிவு :

" தீரகிரி பார்வரைவார் பருகீர் திரிந்தூருவித்
தேடனைக் கொத்ததுருவம்

கார்தருவீர பிரிபீர் வீரைதார் கரிசீர்
போற்றிலகத்தைச் சேரப் பிரிந்தே. -டுரு

குறிப்பு :

திருமூலர் திருமந்திரம் போன்றது. 15 செய்யுட்கள் காணப் படுகின்றன. தத்துவ வகையைச் சாரும்.

## இரட்டைமணிமாலை

வரிசை எண் : 1162. சுவடி எண் : 976 (a)

## பிள்ளையாரிரட்டைமணி மாலை

ஏடுகள் : 3 ஏட்டின் நிலைமை : பூச்சியரித்த நிலை பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 43 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

காப்பு.

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாக்கு
மாதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர் தங் கை. -க

முடிவு :

" விண்ணுத னுங்கிய விண்ணுமண் ணுஞ்செய்
வினைப்பயனாற்
பண்ணுத னுங்கட னென்பர்மெய் யன்பர்கள்
பாய்மதமாக்
கண்ணுத னுங்கிய நஞ்சமு துண்ட கருமிடற்றுப்
பெண்ணுத னும்பிரி யானொரு பாகம் பெருமகனே" -யசு

குறிப்பு :

ஏடுகள் மிகச் சிதிலம். பதினாறு பாடல்களே உள்ளன. பிள்ளையார்மீது வெண்பாவும், கட்டளைக் கலித்துறையுமாகப் பாடிய மாலையாகுமிது.

வரிசை எண்: **1163** சுவடி எண்: **976 (b)**

## கந்தரனுபூதி

ஏடுகள்: 5. ஏட்டின் நிலைமை: பூச்சியரித்த நிலை பக்கத்திற்கு: 4 வரிகள். அளவு: 43 × 2.5 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 300. ஆசிரியர்: அருணகிரிநாதர். முழுமை: முழுவதும் உள்ளது.

**தொடக்கம்:**

காப்பு

" அக்திமதி சூடு மரனுர் திருமகனுர்
கந்தனனு பூதிதனைக் கட்டுரைக்க—முந்தவே
பாரதத்தை மெருவினிற் பண்பாக வேபொறித்த
கார்முகத்துக் குஞ்சரமே காப்பு."

நூல்.

ஆடும் பரிவே லணிசெ வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே. -க

**முடிவு:**

சாடுந் தனிவென் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடுஞ் சுடர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே."

கந்தரனுபூதி முற்றிற்று.

முற்றும்.

**குறிப்பு:**

இதில் 32 பாடல்கள் உள்ளன. பாடவேறுபாடுகள் காணப் படுகின்றன. அச்சாகியுளது. அச்சு நூலில் 51 செய்யுட்கள் உள்ளன.

வரிசை எண் : **1164** சுவடி எண் : **976 (c)**

## திரிகடுக வெண்பா

ஏடுகள் : 18. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துள்ளது பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 43 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உளது.

தொடக்கம் :

" கண்ணகன் ஞால மளந்ததூஉங் காமருசீர்த்
தண்ணம் பூங்குருந்தஞ் சாய்த்ததூஉ—நண்ணிய
மாயச் சகட முதைத்ததூஉ மிம்மூன்றும்
பூவைப்பூ வண்ண னடி. " -க

முடிவு :

" பத்திமை சான்ற படையும் பலாதொகினு
மெத்திசையு மஞ்சா வெயிலானும்—வைத்தமைந்த
வெண்மணி லுலவா விருநிதியு மிம்மூன்று
மண்ணாளும் வேந்தர்க் குறுப்பு. " -ரக

குறிப்பு :

101 செய்யுட்கள் உள்ளன. இதன் பின்னுள்ள 18-வது ஏடு பாதியாக முறிந்துள்ளதால் 102-வது பாடல் உளதா எனத் தெரியவில்லை. முற்றும் என்று எழுதப்படவில்லை. சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூன்றும் சேர்த்துச் செய்யப்படும் மருந்துக்கு திரிகடுகம் எனப் பெயர். அது நோய் நீக்கும். இதுவும் மூன்று செய்திகளை ஒவ்வொரு பாடலிலும் கூறுவதால் இதற்கு அப்பெயர் வரலாயிற்று. இது அறியாமையை நீக்கும். கடைசி ஏட்டில்

ஊரும் வரியரவு மொண்குற . . . . யானை
பேர்வெறிந்த பெருமணியை க . . . டய
மின்னென்று புற்றடையும் வெங்கடமே மேலசுர
பொன்னென் னம்மான திடம்.

என்ற செய்யுள் காணப்படுகிறது.

## தனிப்பாடல்கள்.

வரிசை எண் : **1165.** சுவடி எண் : **746**

# தனிப்பாடற்றிரட்டு.

ஏடுகள் : 80. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 4 — 6 வரிகள். அளவு : 42 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2,100. ஆசிரியர் : பலர். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

"வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் — வெள்ளை
அரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய்."

"முத்திருக்குங் கொம்பசைக்கும் மூரித்தண் டேந்திவரும்
கொத்திருக்கு நேரே குலைசாய்க்கும் — எத்திசைக்கும்
தேமணக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆமணக்கு மால்யானை யாம்."

**முடிவு :**

கண்களிக் கிம்படிக் கண்டுகொண் டேன்கடம் பாடவியிற்
பெண்களிக் குங்குரல் வீணையுங் கையும் பயோதரமும்
மண்களிக் கிம்பச்சை வெண்ணமு மாகி மதங்கற்குலம்
பெண்களிக் கின்டோண் டியயென் பேராட்டிதன்
பேரழகோ !

**குறிப்பு :**

இது பல சமயங்களில் பல புலவர்கள் பாடிய பாடல்களாகும். இதில் காளமேகம், சொக்கநாதப்புலவர், ஒட்டக்கூத்தர் முதலான புலவர்கள் பாடிய பாடல்கள் இருக்கின்றன. மிகமிகச் சிதிலமாயுள்ளது. அச்சாகியுள்ளது.

வரிசை எண் : **1166** சுவடி எண் : **839**

## தனிப்பாடற்றிரட்டு.

ஏடுகள் : *110.* ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 27 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2800. ஆசிரியர் : பல புலவர்கள். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

(தாயுமானசுவாமி வாக்கு.)

பூங்கமல நயனமும் பொழிகருணை வதனமும்
புன்முறுவ னிலவெ றிப்பும்
பொலிசடா டவியுமதி லுறைநிலா மதியுமொளிர்
புனைகுழை யிலங்கு காதுந்
தேங்குபர மானந்த சின்மயா காயமாஞ்
சித்தியக்குண முத்திரை யின்மேற்
சிவானுபவ நீங்கினோர் சேரவருள் சிவமாலை
சிவஞான புத்த கமுமோர்
வேங்கையத ளுடையுஞ் சரற்கால மதிகோடி
வெள்ளமென நிறைவ டிவமும்
மேலான தெய்வநா மன்றிவே றில்லையிது
மெய்யென் றெடுத்த கனலு
மோங்குவட வாலடியி லுறைகின்ற தெய்வமே
வுனையன்றி வேறு நினையே
னென்றுருகி யானந்த வொளியாகி யென்னுயிர்க்
குயிரான பரம சிவமே."

**முடிவு :**

செல்வரைப் பின்சென்று சங்கடம் பேசித் தினந்தினமும்
பல்லினைக் காட்டிப் பரதவி யாமற் பராநந்தத்தி
னெல்லையிற் புக்கிட யேகாந்த மாயெனக் காமிடத்தே
யல்லலற் றென்றிருப் பேனத்த னேகயி லாயத்தனே -ச

**குறிப்பு :**

இந்நூலில் பல புலவர்கள் பாடிய தனிப்பாடல்கள் காணப் படுகின்றன. இச்சுவடியில் காணப்படுகின்ற தனிப்பாடல்களின் அட்டவணை அடுத்த பக்கத்தில் தரப்பட்டுள்ளது.

## நூல்.

தாயுமானசுவாமி வாக்கு
பட்டினத்து சுவாமி
திரிகூடசலசித்திரசபை
விருத்தம்
ஸ்ரீ காளத்திநாதர்
பேரி லாசிரிய விருத்தம்
புதுவை வைத்தியநாதர்
பேரி லாசிரிய விருத்தம்
ஸ்ரீ கோமுத்தீசுரசுவாமி
பேரி லாசிரிய விருத்தம்
திருமாளிகைத்தேவ
சிகாமணிமாலை
பதிற்றுப்பத்தந்தாதி
சங்கச் செய்யுள்
கலைசைக் கோவை
கொச்சைக் கோவை
கருமாணிக்கள் கோவை
குலோத்துங்கன் கோவை
விக்கிரம சோழன் கோவை
கிருஷ்ணன் கோவை
மழவராயன் கோவை
புகழேந்தியும், ஒட்டக்
கூத்தனும் ஒட்டியும்,
வெட்டியும் பாடிய பாடல்
கவரிக்கோவை
புலியூர்க்கோவை
மாறன் கோவை
ஆமாத்தூர்க் கோவை
குற்றுலக் கோவை
நெல்லைக் கோவை
பாபவிநாசத்துக் கோவை
வேலவன் கோவை
சிதம்பரநாதன் கோவை
திருப்புகலூரந்தாதி
மீனுட்சியம்மன் துதி
விருத்தாசல புராணம்
மூக்குத்தி வருணனை
திருக்கழுக்குன்றத்தந்தாதி
ஒற்றியூர்த்துறை
திருச்செந்தில்கலித்துறை
சொக்கநாத வெண்பா
சிங்கைவெண்பா
திருவாய்மொழி செவ்வழி
கம்பன்பாடிய பாடல்கள்
நீதிவெண்பா
குமாரசுவாமிக்குரிசில்
சரவணேற்பவன் துதித்தது
புன்னைவனநாதன் பாடல்
காந்தம்
கம்பராமாயணம்
விவேக சிந்தாமணி
தேவாரம்
பெரியபுராணம்

ஆகிய நூல்கள் காணப்படுகின்றன. இந்நூல்களில் சில நூல்கள் மட்டும் முழுதும் காணப்படுகின்றன.

## சித்தர் பாடல்கள்.

வரிசை எண் : 1167. சுவடி எண் : 827 (௨)

### அழுகண்ணியார் பாடல்.

ஏடுகள் : 14. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 7 — 9 வரிகள். அளவு : 11.5 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : அழுகண்ணியார். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

ஐங்கரனைத் தெண்டனிட்டு ஆத்தா வானந்தி
யருளடைய வேணு மென்று
தங்காமல் வந்தொருவ ஞத்தா ளானந்தி
தற்சொரூ பங்கொண் டாண்டி -௧

முடிவு :

வித்துருவத் தோடே யெடியாத்தா ளானந்தி
விஞயக னைத்தாள் தொழுது
யுளத்துருவை நீக்கியெடி யாத்தா ளானந்தி
யுறவோ டறுத்தாண்டி -௫௧

குருபாத முன்னிற்கக் குமரன் துணை.

குறிப்பு :

பதினெண் சித்தர்களில் ஒருவரான அழுகணிச் சித்தர் பாடிய பாடல்கள் நல்ல கருத்தாழமும் தத்துவச் செறிவும் கொண்டவை. கண்ணம்மா என்று கூறி அழுவது போலத் தத்துவக் கருத்துக்களைக் கூறுவது. இந்நூல் ஆத்தாளானந்தி என்று கூறி விளக்குவதாக உள்ளது. அதனுல் 18 சித்தரின் வேருயது எனக்கருத இடமுளது. அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

வரிசை எண் : **1168.** சுவடி எண் : **827 (b)**

## அகப்பைச் சித்தர் பாடல்.

ஏடுகள் : 6. ஏட்டின் நிலைமை : நல்லநிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 7 — 9 வரிகள். அளவு : 11.5 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அகப்பைச் சித்தர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"நஞ்சுண்ன வேண்டாமே — அகப்பாய்
நாயகன் தாள்பெறவே."
"நெஞ்சு மலையாதே — அகப்பாய்
நீயொன்றுஞ் சொல்லாதே." -க

முடிவு :

"உள்ளது சொன்னக்கால் — அகப்பாய்
உன்னாலே காண்பேனே
கள்ளமுந் தீருமெடி — அகப்பாய்
கருணை தனைத்தேடி." -நய

குருபாத முன்னிற்க.

குறிப்பு :

இது சித்தர் பாடல் எனப்படும். பதினெண் சித்தர்களில் ஒருவராகிய அகப்பேய்ச் சித்தர் எழுதிய நூலாகுமிது. மனப்பேயினை விளித்து 'அகப்போய்' என்று முன்னிலைப்படுத்திக் கூறியதனால் இவருக்கும் 'அகப்பேய்ச்சித்தர்' என வழங்கலாயிற்று. தத்துவக் கருத்தினை உள்ளடக்கிக் கொண்டிருக்கும் பாடல்களாகுமிவை. 'அகப்பேய்' என்பது பிற பிரதிகளில் காணப்படுகின்றது. இதில் 'அகப்பாய்' என்றுளது.

வரிசை எண் : **1169** சுவடி எண் : **827 (c)**

## பட்டினத்தார் பாடல்

ஏடுகள் : *15.* ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : *9-10* வரிகள். அளவு : *11.5 × 3.5* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை *140.* ஆசிரியர் : பட்டினத்தார். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

அரியயனுங் காணுத வானந்தப் பேரொளியை
யெரிசுடரி னெய்யதுபோ லேத்தி வணங்காமல்க்
கரிபரியுங் காலாளுங் களஞ்சியமு மெய்யெனவே
பெரிதுபிற தாபமெனப் பேசினையே நெஞ்சமே.

**முடிவு :**

ஊறு யுரைக்கின்று யுப்பிருக்கும் பாண்டமாதாய்
நாறுமல் நாறுகின்ற நசுவல்ப் புளுக்கூட்டை
வீறும் பரத்தையர்கள் விசும்பு சொன்ன சொல்த்தீர
நாறுத ... ... ... ... ... ... ... -சஎ

**குறிப்பு :**

பதினெண் சித்தர்களில் ஒருவரெனக் கருதப்படும் இவர் திருவெண்காடர் எனப் பெயருடையவர். காவிரிப்பூம்பட்டினத்தில் மிகச்சிறப்புடன் வாழ்ந்ததால் இவருக்குப் பட்டினத்தார் என்று சிறப்புப் பெயருண்டாயிற்று. (பிற செய்திகளை D எண் 1171-ல் காண்க) இந்நூல் நிலையாமையை வலியுறுத்துகின்றது. 47 செய்யுட்களே உள்ளன. இப்பகுதி அச்சிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

வரிசை எண் : **1170** சுவடி எண் : **972**

## தாயுமானுரின் பராபரக்கண்ணி

ஏடுகள் : *16.* ஏட்டின் நிலைமை : மிகச்சிதிலம்-ஒடிந்த நிலை. பக்கத்திற்கு : *8-9* வரிகள். அளவு : *20 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *400.* ஆசிரியர் : தாயுமானுர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதற்
பாரதி யாண்ட பதியே—பராபரமே. " -க

" சிந்தித்த தெல்லாமச் சிந்தையறிந் தேயுதவ
வந்த கருணை மலேயே பராபரமே. " -உ

முடிவு :

" வாயினுர் பேசா மவுனத்தை வை.........
தாயில்லார் போலத் தளன்றேன்—பராபரமே" -௩௱௩௰௨

" யெத்தனையோ கோடி.........சொன்னலுஞ்
சித்த மிரங்கிலேயென் செய்வேன்—பராபரமே. " -௩௱௩௰௩

குறிப்பு :

இது ஞானமார்க்கத்தினைக் கூறுவது. பராபரம் என்ற எங்கும் நிறைந்த பொருளை விளித்துக் கூறுவது போலத் தாயுமானவரால் இயற்றப்பட்டது. இவர் 18-ஆம் நூற்றுண்டினர் திருமறைக் காட்டில் வேளாளர் குலத்தில் கேடிலியப்பபிள்ளைக்கும் கசவல்லி அம்மையாருக்கும் திருச்சிராப்பள்ளி மலேயில் கோயில் கொண் டெழுந்தருளியுள்ள தாயுமானவர் அருளால் பிறந்தவர் திருமூலர் மரபினராகிய மௌனகுருவின் சீடராவர். இவர் பல பாடல்களைப் பாடியுள்ளார். இவரது பாடல்கள் நெஞ்சை உருக்கும் தன்மையன. முழுதும் அச்சாகியுள்ளன. அவற்றுள் ஒரு பகுதியாகும் இது.

வரிசை எண் : **1171** சுவடி எண் : **751 (a)**

## பட்டிணத்தார் பாடல்கள்.

ஏடுகள் : 85. ஏட்டின் நிலேமை : நல்ல நிலேயில் உள்ளது. பக்கத்திற்கு : 3 — 6 வரிகள். அளவு : 14.5 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : ஆசிரியர் : பட்டிணத்தார். முழுமை : முழுவதும் இல்லே.

தொடக்கம் :

### கோயில் திருவகவல்.

" நினைமின் மனனே ! நினைமின் மனனே !
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே ! நினைமின் மனனே."

முடிவு :

"வேகுதே தீயதனில் வெந்து பொடிச்சாம்பல்
ஆகுதே பாவியே னையொகோ — மாகக்
குருவி பறவாமற் கொ(தா)ட்டி யென்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை."

குறிப்பு :

இதனைப் பாடியவர் பட்டிணத்தார். இவர் காவிரிப்பூம்பட்டிணத்தில் சுத்த சைவ வேளாளர் மரபில் சிவநேசர் என்பாருக்குத் தவப் புதல்வராய்ப் பிறந்தார். திருவெண்காடர் என்னும் பிள்ளைத் திருநாமம் பெற்றுக் கசடறக் ..கற்றவர். சிவகலை என்னும் அம்மையாரை மணந்து கடல் வாணிபம் செய்துவருங்கால் மகப்பேறின்றி வருந்தினர். சிவபெருமான் ஒரு ஆண் குழந்தை உருக்கொடு சிவசருமர் என்பாரிடம் தோன்ற, அவர் அதனைக் கொணர்ந்து எடைக்கு எடை பொன் பெற்றுக்கொண்டு திருவெண்காடரிடம் கொடுத்த அக்குழந்தை, வயது நிரம்பப்பெற்று கடல் வாணிபம் செய்து மீண்டு வருங்கால் வரட்டிகளைப்பெற்று வந்தார். மற்றவர்கள் மகிமை யறியாமல் அவரைக் கோபித்தார்கள். வீடடைந்ததும் அவைகளுள் இரத்தினங்கள் இருந்தன. அதிசயித்த வெண்காடர் மகனைக் காண்பான் சென்றார். காணவில்லை. மனைவி, ஒரு பெட்டகத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றதாகக் கூறினள். அதனைத் திறந்து பார்க்க,அதனுள், "காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே" என்றிருந்தது. மெய்யுணர்வடைந்த திருவெண்காடர் அன்று முதல் துறவுபூண்டு பல அற்புதத் திருப்பதிகங்களைப் பாடியருளினர்.

அத்தகைய பாடல்களில் முற்பகுதியே இதன்கண்ணுள்ளன. 3.வது கோயிற்றிருவகவலில் "ஆசைக்கயிற்றிலாடும் பம்பரத்தை" என்ற வரி வரையிலும் உள்ளது. 4-வது கச்சித் திருவகவல் இல்லை. பாடபேதங்களும், செய்யுட்கள் முன்னும், பின்னும் காணப்படுகின்றன. அச்சிடப்பட்டுள்ளன.

வரிசை எண் : 1172 சுவடி எண் : 751 (b)

## மீனாட்சியம்மை யகவல்.

ஏடுகள் : 14. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 4 — 5 வரிகள். அளவு : 15 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 350

ஆசிரியர் : தெரியவில்லை. முழுமை : முழுவதும் இருக்கிறது.

குறிப்பு :

இது No. 759 (a) சுவடி போன்றது. பின்குறிப்பு:- 752-வது எண் சுவடி இல்லை.

## விகடம்

வரிசை எண்: **1173** சுவடி எண் : **877**

### விகடம்

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை. பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 25×3 செ.மீ. எழுத்து : தமிழ். கி, எண்ணிக்கை : 150. ஆசிரியர் : அறியக்கூட வில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

தந்தன ஞு தெந்தன மீ தாட்டோகூடறுபத்தேழாந் தெய்தியிலே நம்பி மூத்தாற்கு மூத்தாள் மூவற்குமிளையாள் அவள், பிறப்பட்டு வருகிறவளியில் விஷ்தாரமான கஷ்த் தூரிமுள்ளு நாமாகாணியில்த் தைத்தது. யெண்மாகாணி யில் நெறிகட்டியிருப்பதால் அதற்காகக் குடிபோன வூரிலிருக்குங் குளந்தைவேல்ப் பண்டிதன் மகன் குமார வேல் பண்டிதனைக் கூப்பிட்டுக் காண்பிக்குமிடத்தில் ... ...

முடிவு :

அடியென் திக்கடங்காதமைக்கரும்பன் அமிர்தகுண வாசகனுக்குப் பெறவாளுடைய இந்திரசாலம் இந்திர வதனப்பம் செய்யப்பிற சுவாமியவர்கள் திருவுளப் பிரசாதம் கிருபையினலெ ளுபலதனுவேறிட்டால் இட முறிந்தாந்தெய்திவரைக்குஞ் சங்காவதனப்ப தெய்வகிடாட் சத்தின.......

குறிப்பு :

இது விகடகவி என்றுளது. நகைச்சுவைத் ததும்பக் கூறும் நூலாகுமிது. இதன் ஆசிரியர் குமாரவேல் பண்டிதராக இருக்க லாம் என்று கருத இடமிருக்கின்றது.

# இதிகாசங்கள்

## இராமாயணம்

வரிசை எண். 1174 சுவடி எண் 817

### இராம நாடகம்

ஏடுகள் : 9. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 9-10 வரிகள். அளவு : 40×4.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 350. ஆசிரியர் : அருணசலக் கவிராயர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

பாயிரம்.

உள்க்காப்புகள் ஏற்புடைக் கடவுள் வணக்கங்கள்
அனுமார் தோத்திரம்.

நேரிசை வெண்பா.

"கோதண்ட தீட்சர் குருரும நாடகத்தைத்
திதண்டா வாரடியேன் செப்பவே — கோதண்டா
மாருதியே அஞ்சனையாள் மைந்தனே நற்கருணை
வாருதியே நீதுணையா வா." -ரு

முடிவு :

விருத்தம்.

"யினமதில் அயோத்தி வேந்தன்
யிதுசொல்ல விசுவா மித்திர
முனிவனும் கோபம் செய்தான்
முன்னின்ற வதிஷ்ட்டன் கண்டான்
உனதுமைந் தனுக்கு மன்ன
யோகனுள் வந்த தென்று
கனமுடன் விரித்துச் சொல்லிக்
காட்டுவான் கூட்டு வானே."

தரு -

முகாரி ருகம்: ஆதி தாளம்.

பல்லவி.

மோசம் வாருதையா - நான் சொன்ன வார்த்தை
மோசம் வாருதையா.

அனுபல்லவி.

குறிப்பு :

இதனை இயற்றியவர் : சீர்காழி அருணாசலக் கவிராயர் ஆவார். இந்நூலில், பாயிரமும் பாலகாண்டத்தில் சில கீர்த்தனைகளும் உள்ளன. சொல் நயமும் பொருட்சிறப்பும் கொண்டது. அச்சிடப் பட்டுளது.

வரிசை எண் : **1175** சுவடி எண் : **982**

## இராம நாடகம்

ஏடுகள் : *145.* ஏட்டின் நிலைமை : புறம்பே புகை படிந்தது. பக்கத்திற்கு : 7-8 வரிகள். அளவு : 35×3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 5000. ஆசிரியர் : சீர்காழி அருணாசலக் கவிராயர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

காப்பு

" செந்திருவைச் சேரலாம் செந்தமிழைப் பாடலாம்
யிந்திரனைப்போல் வாழ்ந்துண் டிருக்கலா—மந்திரஞ்சேர்
வெற்பகத்தை யூடறுத்த வேலவற்கு முன்பிறந்த
கற்பகத்தைக் கைதொழுதக் கால்."

ஆனை முகவனே அரனார் திருமகனே
சேனையர்கோ னாகவளஞ் செய்வோனே—ஞானமே
நாடகத்தைக் கொண்டவுந்தன் நல்லருளா லேராம
நாடகத்தைச் சொல்லவே னான்."

முடிவு :

எதிர ரக்கரைக் கொன்று யப்பதியி லெங்களை
வைத்தாயிந்த தயவுனக் கெங்கே போச்சோ.

மிதுலை வல்லியே யிங்கே சோதித்தாய் யெங்களை
விருந்திட்டுப் பகைகான மனதாச்சொ—ராமராமா.
யிழுக்காகிய பொன்னைப் புடத்திலே வைத்தெடுப்பார்கள்
யிவளுக்குண்டோ சொல்லாய் வித்தியாசம்
அழுக்கில்லாத தங்கத்தைப் புடத்திலே வைத்தெடுத்தாயே.

குறிப்பு :

இதில் ஆறு காண்டங்களுண்டு. ஆனால் இந்தப்பிரதியில் பால காண்டமும், யுத்த காண்டமுமே குறிக்கப்பட்டுள்ளன. இந்நூல் முழுவதும் அச்சிடப்பட்டுள்ளது. பிழைகள் அதிகம்.

---

## பாரதம்

வரிசை எண் : **1176**. சுவடி எண் : **756**

## பாரத அம்மானை

(கிருஷ்ணன் தூதுச்சருக்கம் முதல்)

ஏடுகள் : *360*. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும் ஓரங்கள் சிதைந்தும் உள்ளது. பக்கத்திற்கு : *8-10* வரிகள். அளவு : *39 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *10500*. ஆசிரியர் : தெரியவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

பேர்படைத்த விசையனொடு மும்மை நெடும்
பிறவியினும் பிரியா னாகிச்
சீர்படைத்த கேண்மையினர் தேரூர்தற்
கிசைந்தருளுஞ் செங்கண் மாலே
பார்படைத்த சுயோதனர்க்குப் படையெடே—
னெனவமரிற் பணித்த கோவே
கார்படைத்த நிறத்தோனைக் கைதொழுவார்
பிறவாழிக் கரைகண்டாரே.

வீரய்யன் துணை.

ஞானமினிதுரைத்து ... ...
தேனுலவு மார்பன் ... ...

* * * * * * *

வெல்லுந் துணைவருடன் மிக்கவரை யொக்கவைத்து
மானமுள்ள தருமன் மதிமுகத்தைத் தானோக்கி
தானுன் நினைவுதரும் குருநா டாளவென்றே
கானம் புகநினைவோ கண்டித் தமர்பொருதி
மானம்பெற வஞ்சினம் முடிக்க வேநினைவோ
மன்னவர் மன்னு வளரு முரசுயர்த்தோய்
உன்னின வென்றே டுரையென்று மால்கேட்ப

முடிவு :

வாழி புவிவாழி யரண் வாழி
யுமையைங் கரத்தோன் மலர்த்தாள்
வாழி வடிவேல் நிருவாணி
பாரதத் தமிழும் வாழிதானே.

பாரத அம்மானை முற்றும்.

காலம் :- (Colophon)

சருவதாரி வருடம் ஆனிமீ (17உ) பதினேழாந்தேதி சுக்கிரவார தினத்தின் கூடிய சுபயோக சுபதினத்திற் தொண்டமண்டல முதன்மை வேளாளர்களுக்குள் காப்பட்டி சிதம்பர முதன்மையார் புத்திரன் முத்தைய முதன்மையார் அவர் குமாரன் சிதம்பர முதன்மையான் மகாபாரத அம்மானை பாலகாண்டம் யுத்த காண்டம் இரண்டும் ஸ்ரீ கிருஷ்ணசுவாமி கடாட்சத்தினலேயெழுதி முடிந்தது முற்றும்.

தருமராசாக்கள் வீரய்யன் அம்மணிமார் துணை.
ஸ்ரீராமசெயம்.

இந்தப் புத்தகங்களை வாங்கி வாசிக்கிற விவேக சாலிகள் வித்துவான்கள் பிழைகள் இருந்தபோதிலும் யோசித்துத் திருத்தல் செய்து, இதற்குடையவர்களாகிய சிதம்பர முதன்மையார் குழந்தைவேலு முதன்மையார் புத்திர பௌத்திராதிகளிடத்தில் கொடுத்து விடுவார்

களாகவுமென்று உறுதியாக நம்புகின்றனம். முத்தய்ய முதன்மையார் புத்தகம் யெழுதுகின்ற யேட்டின் துகைகள் கூாசயஙடு (945) முற்றும் சருக்கங்கள் துகை கூடி.

விகாரி வருடம் கார்த்திகை மீ 30-ம் தேதி வேங்கட குளத்திலிருக்கும் முருகப்ப உடையார் மகன் சுப்பிரமணிய உடையாருக்கு இந்த யுத்த காண்டம் அருதியாய்க் கொடுத்துவிட்டேன்.

பாரத அம்மானை முற்றும்.

குறிப்பு :

பாரதம் இதிகாசங்கள் மூன்றனுள் ஒன்றாகும். சந்திரகுலத் துதித்த பரதனது வழியினர் பாரதராவார்கள். அவர்களில் பாண்டு வின் மக்களாகிய பாண்டவர்க்கும், திருதராட்டிரன் மக்களாகிய துரியோதனாதியருக்கும் பதினெட்டு நாட்கள் போர் நடந்தது. அதற்கு பாரதப்போர் எனப்பெயர். இவர்களது வரலாற்றைக் கூறும் நூலே பாரதம் எனப்படும். இதனை முன்பு வியாச முனிவர் சொல்ல விநாயகரே தனது கொம்பினை ஒடித்து மகமேருமலையில் எழுதியதாக வரலாறு. பின் பெருந்தேவனார், வில்லிப்புத்தூரார் முதலியவர்கள் எழுதினர். இங்கு குறிப்பிட்ட இந்நூலை இயற்றிய நூலாசிரியர் பெயர் முதலியன தெரியவில்லையாயினும் இந்தச் சுவடி எழுதியவர் தொண்டை மண்டல வேளாளர் மரபைச் சேர்ந்த காப்பட்டி, சிதம்பர முதன்மையார் புத்திரன் முத்தைய முதன்மையார் குமாரர் சிதம்பர முதன்மையார் என்பது தெரிகின்றது. முதன்மை யார் என்பது இவரது குடும்பத்திற்குரிய விருதுப்பெயர் போலும். இவரால் இந்நூலுக்கு "பாரத அம்மானை" என்ற பெயர் கொடுக்கப் பட்டிருக்கின்றது. இது 2-ம் பகுதி. இதில் கிருஷ்ணசுவாமி தூதுச் சருக்கம் சிறப்பித்துக் கூறப்படுவதனால் இந்நூலுக்குக்கிருஷ்ணசுவாமி தூதுச் சருக்கம் என்றும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. பாண்ட வர்கள் சார்பாகக் கிருட்டினன் துரியோதனாதியரிடம் தூதுசென்றார். இதன் முதல் நூலில் பாலகாண்டம், யுத்தகாண்டம் என்றிரண்டு காண்டங்கள் இருக்கின்றன. இதில் யுத்தகாண்டம் மட்டுமே இருக்கிறது. அதிகமிருப்பினும் ஓசை நயமுடையதாகக் காணப் படுகின்றது. இதன் காலம் சருவதாரி, ஆனி 17 வெள்ளிக்கிழமை யாக எழுதப்பட்டுள்ளது. இதனை ஆங்கில ஆண்டோடு ஒப்புநோக்க (14-6-1568) ஆகிறது. ஆகவே இந்நூல் இன்றைக்கு 377 ஆண்டுக்கு முன் எழுதப்பட்டது. இந்த யுத்தகாண்டத்தினை விகாரி கார்த்திகை 30வ சுப்பிரமணிய உடையாருக்குக் கொடுத்திருக்கிறார். பால காண்டம் இல்லை. இது அச்சிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

(M. No. 757, 758 இல்லை)

வரிசை எண்: **1177** சுவடி எண்: **760**

## பாரதம்

ஏடுகள்: 150. பக்கத்திற்கு: 7–9 வரிகள். அளவு 38 × 3 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 5000 ஆசிரியர்: வில்லிபுத்தூராழ்வார். முழுமை: முழுவதும் இல்லை.

**தொடக்கம்:**

"நற்பகலிடை வரும் நாளி நாயகன்
பொற்பகலுற வொளி புரியு ... ... ... ...
... ... ... ... ணியையும் பிரங்கு சேனையும்
முற்பக ... ... ... ... கமெயாகமுட்டினர். - 2

**முடிவு:**

"அருக்கனுந் தருமன் மைந்த னுண்மையும் நிலையுங் கண்டு
வெருக்கொளு நிருப ரென்ன மேற்றிசை மாலைமூழ்கிச்
சுருக்கமில் சுங்குற் காலஞ் சென்றபின் அதன்மே லன்(பு)
பெருக்கங்கண் டாதி மீண்டுங் குணக்கடல் பிறந்திட் டானே

என்பது ... ... ... ...

**குறிப்பு:**

பரதனது மரபிற் பிறந்தவர்கள் பாரதராவார்கள். அவர்களின் வழியில் தோன்றியவர்கள், பாண்டவ துரியோதனாதியர். அவர்களைப் பற்றிக் கூறும் நூல் பாரதம் எனப்படும். இவர்களிடையே 18 நாட்கள் (பாரதப்) போர் நடந்தது. அப்பகுதியைக் கூறும் நூலே இதுவாகும். இந்நூலின் 70 பக்கம் முதல் 180-ம் பக்கம் வரையிலும், 320-354 வரையிலும், அதன்பின்னர் 13 பூச்சியரித்த ஏடுகளும் இருக்கின்றன. இடையில் 339-ம் ஏடு இல்லை. மிகமிகச் சிதலமாயுள்ளது. தொடக்கம் நாலாநாள் போர்ச்சருக்கம் என்று தொடங்குகிறது. இது வில்லிபாரதம் ஆகும். உரையாசிரியர் பெயர் தெரியவில்லை. பதினாறும் போர்ச்சருக்க முடிய இருக்கின்றது.

வரிசை எண் : 1178 சுவடி எண் : 852

## பாரதம் 17-ம் போர்ச் சருக்கம்

ஏடுகள் : 70. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் ஒடிந்துள்ளன. சிறிது பூச்சியரித்துளது. அளவு : 40 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 3000. ஆசிரியர் : வில்லிபுத்தூராழ்வார். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

"நாரொரு பிறப்பிலொரு சிறுகுறழா
யாவரும் தேவரும் வியப்பக்
காரொறு வடிவுகொண் டெனச்சென்று
காவல்கூர் மாவெலி யழித்த
நீரொறு கரத்தில்வீழு முனரறங்க
நீர்நிற மாகநீ ருடுத்த
பாரொறு கணத்திலழ ளிடும்கமலப்
பாதனூர் னுதனூர் நமக்கே."

**முடிவு :**

மைத்துன னுரைத்த வாய்மைகேட் டய்யன்
மனமகிழ்த் தருளினர்......லரின்
கைத்தல மதனுல் மார்புறத் தழுவிக்
கண்மலர் கருணை நீருட்டி
யெத்தனை பிறவி பிறக்கினு மனதுள்
ளீகையுஞ் செல்வமு மெய்தி........

**குறிப்பு :**

இந்நூல் மிகவும் சிதைந்தும், சிதிலமாகவும் உள்ளது. 2 முதல் 7 ஏடுகள், இடையில் 44, 58, 61, 69 முதலிய எண்ணுள்ள ஏடுகளும், இறுதியில் 71 முதல் 92வரையிலும் மற்றும் சில ஏடுகள் இடையிலும் காணப்படவில்லை. இது வில்லிபுத்தூராழ்வாராற் செய்யப்பட்டது. வில்லிபாரதம் எனப் பெயர் பெறும். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் 18 நாட்கள் போர் நிகழ்ந்தது. இதில் 17-ஆம் நாள் நடந்த போரின் வருணனை கூறப்பட்டுள்ளது.

வரிசை எண். **1179** சுவடி எண் **983**

## பாரதம் - உரையுடன்.

ஏடுகள்: 324. ஏட்டின் நிலைமை: சிறிது சிதைந்தும் புகை படிந்தும் உளது. பக்கத்திக்கு: 7 — 8 வரிகள். அளவு: 43 × 3.5 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 12,000. ஆசிரியர்: வில்லிபுத்தூ ராழ்வார். முழுமை: முழுவதும் இல்லை.

**தொடக்கம்:**

"வடக்குமா வரையில் பண்டைனுள் வரைந்த மாப்பெரும் பாரதக் கடலை
கடக்குமா ரெளியேன் புணையென வுனது கழலிணைத் தாமரை தருவாய்
நடக்குமா விடையோ னுமையவ னளித்த நண்பனே ஐம்புலா தியளை
யடக்குமா முனிவர் செய்த வப்பனே அருள்பொழி வேழமா முகனே."

"நீடாழி யுலகத்து மறைனுலோ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவர்வாய்மை முனிராசராசன் மகாபாரதஞ் சொன்னனுள்
யேடாக வடமேரு வெற்பாக வெண் கூரெழுத் தாணிதன்
கோடாக வெழுதுங் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ."

என்றது நெடிய கடல் சூழ்ந்த பூலோகத்திலே வேதம் னுலுடனே அஞ்சாம் வேதமென்ன பிறசித்தமாக நிறை நிற்க வேண்டி குறைவன்றி தபசு நிறைந்த வேத வியாச மாமுனி மகாபாரதத்தைச் சொன்னனுளிலே மகாமேரு மலையைக் கையேடாகப் பிடித்துத் தம்முடைய வெள்ளி வெங்கொம்புதானே யெழுத்தாணியாகப் பிடித்து அந்த மகாபாரதத்தை எழுதிய விக்கினேஸ்வரனைத் தெண்டன் பண்ணி மனமகிஷியாய் அன்புகூர்வாமென்றவாறு,

தேவிசகாயம். வெற்றிவேலுற்றதுணையாகவும். சிவமயம்.

படர்ந்த கானகந்திரிந்து மீண்டன்புடன் பணிந்த
பஞ்சவற்காக
கடந்த ஞானியர் கடவுளர் காண்கிலர் கயலிணை சிவப்பேற
துடந்த னுன்மறைப் பின்செலப் பன்னகத்துவசன்
மானகற்றாது
நடந்தனுயகன் கருமுகில்வண் ணனென் நயனம்விட்
டகலாதே.

காப்பு முத்தும்.

முடிவு :

"முற்பொழு தொருபொற் திகிரியால் மறைந்தத்
தாழ்வர மூளெரி முகத்திற்
அப்பொழு தடைந்த வாயிரஞ் சுடரு
மனேகநூ ராயிரஞ் சுடராய்
நிற்பொழு திதுவென் றியாவரும் வியப்ப
னுகரா லையம்வலம் புரிந்து
பிற்பொழு தவத்தைக் கவருவா னுதையம்
பிறங்கலிற் பிறங்கினன் பெரியோன்."

என்றது அவ்வளவில் முன்சக்கரத்தில் மறைப்புண்ட ஆயிரஞ் சோதியுள்ள சூரியன் ஆயிரங்கிரணமும் பத்து நூராயிரங் கிரணமாயின்றைக்கி நன்ருய் விடிந்துதென்று நல்ல நாளென்று சொல்ல பாதாள லோகத்தை வலமாக வந்து எங்கெங்கே யென்று தேடிவருகிறவனைப் போலே உதையகிரி பறுவதத்தில்ககனமகிஷியான சூரியனுராயண மூற்தி உதையஞ் செய்தார். அவ்வளவிற்பொழுது விடிந்து சூரியனுதையமானு னென்றவாறு. -௨௱௨௨

பதினுலாம்னுள்ப் போற் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் பதினுலுக்குத் திருவிருத்தம், -௩௦௱௰௩

ஸ்ரீ கிருஷ்ணதேவர் சகாயமுண்டாகவும்.

குறிப்பு :

இதில் 67, 104, 109, 146, 225 ஆகிய எடுகள் காணப்படவில்லை. படையெழுச்சிச் சருக்கம், களப்பலிச் சருக்கம், அணிவகுப்புச் சருக்கம், முதலாம் நாள் போர்ச் சருக்கம் முதல் பதினன்காம் நாள் போர்ச் சருக்கம் ஆகிய சருக்கங்கள் இருக்கின்றன. பாரதப் பாடல்களின் உரை எளிமையாயுளது. பேச்சு வழக்கு நடையில் உளது.

வரிசை எண் : 1180 சுவடி எண் : 984

## பாரதம் — (உரையுடன்)

ஏடுகள் : 280. ஏட்டின் நிலைமை : சிறிது சிதைந்தும் புகைபடிந்தும் உளது. பக்கத்திற்கு : 7—8 வரிகள். அளவு : 43×3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 10000. ஆசிரியர் : வில்லிபுத்தூ ராழ்வார். முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

சித்தி சித்தோ டீச னென்று செப்பு கின்ற மூவகை
தத்து வத்தின் முடிவு கண்ட சதும மறைப்பு ரோகிதன்
கொத்த விழ்த்த சேனை மன்னு கூர ஞட வெஞ்சிவென்
வைத்த முத்தி ஞதனன்றி வான ஞடன் முதல்வன் யார்? -க

**முடிவு :**

மாதமும் மாரி பெய்ய மறையவர் வேத மோங்க
சீதரன் மார்பில் வாழுந் திருவைப்போல் மிகவும் வாழி
சாதிகள் முறைமை யாக தயவுடன் வாழி வாழி
நீதிசே ராம ரைப்போல் நீடூழி வாழி வாழி -யிஙு

காண்டத்தின் பலன் முற்றும்.
ஆகத் திருவிருத்தம் கஙௗா அயஉ
திருச்சிற்றம்பலம்.

**காலம் :-**

றவுத்திரி-ஷு புரட்டாசி-மீ உயஅவ சுக்குறவாரனுளும் உத்திர நஷ்சேத்திரமும் திரையோதேசியும் விருக்ஷிக லக்கினமுங் கூடின சுபதினத்தில் மகாபாரதம் எழுதி நிறை வேறினது. முற்றும். யிந்தப் பாரதம் யெழுதின நன்மை யாரோவென்னில் மேல்ஞரியப்பனூரிலிருக்கும் முத்தய்யர் குமாரரான சுப்பராய அய்யர் அவருட சிரேஷ்ட புத்திரனுன முத்தய்யர் கையெழுத்து. யிந்தப்புத்தகம் வீரபயங்கரத்தி லிருக்கு(ம்) அருணுசல பிள்ளை குமாரனுன கருப்பப்பிள்ளை அவருடைய சிரேஷ்ட புத்திரனுன அரியபுத்திர பிள்ளைக்கி எழுதினது. யிந்தப்பாரத புத்தகம் யெப்போதும் அனேக மகிக்ஷியுடனே வாசித்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனுராயண

சுவாமியாருடைய கடாக்ஷமும், மகாலக்ஷ்மி கிருபையும் அண்ணுமலையார் உண்ணுமுலையம்மன் சுப்பிறமன்னிய சுவாமி வள்ளியம்மை தெய்வயானை வயித்திஞத சுவாமி தையல்ஞயகியம்மன் முத்துக்குமாரசுவாமி கிருபை யுண்டாய் அரிகரபுத்திர சுவாமி நல்லதங்காள் சின்னய்யார் கடாக்ஷமுந் துற்கைஞயகியம்மன் முத்துக்கருப்பணஞர் யிவர்கள் கடாக்ஷமு மென்மேலுமுண்டாகி வாழ்ந்திருக்க வேண்டியது.

ஸ்ரீ ராமஜெயம் குருப்பியோம நமா
திருச்சிற்றம்பலம். சிவகடாக்ஷமுண்டாகவும்.

குறிப்பு :

இது 983-ம் எண் சுவடியின் தொடர்ச்சி. இதில் 15-ம் நாள் போர்ச்சருக்கம் முதல் தருமர் மகுடாபிஷேகச் சருக்கம் முடிய இருக்கின்றன. பின்னர் காண்டத்தின் பலன் கூறப்பட்டுள்ளது.

வரிசை எண் : **1181** சுவடி எண் : **985**

## பாரதம் — (உரையுடன்)

ஏடுகள் : 332. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 7–8 வரிகள். அளவு : 43 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 12000. ஆசிரியர் : வில்லிபுத்தூராழ்வார். முழுமை : முழுவதும் உள்ளது.

குறிப்பு :

இந்நூல் 983-ம் எண் சுவடி போன்றது.

வரிசை எண் : **1182.** சுவடி எண் : **987**

## பாரதம் — (உரையுடன்)

ஏடுகள் : 422. ஏட்டின் நிலை : புறத்தே புகை படிந்துள்ளது. பக்கத்திற்கு : 8–9 வரிகள். அளவு : 45 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 16000. ஆசிரியர் : வில்லிபுத்தூராழ்வார். முழுமை : முழுவதும் இல்லை.

குறிப்பு :

இது எமது 983-ம் எண் சுவடி போன்றது. இதில் கீழ்க்கண்ட சருக்கங்கள் காணப்படுகின்றன. வில்லிபுத்தூரார் பாடல்களேயன்றி வேறு பாடல்களும் காணக்கிடக்கின்றன. உரை செய்தவர் யாரெனத் தெரியவில்லை.

1. ஆதிபருவம்—குருகுலச் சருக்கம்
2. கடவுள் வணக்கம்
3. அவையடக்கம்
4. பாயிரம்
5. ஆற்றுச்சருக்கம்
6. நாட்டுச்சருக்கம்
7. நகரச்சருக்கம்
8. அரசியற்சருக்கம்
9. உதங்கச் சருக்கம்
10. பிருகுவங்கிஷச்சருக்கம்
11. காருடச்சருக்கம்
12. கந்தமாதனச்சருக்கம்
13. அமுர்தம் கொணர்ந்த சருக்கம்
14. சரற்காலச்சருக்கம்
15. பரீஷித்துச்சருக்கம்
16. சர்ப்பயாகச்சருக்கம்
17. சிறப்புப்பாயிரச்சருக்கம்
18. வியாச உற்பவச்சருக்கம்
19. பிரபஞ்ச உற்பவச்சருக்கம்
20. பாரதவீரர் உற்பவச் சருக்கம்
21. சந்திரவங்கிஷமாயாதிச் சருக்கம்
22. துட்டியந்தச் சருக்கம்
23. சந்தனுச்சருக்கம்
24. சம்பவச்சருக்கம்
25. வாரணுவதைச்சருக்கம்
26. வேத்தரகீயச்சருக்கம்

---

வரிசை எண் : **1183** சுவடி எண் : **986**

## பாரதம் — உரைநடை.

ஏடுகள் : 372. ஏட்டின் நிலை : புறத்தே புகைபடிந்துள்ளது. பக்கத்திற்கு : 7 – 8 வரிகள். அளவு : 42 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 13,000. ஆசிரியர் : தெரியவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

சுபமஸ்து, மகாபாரதம் — ஆதிபருவக்கதை.

சுபஸ்ரீமன் மகாமண்டலெஸ்வரன் சதுர்த்தேச யுபனுதிபதியாயிருக்கப்பட்ட ஆதிமகாவிஷ்ணு திருப்பாற்கடலிலே ஆயிரஞ்சிரசுடனே கூடியிருக்குற அதிசேஷன்

தானே பஞ்ச சயனமாக பள்ளிகொண்டிருக்குறவருடைய திருவுந்தித்தாமரைக் கமலத்திலே பிறும்மதேவருப்பிவிக்க, அவர் உற்ப்பிவிச்சவுடனே கிறிகாலக்கிறணியாய் ஆதி பராபரவஸ்துவான பரமேஸ்வரனை நோக்கித் தவசு பண்ணப் பரமேஸ்வரன் சந்தோஷப்பட்டு உமையொருபாக ளுக, காளகண்டமுந் திறிநேத்திரமு சடாமகுடமுங் கெங்காதேவியும் வாலசந்திரனும்

முடிவு :

அபிமன்னனுக்கும், உத்தரகுமாரத்திக்கும் அனேக அலங்குறுதத்துடனே விவாக முடிந்த பின்பு ராசராசாக் களுக்கும் அனேகம் பிருமணாளுக்கும் அரதேசி பரதேசி களுக்கும் சொற்னமாரியாக வறுஷித்து கோதானம், பூதானம் வஸ்திர தானங்களுங் கொடுத்து சகலரையும் அவரவர்கள் யிதாஸ்தானத்துக்கு அனுப்பிவித்து பின்பு தன்மபுத்திர மகாருசன் விமசேனன் அற்ச்சுனன், நகுலன், சகாதேவன் பஞ்சபாண்டவாளஞ்சுபெரும் ஸ்ரீ கிருஷ்ண தேவரும் உபலர்ப்பியமென்னும் பட்டணத்திலே வந்து யிருந்து மேல் நடக்கவேண்டிய காரியங்களுக்கு பெரியோர்கள் மதிமந்திரிகள் முதலான பேருடனே ஆலோசினை பண்ணிக்கொண்டு யிருந்தார்களென்றவாறு.

சிவமயம். திருச்சிற்றம்பலம். சிவகாமியம்மன்.

காலம் :-

பருபவளு சித்திரைமீ உயக நர்யத்துக்கிழமை ளுழிகை எரு க்குமேல் அனுச நஷ்செத்திறம் திதி துதிகை மிதுன லக்கனத்தில் யிந்த சுபதினத்தில் அம்மையாகறம், பிச்சினுத பிள்ளை பஞ்ச பாண்டவர்கள் ஆதிபருவகதை எழுதி நிறைவேறினது. சம்பூரணம்.

கிருஷ்ண சகாயம்.

குறிப்பு :

ஆதி பருவக்கதை எழுதத் தொடங்கிய காலம் முதல் ஏட்டில் குறிக்கப்பட்டுள்ளது. பருபவளு காற்திகைமீ 29 சனிவாரம். 29வக்கு குளிகன் வேளையில் அஞ்சாம் வேதமான பஞ்சபாண்டவாள் சரித்திரமாகிய மகாபாரதம் ஆதி பருவக்கதை யெழுதத் துவங்கியது.

தேவிச்சகாயம்.

இதில் தொடக்கம் பராபவஆண்டு கார்த்திகை என்றும், ஏழுதி முடிந்தது பராபவ சித்திரை என்றுமுள்ளது. இது பிலவங்க சித்திரை எனல் வேண்டும்.

பேச்சுவழக்கு நடையில் எழுதப்பட்ட இதில் ஆசிரியர் குறிப்பு அறியத்தக்கதாக இல்லை.

---

வரிசை எண் : **1184** சுவடி எண் : **988**

**பாரதம்**—(உரை நடை—அசுவமேதம்)

ஏடுகள் : 278. ஏட்டின் நிலைமை : புறத்தே புகை படிந்துள்ளது. பக்கத்திற்கு : 7—8 வரிகள். அளவு : 35 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 9000. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு.

" நீடாழி யுலகத்தில் மறைஞலோ டைந்தென்று
நிலைநிற்கவே
வாடாத தவர்வாய்மை முனிராசனினிதாக மகாபாரதஞ்
சொன்னஞள்
ஏடாக வடமேரு வெற்பாக வெங்கூரெழுத் தாணிதன்
கோடாக வெழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ"

ஸ்ரீ ராமஜெயம்

ஸ்ரீ கிஷ்ணசகாயமுண்டாகவும்.

நூல்.

வியாசமவதிஷ்ட மாரதத்தாநாமசத்தெ பவுத்திர கல்மிஷம் வந்தே சுகந்தரந்தந்தே பே.னிதம்வியாசாய விஷ்ணுரூபாய வியாசரூபாய விஷ்ணுவே நமோவைப்பிறம நிதையே வதிஷ்டாயநமோ நமா வென்று யிப்படி வேத வியாசரைத் தோத்திரம் பண்ணி பாரத கதையைச் சொல்லுகுறேம். அதுயெப்படியென்றல் பூறுவகாலத்திலே சந்திர வங்கிஷராசாவாகிய செனமேசெய மகாராசா கொலுவாயிருக்குறபோது அவரண்டைக்கி பரமபாகுவத சிகாமணியாகிய ஸ்ரீவேதவியாசர் சீஷரான செயமுனியென் குறவர் வந்தார்.

முடிவு :

ஓய் செனமேசெய பூ பா ல கா மகாராசாவே, நீர் நம்மாலேயிந்த வேதசாரமான அசுவமேத பறுவதகதையை சாங்கமாகக்கேட்டு புண்ணிய திரேகனுய் உமக்குப் புண்ணியாதி சகல சுபங்களுமுண்டாமென்று செயமுனி யேந்திரர் செனமே செயராசாவுக்கு அசுவமேத பறுவதஞ் சொன்னுரென்று சொல்லி சூத புராணிகர் சொன்னுர். காசிமகாராசாக்களுக்குச் சொன்னுரென்றவாறு.

அசுவமேத யாக பறுவத கதை முத்தும்.

குறிப்பு :

இது எமது 986-ம் எண் சுவடி போன்றது. பிழைகள் அதிகம்.

சிவரகசியம்

வரிசை எண் : 1185. சுவடி எண் : 970

## சிவரகசியம்

ஏடுகள்: 275. ஏட்டின் நிலைமை: மிகமிகப் பூச்சி யரித்த நிலை. பக்கத்திற்கு 15-16 வரிகள். அளவு : 33 × 4 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை : 20000. ஆசிரியர் : ஒப்பிலா மணி. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

கிரியாங்கிசை.

"பொன்னிமையப் படியானை தருமானை முகத்தானைப்
பொருவிலானைச்
சொன்னயஞ்சேர் தாரகத்தி னுருவானை யன்பருளச்
சோதியானைச்
சென்னியிலா றுடையானைத் தந்தையெனும்
வடிவானைத் திகழோராறு
மன்னுமுகன் றுணையானை வல்லபையின் பதத்தானை
வணங்கி வாழ்வாம்"

* * *

"உலகனைத்து முளனுகி யலனுகி யுண்மையா யுலப்பிலானு
யலகிலுயிர்க் குயிராகி யற்புதமா யாரமுதா
யறிவுற்றோர்பால்

நிலவியமா நதஞூந்தி நெறிவிளங்க விளங்கந்
நேயத்துள்ளே
குலவியபே ரொளியாகுங் கோமானைக் குணக்குன்றைக்
குறித்துவாழ்வாம்"

* * *

மன்னர்புகழ் சரபோஜி மகாராச ராசர்
மாநிலங்காத் திடுநாளிற் றஞ்சைமா நகரிற்
றுன்னுமே விளம்பி (யிற்) மகரமதி யைந்திற்
சோதிசிவ ரகசிய மொப்பிலாமணி சொற்றமிழை
யின்னிலத்தி னரங்கேறச் செய்தனர் பொன்மாறை
யெழில்சேருந் திராத வினைதீர்த்தான் பாகைப்
புன்னைவன நாதனிவர் சைவநெறி வளர்க்கும்
பூபால ரவனியெங்கும் புகழினி தோங்கிடவே-உஙு

பாயிரம் முற்றும்.

## நூல்.

அற்புத னமல னகண்டித னனக
னனுபம னசல ஞனந்தன்
றற்பரன் சாந்தன் சச்சிதா னந்தன்
சங்கரன் அத்துவா தீதன்
சொற்பதங் கடந்து நின்றருள் சோதி
தொண்டனேன் றுயர்துடைத் தாளுஞ்
சிற்பரம் பொருளாஞ் சிவனவன் கமலச்
சேவடி சென்னி சேர்த்திடுவாம். -க

முடிவு:

" திருமருவு கும்பகோ ணத்தில் வாழும்
செல்லமிகு பலாசனங்கள் சிவன்பா லன்பர்
பொருவில்சிவ ரகசிய புராணமாகும்
பொருந்துவட மொழிதமிழாற் புனைவா யென்னத்
தருமமிகு தவவனையாஞ் சைவன் தியாகர்
சன்னிதியிற் வரிசைபெறும் தலைமை பூண்டோ
னிருமைநல் காரூர்பிறந் தோனு ரூரன்
சேயிசைகொ ளொப்பிலா மணிதா னிசைத்த
வாறே" -ஈஉஙு

வேறு.

வானவர் வாழ்க யாக மறையவர் வாழ்க வானுந்
தானமா மழையும் பாருஞ் சனங்களுந் தழைத்து வாழ்கத்
தேனலர் கொன்றை வேணிச் சிவபிரான் கருணை வாழ்க
வானநல் லறங்கள் வாழ்க வாசரும் வாழ்க வன்றே. - ௩௨௪

டுய-வது சிவரகசிய மான்மிய முற்றும்.

ஆக திருவிருத்தம் உகூ௦டுா௨ திரியாங்கிசைக் காண்ட முற்றும்.

ஆக காண்டம் 2க்கு சருக்கம் ௩க்குத் திருவிருத்தம் ௪க௦கூயக

திருச்சிற்றம்பலம்.

*  *  *

உகூ௪ - ஷ் - டுய்வது சிவரகசிய மான்மியம் ௩௨ய௪கூ ஏடு கூ
இரண்டாங்காண்டம் க-க்குச் சருக்கம் டுயக்கு
திருவிருத்தம் - உக௦டுா௨ - காப்பு - க.
சிவரகசியங்கிறியாங்சிசை காண்டம் உக்கு சருக்கம் ௩க்கு
திருவிருத்தம் ௪க௦கூயக. ஏடு உ௩௭ய௫ துகையேடு உ
ஆக ஏடு உ௩௭யடு. சிவமயம்.

காலம் :

க௦௪ய௨ ஷு பிரபவ ஷு ஆடி யடு௳ சுக்கிரவாரம் கிருஷ்ணபட்சம் — திருதிகை அவிட்ட நட்செத்திரம் அன்று திருநெல்வேலி வடக்குக் கோபுரவாசல்த் தெரு வென்ற கற்பக விநயக பெருந்தெரு வடக்கரணய (ஆத்தி) ராய கோத்திரஞ் சங்கர மூர்த்தியாபிள்ளையவர்கள் குமாரன் காந்திமதிநாதனெழுத்து.

கணேசன் துணை. முருகன் துணை.

இது இதிகாசத்தினைச்சாரும். இது வடமொழியில் சிவரகசியம் என்ற பெயரால் பெரும் நூலாக உளது. அதனைத் தமிழில் ஒப்பிலா மணி என்பார் செய்துளார் என்பது பாயிரத்தால் விளங்கும். இது தஞ்சை மன்னர் சரபோஜி காலத்தில் அரங்கேற்றம் பெற்றது என்பதினால் இது 1711—1728வரை தஞ்சையினை ஆண்ட முதலாம் சரபோஜி காலத்தில் இயற்றப்பெற்றது எனலாம். பாயிரச் செய்யுளில் கண்ட ஏவிளம்பி, தை டுக்குச் சரியாக 1718 சனவரி 3-ம்தேதி வெள்ளிக்கிழமை ஆகிறது. எனவே இது முதலாம் சரபோஜி காலம் ஆகும்.

அடுத்த ஏவிளம்பி எனில் அது 1778 ஆகும். இரண்டாம் சரபோஜி எனில் 1777-ல் பிறந்து 1798-ல் பட்டம் பெற்ருர். எனவே அது பொருந்தவில்லை. இது அச்சிடப்படவில்லை. இந்நூல் கால வசத்தால் எழுத்துக்கள் உருப்பெருதவாறு பூச்சியரித்தும் சிதைந்தும் மடிந்தும் காணப்படுகின்றது.

---

புராணம்

வரிசை எண் : **1186** சுவடி எண் : **980**

## ஆத்திசூடிப் புராணம்

ஏடுகள் : 221. ஏட்டின் நிலைமை : சிறிது சிதைந்தநிலை. பக்கத்திற்கு : 6 — 7 வரிகள். அளவு : 39 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 6,000. ஆசிரியர் : உளுந்தூர்ப்பேட்டை முத்தம்பல வாத்தியார். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"சீர்பெறு கெங்கைக் கோகிரி மாலை
செப்பிய லூல்வழி பெரிய
பேர்பெறு புராணஞ் சேக்கழி யாரும்
பிரியமாய்ச் சொல்லிய வரலாறு
பார்பெறு ராமகதைதனைச் சோழன்
படித்திடும் போதிரு ஞரை
யூர்கண பதியார் வரத்தினுல் விளம்ப
வுலகில்வந் ததுமுரைப் பேனே."

என்றது முன்னுள் சேரன், சோழன், பாண்டியன் ஞளிலே மனுநீதிச் சோழன் ராமாயணப் பிறசங்கம் பண்ணி வருவார். அவரிடத்திலே சேக்கழியார் சேக்கழியாரென்று மந்திரி ராசாவினிடத்தில் தினமானங் கொலுவிலே கூட யிருந்து சகலகாறுபாறும் பண்ணி ராசா ராமாயணங் கேள்க்கப் போகச்சே மந்திரி யெழி(ழு)ந்திருந்து தம்மிட வளவுக்குப் போய் விடுவார்.

முடிவு :

"பார்புகழ் பிறமா தீஷ வறுஷம்
பரவிய மிதுனமாஸ் தையிலே

நேர்முதல் தேதி மங்கள வாறம்
நிகழ்த்திய கோகிரி மாலே
பேறுபெரு முதகிரி பஞ்சமா லாளும்
பிறபலர் சொன்மறை கண்டார்
ஆர்பரிக் கெங்கைக் கோகிரி மேவு
மாதிசத் தீச ஞயகனே."

திருச்சிற்றம்பலம்

சிவமயம்.

காலம் : (Colophon)

சுக்கில ஞூ மார்கழி மீ" ยகூ உ சனிக்கிழமை மூலா நட்செத்திரம் சித்தயோகம் யிந்த சுபதினத்தில் வீர பயங்கரம் அரியபுத்திர பிள்ளைக் குமாரன் மூக்கன் ஆத்திச் சுவடி புராணம் எழுதினது.

நயினர் பாளையம் ஆணி முத்தய்யர் அவருட குமாரன் பழனி முத்தய்யர் அவருட குமாரன் முத்துவேலய்யர் அஸ்த லிகிதம்.

சிவமயம்.

குறிப்பு :

இதற்குக் கோபருவதமாலே என்ற வேறு பெயருண்டென்பது தெரிகிறது. அறஞ்செய விரும்பு முதலான ஆத்திசூடி யென்னும் ஔவையாரியற்றிய நூலின் பாடல்களை முதலடியாகக்கொண்டு சிவனடியார்கள் வரலாறுகளையும், சிவத்தலங்களின் பெருமைகளையும் வீரசைவ வரலாறுகளையும் கூறுகின்றது. நடை மிகமிகச் சாதாரண பேச்சுவழக்கு நடையாக உளது. இது, சிதம்பரம் அம்பலத் தாடுவார் மடத்துடன் தொடர்புடையது. இது, பிற ஆத்திசூடி ஒப்புமைகளுடனும், 1008 சிவாலய அகர வரிசைப் பட்டியலுடனும் எமது சரசுவதி மகாலில் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

வரிசை எண் : **1187** சுவடி எண் : **900**

## பாகவதம்

ஏடுகள் : 268. ஏட்டின் நிலைமை : நல்லநிலைமை. பக்கத்திற்கு : 7–8 வரிகள். அளவு : 30 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 10000. ஆசிரியர் : செவ்வைச்சூடுவார். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" பிறந்தபொழு தேதுரந்து பிறைக்குளவி
போல்நடப்ப பின்பொய்த் தொன்னூ
லறைந்தபுகள் வியாதமுனி யாதரத்தால்
மதலாயென் றழைப்ப செவ்வாய்
திறந்துநரை பொழியுமலர்ச் செழுந்தருவு
மெனென்ன வுயிர்கள் யாவும்
நிறைந்துரையுஞ் சுகமுனிவ னிரையிதட்டா
மரைமலர்த்தாள் நினைதல் செய்வாம்."

முடிவு :

கனைத்துவண் டிமிர் துழாய்க் கண்ணன் மாக்கதை
மனத்துற வழங்கினர் மகிழ்ந்து கேட்குநர்
வினைத்திருக் கற்றுறு மேன்மை யாதியாய்
நினைத்தன பெற்றிவ ணீடு வாழியே." உ௰௬

புராணவளவை யுரைத்த வத்தியாய முற்றும்.
ஆக திருவிருத்தம்—உ௬அ
ஸ்ரீமன் முதற்கந்தமுதலம் பனிரெண்டுக்கு
அத்தியாயம் ௩௱௰௨ திருவிருத்தம் துகை
௬௲௩௱௰உ. கிருஷ்ணய நம்ம :

குறிப்பு :

பகவத் விஷயமானது பாகவதம். இது வடமொழியில் வேத வியாசரால் இயற்றப்பட்டது. பதினெண் புராணங்களுள் விஷ்ணு புராணங்கள் நான்கு. அவற்றுள் பாகவதம் ஒன்று. வைணவத்தின் பெருமையினைக் கூறுவது. இது அச்சாகியுள்ளது. அச்சுப்பிரதிக்கும் இதற்கும் பாட பேதங்கள் அதிகம் காணப்படுகின்றன. இறுதி மூன்று ஏடுகளில் படல அட்டவணை எழுதப்பட்டுள்ளது.

---

வரிசை எண் : 1188 சுவடி எண் : 978

## வாதவூரர் புராணம்—உரையுடன்

ஏடுகள் : 236. ஏட்டின் நிலைமை : சற்றே சிதைந்தது. பக்கத்திற்கு : 6—8 வரிகள். அளவு : 37 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 8000. ஆசிரியர் : கடவுண்மாமுனிவர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

" பவளமால் வரையி னிலவெறிப் பதுபோல்
பரந்த நீற்றழகு பச்சுடம்பிற்
றிவளமா துடனின் றுடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமார் மருப்பொன் றொடித்தொரு கரத்தில்
தரித்துயர் கிரிபுறத் தெழுதுங்
கவளமார் களித்துன் றிருமுகம் படைத்த
கடவுளை நினைந்துகை தொழுவாம். "

நூல்.

" தும்பமத கும்பவுயற் தும்பிமுக னம்பிசீற்
தங்குநெகி ழுஞ்சிறுச தங்கைகள் புலம்பவே
மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதாள்
அங்கைமலர் கொண்டுமிகு மன்புடனி றஞ்சுவாம். "

முடிவு :

பூதல மாது வாழ்கப் பொன்மழை பொழிந்து வாழ்க
வேதவா கமமும் வாழ்க வேந்தர்செங் கோலும் வாழ்க
தீதிலாவஞ் செழுத்தும் நீறுஞ் சிவனடி யாரும் வாழ்க
வாதவூர்ப் புருண மோதிப் படித்திடக் கேட்டோர் வாழ்க.

என்றது பூதலமாதரான பூமிதேவியும் வாழ்க. அந்தப் பூமியிலே யிருக்குஞ் சகல ஜீவராசிகளும் வாழ்க. பொன் மழை யெங்கும் பொழிந்து வாழ்க. வேதமும் ஆகம சாஷ்த்திர புராணமும் வாழ்க. கலைக்கியானமும் வாழ்க. ராசாவினிட செங்கோலினிட நீதியும் வாழ்க. பஞ்சாட் சரமுந் திருநீறும் வாழ்க. சிவசமையுஞ் சிவனடியார்களும் வாழ்க. யிந்தவாதவூரரிட புராணத்தை யோதிப்படித்துப் பொருள்சொல்லிக் கேட்டவர்கள் மகிட்சியாய் வாழ்வதாக இவையெல்லாம் வாழ்க வென்றவாறு. -௩௩

திருவடிபெற்ற சருக்கம் முற்றும்
ஆகச் சருக்கம் எட்டுக்குத் திருவிருத்தம் ௫௱௪௰௩

**காலம் :-**

விரோதி-ஸு ஆடி-மீ ௰௬௨ ஆதிவாரம் திரேயோதேசி மூல நட்சேத்திரமு கூடின சுபதினத்தில் வீரபயங்கரம் அருணாசலபிள்ளை சப்பாணிபிள்ளை பேரன் கருப்பபிள்ளை வாதவூரப்புராணம் எழுதி நிறைவேரினது முற்றும். இதில் எழுதின நன்மை கூடமலை பழனி அய்யர் எழுதினது.

திருச்சிற்றம்பலம்

சிதம்பரீசுபரர் சிவகாமி அம்மன் துணையுண்டாகவும்.

சிவமயம்.

**குறிப்பு :**

இதனுள் பாயிரச்சருக்கம், மந்திரிச் சருக்கம், திருப்பெருந்துறைச் சருக்கம்,, குதிரையிட்ட சருக்கம், மண்சுமந்த சருக்கம், திருவம்பலச் சருக்கம். புத்தரை வாதில் வென்ற சருக்கம், திருவடிபெற்ற சருக்கம் என எட்டு சருக்கங்கள் உள்ளன. சைவசமயாசாரிபர் நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசகர் எனத் திருநாமம் பெற்ற திருவாதவூரருடைய வரலாற்றினைக் கூறுவது. இதற்கு உரை செய்தவர் குமார தேவராவர்.

---

## தலபுராணம்

வரிசை எண். **1189** சுவடி எண் : **761**

# அருணாசல புராணம்

ஏடுகள் : *135.* ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது, சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 5—7 வரிகள். அளவு : *43 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *4000.* ஆசிரியர் : எல்லப்ப நாவலர். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

பாயிரம்

" முதிருஞ்சிவை மதுரம்பெற மொழியுந்தமிள் விரகன்புகழ்
பதிகம்புனை பவனன்பினர் பவபஞ்சன ரமலன்கதி
ருதிரும்படி பகிரண்டமு முடையும்படி யிலகும்படி
அதிரும்படி நடனம்புரி யதிருங்கழல் லதிருங்கழல். "

முடிவு :

சிவனுடைய சடைகளைக் கோதி முடித்து அதன்மேலே முத்தினாலிழைத்த கிரீடமொன்று தரித்தார்கள். அது யெப்படி தரித்ததுயெனில் சிவனுடைய சடையிலே தரிக்கப் பட்ட மூனும் பிறையாகிய சந்திரனைத் தங்களிட ராசா வென்று நட்ஷேத்திரங்களெல்லாம் கூடிவந்து யிருந்தது போலேயிருந்ததுக் கிரீடந்தரித்தது. அதுவல்லாமல் யிரண்டு காதிலும் மகர குண்டலந்தரித்தது எப்படியிருந்தது யென்னில் அடவாகச் சிவனுக்குக் கண்களாயிருக்கப்பட்ட சூரியன்... ... ...

குறிப்பு :

முதல் 5 ஏடுகள் மிகச் சிதிலம். இது திருவண்ணாமலை யென்று சொல்லப்படுகிற அருணாசலத்தினது மகிமையைக் கூறுவது. 12 சருக்கங்களாலாயது. செய்யுளின் தொகை 589. செய்யுள் நடை நன்றாக உள்ளது. இந்நூல் முழுவதும் இல்லை.

---

வரிசை எண் : **1190.** சுவடி எண் : **981**

## அருணாசல புராணம் — உரையுடன்

ஏடுகள் : *237.* ஏட்டின் நிலைமை : சற்றே சிதிலம், மேற்புறம் புகைபடிந்துளது. பக்கத்திற்கு : 7-8 வரிகள். அளவு : *39 × 3.5* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *7000.* ஆசிரியர் : சைவ எல்லப்ப நாவலர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு.

“மிக்க வேத வியாதர் விளம்பிய
இக்க தைக்கிய லின்றருள் செய்திட
முக்கண் வெற்பிணை மும்மத வாரியைக்
கைக்க ளித்தினைக் கைதொழு தேத்துவாம்.”

நூல்.

" முதிருஞ்சுவை மதுரம்பெற மொழியுந்தமிழ் விரகன்புகழ்
பதிகம்புனை பவனன்பினற் பவபஞ்சன ரமலன்கதி
ருதிரும்படி பகிரண்டமும் முடையும்படி யிலகும்படி
அதிரும்படி நடனம்புரி யதிருங்கழ லதிருங்கழல் "

என்றது முதிர்ந்த சுவையாய் மதுரம் பெறும்படி சொல்லப் பட்ட தமிழுக்கு விரகனுகிய ஞானசம்பந்தமூர்த்தி தோத்திரம் பண்ணிய பதிகமாகிய தேவாரங்களைப் பூஷணமா யணியப்பட்டவர் பவமாகிய செனனங்களிலே அன்புடைய வரிட பாவங்களை பஞ்சமாகத் தீர்க்கப்பட்ட அமலனுகிய அதிசெயங்களையுடையவர் கதிருதிரும்படியென்றது சூரிய சந்திரருதிரும்படி அண்டபகிரண்டங்களுமுடையும்படிக்கிச் சகலமுண்டாகியிலகும்படியெங்கும் பிறகாசிக்கும்படியாகி யும் அதிரும்படி சத்திக்கும்படிக்கு நடனஞ்செய்யும் பாதத் திலே யதிரப்பட்ட கழலாகிய வீர வெண்டையம் பொருந் திய பாதாரவிந்தப்பெருமையுடைய பரமசிவனைத் தோத் திரஞ் செய்வாமென்றவாறு."

முடிவு :

" யிக்கதை படித்தோர் கேட்டோ
ரெழுதினோ ரெழுதி வைத்தோர்
மைக்கடல் சூழ்ந்த விந்த
வையக முழுது மாண்டு
தக்கசந் தான போக
சவுபாக்கியந் தணிய வாழ்ந்து
திக்கரு ணேச ரன்பால்
சிவபதம் பெறுவர் தாமே. "

என்றது யிந்த அருணசலப் புருணக்கதையை படித்த பேருங் கேட்ட பேரும் எழுதின பேரும் எழுதிவைத்த பேரும் மைக்கடலாகிய சமுத்திரஞ்சூழ்ந்த பூலோக முழுது மொரு குடைக்கீழே யரசாஷியாக ஆண்டு சந்தான பாக்கியம் நிறையும்படி வாழ்ந்திருந்து திக்காக லக்ஷிக்கப்

பட்ட திருவருணுசலயீஸ்வரரிட அன்பினுலே சிவபதவி பெறுவார்களென்றவாறு.

புளகாதிபச் சருக்க முற்றும்.

அகப்பாயிரம் உள்படச் சருக்கம் ௰௨க்குத் திருவிருத்தம் ௫௱அ௰உ.

திருச்சிற்றம்பலம்.

அண்ணுமலையார் துணையாகவும்.

காலம் :- (Colophon)

திருச்சிற்றம்பலம். சிவமயம். சவும்மிய ஞு தனுசுமீ சஉ (முதலேட்டின் கடைசிவரியில் உள்ளது.)

குறிப்பு :

அருணுசலம் என்பது தற்போது திருவண்ணுமலை என்று வழங்கப் பெறுவது. எனவே இது திருவண்ணுமலையின் பெருமையினைக் கூறுவது. ஐம்பூதத்தலங்களில் இது அக்கினித்தலம். இந்நூலில் பனிரண்டு சருக்கங்களும் 582 செய்யுட்களும் உள்ளன.

---

வரிசை எண் : 1191 சுவடி எண் : 901

## திருவிளையாடற் புராணம் — (செய்யுள்)

ஏடுகள் : 254. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 9—10 வரிகள். அளவு : 41 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 12000. ஆசிரியர் : பரஞ்சோதிமுனிவர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

" சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத்துதி செய்ய
சத்தி யர்கிய சொற்பொருள் நல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே. "

தவளத் தாமரை தாதாற் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குரித்தே. "

முடிவு :

" அருட்கடவுள் வணக்கம் பாயிரத்தோ டவையடக்க
மானதிரு நாடுநக ரங்கயிலைச் சிறப்பு
தெருட்பெருகு புராணவழி தலந்தீர்த்த மூர்த்திதிரு
விளையாடற் றொகையவ் விளையாட்டின் வகையோ
டிருட்கெ டருச்சனையீ ருயாப்பின் விரிமூவா
யிரத்துமுன் னூத்தியறு பதுயிஃதிலே ழின்மதுரைப்
புராணம்போற் சுவைசொற் சுவைபெருக பரஞ்சோதி
முனிவன் புவிதழைந்து கதியேறப்பொற்புச்
செய்தனனே " —ருமஉரு

ஆகத் திருவிருத்தம் ௩௩௱௬௰உ
சொக்கலிங்கம் துணை.

* * *

" யிக்கை முதாற்முதற் சுவைவாகு வடித்திடு சீனிநாற்
முற்கனியா யறுள்முத்தமி ழோதினன் முத்தியின்
மேவுவனே
கற்களிறே முருகற்கு முன்னுகிய கற்பகமே நிதியே
திற்கனிசீற் மதுரைப் பதிமேவிய சித்திவி நாயகனே. "

குறிப்பு :

மதுரையில் எழுந்தருளியுள்ள சோமசுந்தரக் கடவுளின் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைக் கூறும் நூலாகுமிது. மூன்று காண்டங்களையுடையது. மதுரைக்காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க் காண்டம் என்ற மூன்றற்கும் 3362 திருவிருத்தங்களைக் கொண்டது. பாடபேதங்கள் மிகுதியாய்க் காணப்படுகின்றன. அச்சாகியுள்ளது. கடைசி இரண்டு ஏடுகளில் பாண்டிய வமிசாவளியும், ஒவ்வொரு பாண்டியன் நாளிலும் என்னென்ன திருவிளையாடல்கள் நிகழ்ந்தன என்றும் குறிக்கப்பெற்றுள்ளவை குறிப்பிடத்தக்கது.

வரிசை எண் : 1192 சுவடி எண் : 979

## விருத்தகிரிப் புராணம் — உரையுடன்

ஏடுகள் : 210. ஏட்டின் நிலைமை : புறப்பகுதி புகை படித்துள்ளது. பக்கத்திற்கு : 6 — 7 வரிகள். அளவு :

40 × 3 செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 6,500. ஆசிரியர்: ஞானக்கூத்த சிவப்பிரகாச தேசிகர். முழுமை: முழுவதும் உள்ளது.

**தொடக்கம்:**

"திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணை பூற்கவுந் தீமையை காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகுமா ழத்துப் பிள்ளையைப் போத்துவாம்."

* * * * * * *

திருமாலு நான்முகனுந் தேவர் கோவும்
தேவர்களும் யாவர்களுஞ் சிந்தை யாலு
மருவாய் மறையாலு மளவை யாலு
மளப்பரிதா யகண்டிதமாய் நின்ற மூர்த்தி
யுருவாய் கிரிவடிவா யனந்த கோடி
யொளியுடைய கொடுமுடிக ளாகி நின்ற
பெருவாழ்வைத் திருமுதுகுன் றுடையான் றன்னைப்
பெருங்கருணை யாளனையாம் வணங்க லுற்றும்.

**முடிவு:**

"திங்கள் மும்மழைப் பெய்யச் செழும்புவி
பொங்கி வாழப் புரவல னோங்குக
நங்கள் சங்கரன் பூசை நலம்பெற
சங்க ரன்னடி யார்கள் தழைக்கவே."

என்றது மாதமூன்று மழைபெய்ய பூமியெங்கும் பொங்கி வாழ்க. ராசாக்கள் வாழ்க. சிவபூசை நலமாகச் செய்து முடிக்க சிவனடியார்களெங்கும் நிறைந்து வாழ்க என்றவாறு. -ஙய

சிவமயம். சசிவன்னச் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் ௰எக்கு திருவிருத்தம் சாஙயஉ. திருச்சிற்றம்பலம்,

**காலம்:** (Colophon)

விகுறுதிஞூ கார்த்திகைமீ உயகூஉ விசாக நட்செத்திரம் ஆதிவாரம் திரையோதெசியுங் கூடின புண்ணிய தினத்தில் வீரபங்கயம் சப்பாணிப் பிள்ளை குமாரன் அருணாசலபிள்ளை.

அருணுசல பிள்ளை குமாரன் கருப்ப பிள்ளைக்குக் கூடமலையி லிருக்கும் பழனி அய்யர் பெரியெரிப் பள்ளிக்கூடமானபடியி னலெ விருத்தகிரிப்புராணம் எழுதி நிறைவேறினது.

முற்றும்.

வீரபயங்கரம் அய்யனர் முனியப்பார் துணை. அம்பாயிரம்மன் துணை.

குறிப்பு :-

இது எமது 268-ம் எண்ணுள்ள சுவடிபோன்றது. பிற குறிப்புகளை Vol. I, D. 473, பக்கம் 380-இல் காண்க. இச்சுவடியில் பின்னர் காணப்படும் ஏட்டில் உள்ள சருக்கங்கள்.

| | | | |
|---|---|---|---|
| பாயிரம் | ௰அ | சுவேதச் சருக்கம் | உ௰ |
| கிரிச்சருக்கம் | ௱௰கூ | அன்பர் பூசைச் சருக்கம் | ௰டு |
| தலச்சருக்கம் | ௰டு | சிவபூசைச் சருக்கம் | ௬௰௪ |
| தீர்த்தச் சருக்கம் | உ௰அ | விபூதிச் சருக்கம் | ௰அ |
| விதற்கணச் சருக்கம் | உ௰௩ | ருத்ராட்சச் சருக்கம் | ௰எ |
| விபசித்துச் சருக்கம் | ௬௰டு | கீற்திச் சருக்கம் | ௰ |
| அகத்தியச் சருக்கம் | ௰௩ | கோபறுவதச் சருக்கம் | ௱௰௩ |
| கலிங்கச் சருக்கம் | உ௰ | சசிவன்னச் சருக்கம் | ௱௰ |
| கலிவலிச் சருக்கம் | உ௰ | | |

ஆக சருக்கம் ௰உக்குக் கவி ௬ா௱௰௩.

---

வரிசை எண் : 1193 சுவடி எண் : 911

## வைகுந்த அம்மானை

ஏடுகள் : 35. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் முறிந்துள்ளன. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 30 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 850. ஆசிரியர் : அரியயனனந்தன். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு.

" வாரிசூ ழுலகு தன்னில் மன்னுயிர் துதிப்ப வேண்டி
சீரிய தமிளி னலே தெரிந்துநா னம்மானை பாட
ஆரியய னனந்த நாமன் அச்சுதன் கமலக் கண்ணன்
பாரிய மேக வண்ணன் பச்சைமால் பதமே காப்பு."

நூல்.

ஓங்குரு வாள வென்று உலகெல்லா மகல நீக்கிப்
பாங்குட னஞ்சு பேரும் பத்தினி துரோப தையு
மீங்குள்ள கரும மெல்லா மெள்ளள வாசை யற்றுத்
தீங்கிது சிகமென் றெண்ணித் திரவியில் நடந்த ஞாயம்
- க

முடிவு :

" அரிகரி ராமா வென்று லகன்றிடுங் கொடிய பாவ
மரிகரி ராமா வென்றால் அனேகமாஞ் செல்வஞ்சேரும்
அரிகரி ராமா வென்றால் ஆரங்கமு மிகுந்து வாழும்
அரிகரி ராமா வென்றால் அவர்கள்மெய் ஞானியாமே"
- ாஅய

வைய்குண்டம் யெம்பாக்கு வைய்குண்டந் தாருமய்யா
நோயுண்ட மாலயுந்த னெடியமால் சரனம் போத்தி.

வைய்குண்ட விருத்தம் ாஅய-ம் முற்றும்.
சிவசங்கரன் ஏடு. எடுத்தவன் படித்துப் போட்டு குடுக்கவும்.

காலம் : (Colophon)

" மந்த வாரமும் வைய்குண்ட மாலுக்கு
எந்த வாரமு மீடல்ல வென்றுதான்
அந்த வாரமு விரத மனுட்டித்து
இந்த வாரம் யெழுதி முகிந்ததே." - ாஅக

குறிப்பு :

இது பாரதக் கதையினைப் பின்பற்றியது. பாண்டவர்கள் துரோபதையுடன் வைகுந்தம் சேர்ந்த பகுதியினைக் கூறுவது. அம்மானை என்றிருப்பினும் மற்ற அம்மானை போலல்லாது விருத்தப் பாவினாலாகியுள்ளது. 181 விருத்தப்பாக்களை உடைய இந்நூலில் 20வது ஏடு இல்லை. தென் வீரையாம்பதியார் இயற்றிய வைகுந்த அம்மானையினும் வேறாயது. அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

கதை

வரிசை எண் : **1194** சுவடி எண் : **965**

## அல்லி அரசாணி அம்மானை

ஏடுகள் : 108. ஏட்டின் நிலைமை : மிக மிகப் பூச்சியரித்த நிலை. பக்கத்திற்கு : 10 வரிகள். அளவு : 43 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 4000. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

அத்த(ன்) திருமக(னே) ஆனைமுக வேதியனே
......நல்லாள் புத்திர... ...
வித்தனை நான்பாட வினையகருங்க... ...
சித்தம் பொருத்தருளுஞ் செல்வ... ...
பேழை வகுத்தோனே பெருச்சாளி
ஏழை தமிள்ப்பாட என்னாளும் வந்துதவ
சூரனை வென்ற சிவசுப்பிரமணியா சரணம்
... ... ...க்குந் தெய்வ சூடாமணி.

**முடிவு :**

அய்வரும்... ... ...அருந்தவர் புல்லோர்வாளி
தெய்வமும் நெரிப்பூவாளி தபஞ்செய்ய புரையோர்வாளி
பைவருஞ்சமையும் பார்தனிலுள்ளோர்வாளி
துய்யதோர் தர்மறவாளி சொன்னவர் வாளிதானே.

அரி அரி நமசிவா யென்றஞ்சு மூன்றெழுத்தை யோதி
அரி அரி என்று என்னை ஆண்டமா யவரே அய்யா
அரி அரி யென்றும் உந்தன் அடுமைகள் துதிகள் செய்ய
அரி அரி மலர்த்தாள் தந்து அடியாரை லெட்சிப்பீரே.

**காலம் : ( Colophon )**

க019உ௰௩-ஷு மார்களிமீ உ௰உ செவ்வாய்க்கிழமை ............அல்லியரசாணிக்கதை. முருகப்பன் ரெங்கனாதன் ............கதை எழுதி முடிந்தது.

முற்றும்.

நன்றாக............இப்படிக்கு ரெங்கனாதன்.

குறிப்பு :

ஏடுகள் மிகமிகச் சிதிலம், முதல் ஏடு பாதி தான் உள்ளது. இது சிறுகதைப் பகுதியினைச்சாரும். இது அச்சாகியுளது. முகப்பு ஏட்டில் ஒரு சிறு துண்டு மட்டுமே உளது. அதில் 4-வது வரியில் சொக்க நாயகர் என்றும், 5-வது வரி கஂஉயிஙஹு காற்......என்றுமுளது.

---

வரிசை எண் : **1195** சுவடி எண் : **922**

## ஆலம்நபி கதைப்பாட்டு.

ஏடுகள் : 47. ஏட்டின் நிலைமை : நல்லநிலை. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 18.5 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"ஆலம் படைத்தவனே புகளா நிறைந் தோனை
காவல் வளந்தேறயென் நாயனே காத்தருள்வாய். -க

ஆதியா றுன்தூதர் மருகான் அலியாரும்
நீதியச உசனூர் காதமும் நித்தமும் போத்தி
செய்வேன். -உ

முடிவு :

வாசமக நாரெ விட்டிருக்கமனது பொருந்துமோ
வையகத்தில் பேதை மடந்தை யார்தனித் திருந்தால்
பொழுதுவிடியுமோ
விடியாது காண நேத்தை தின்றங்கள் பொருக்கு
தில்லை நெடியோன்.

குறிப்பு :

இது கதைப் பகுதியைச் சாரும். ஆலம் நபி என்பாருடைய கதையினைப் பாடலாகத் தருவதாகுமிது. பிழைகள் அதிகம். அரபுச் சொற்கள் கலந்துள்ளன. முதல் 2 ஏடுகள் இல்லை. 3-வது ஏட்டில் 'தானவனெப் பொத்தும் சாகிப்புதான்' என்றுளது. 4-வது ஏட்டில் 'ஆதியே துணை' என்பதுடன் நூல் தொடங்குகிறது.

வரிசை எண். **1196** சுவடி எண் : **862**

## தருமர் கதை

ஏடுகள் : 57. ஏட்டின் நிலைமை : மிகவும் பூச்சியரித்தும் ஓரம் ஒடிந்தும் உளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 27 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 800. ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

சிந்தையுந் தெளிந்துதேரி தெய்வமே கெதியென்றேன்
வந்தவரஷ்த்த னுபுரத்தில் வாழ்ந்துமே அரசுசெய்து
பந்தமாய் மாயோன்பாதம் பரிவுடன் மனதிலெண்ணி
தொந்திஐங் கரன்துலங்கும் தொப்பைவினயகன்
காப்புதானே"

சிவமயம்.

நூல்.

முந்தி யுதித்த வினயகனர் கையில் முக்கண னுருடன்
தொந்தி வயத்து வினயக னுனெநான் சொல்லுரேன்
பஞ்சவர்க்கு
வையகந் தன்னிலே விளங்குதற் குந்தம் வாலை
சரஷ்பதி வாலையம்மாள்
வாம நறுளுங் குருபரன வள்ளி பங்கனைத் தெய்வானை
நாயகியே
தர்மர் கதையென்று நான்பாட எந்தன் வற்மவினையே
அகற்றிடுவாய்"

முடிவு :

பாண்டிய குலாதிபன் பறவான முத்தருளப் ... ...
பாலன்சட் டாம்பிள்ளை பண்ணுந் தமிழ் வேண்டிய
வைகுன்றக் கும்மிதனைப் பாட வேயருள் செல்வ
மிகவாழி
யிந்தக் கதையை யெழுதிப் படித்தோர்கள்
யின்ன பதினருய் தான் வாழ்வர்

சந்தோஷ மாகவே வைகுன்றக் கும்மியை
சாற்றினேன் எல்லோருந் தான்
சுந்தன் கணபதி வாழியரோ
நல்ல கையிலைமலை யிஷ்பரன் தாள் வாழி ... ... ...
செந்தமிழ் தருமனும் வாழியதே நல்ல
செந்திருமால் உமையாள் பார்வதி வாழி
வைகுன்ற வாழியதே.

குறிப்பு :

மிகமிக எளிய நடையினைக்கொண்ட இந்நூல் மிகுந்த பிழைகளைக் கொண்டுளது. பஞ்சபாண்டவர்களில் முதல்வரான தருமபுத்திரரது கதையைக் கூறும் நூலிது. அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

வரிசை எண் : 1197 சுவடி எண் : 733 (a)

## பஞ்சதந்திரக் கதை

ஏடுகள் : 148. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 5—6 வரிகள். அளவு : 41×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 5000. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

பாடலிபுரமென்ற ஒரு பட்டணமுண்டு. அந்த பட்டணத்து ராசாவின் பேர் சுதெரிசனநென்ரோர்ராசா. அந்த ராசாவானவர் தற்மபரிபாலனம் பண்ணிக்கொண்டிருப்பார். அவருட குணமும், புகழும்ங்கீர்த்தியும் விவேதமும் பதிவிருதையான ஸ்திரியும் சங்கீத சாயுச்சியமுடையவன். தௌத்துலே தயிரியமுடையவன். தற்மத்தையுடையவன். தனலெட்சுமி, தானியலெட்சுமி அஷ்ட அயிசுவரியமுடையவன். உறைமுரையிடத்தில் தெயவும், ருணுவத்தாரிடத்தில் பட்சமும், துற்மாற்காளிடத்தில் கோபமும், சற்புத்திருளிடத்தில் வணக்கமும்... ...

முடிவு :

ஆகையாலே கண்ணாலே கண்டாலும் மனதினாலே விசாரியாமல் செயிதால் யிம்மைக்கிப் பழியும் வறுமைக்கிப் பாவமும் உயிற்குச் சேதமும் வரும். நண்ணா விசாரித்து செய்தால் தற்ம்மமும், தானமும்ப்புகழும், கீர்த்தியும் திரவியம் யிதெல்லாம் வருமென்று புருஷனுக்கு யாக செனனி சொல்லுவாளென்று சோமசன்மருகிய பிருமணன் சொல்ல இந்த அஞ்சுவகை தந்திரத்திலேயும் ராசாகுமாரற் கள் கேட்டு மிகுந்த விவேகமுடையவர்களாய் சந்தோஷ மாய் வாழ்ந்துயிருந்தார்கள் என்றவாறு.

சந்தோஷகாரி கதை முஷ்த்தும்.

ஸ்ரீ ராமஜெயம்

குறிப்பு :

ஐந்து தந்திரங்களான மித்திர பேதம், சுகிர்லாபம், சந்திர விக்கிரமம், லப்தஹாணி, அசம்பிரேஷ்ய காரியத்துவம் ஆகியவற்றை விளக்கும் கதைகளானதால் இது, பஞ்ச தந்திரக் கதை என்று பெயர் பெற்றது. இது செங்கற்பட்டு ஜில்லாவில் நீதிபதியாக இருந்த தாண்டவராய முதலியார் இயற்றிய பஞ்சதந்திரத்தின் வேறானது.

வரிசை எண் : 1198 சுவடி எண் : 733 (b)

## விக்கிரமாதித்தன் கதை

ஏடுகள் : 154. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 8-9 வரிகள். அளவு : 41 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 4000 ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

குறிப்பு :

இந்நூல் 732 (b) சுவடியைப் போன்றது பிறவற்றை அங்கு காண்க.

வரிசை எண் : 1199 சுவடி எண் : 732 (a)

## வேதாளக் கதை.

ஏடுகள் : 115 (1—115). ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 43 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2300. ஆசிரியர் : கவிக்களஞ்சியம் என்னும் புலவர். முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

அல்லா உன் உதவி செய்யவும்.

வேதாளங் கதை.

பரமேசுபரனும் பார்பதா தேவியும் சிங்காதனத்திலே யிருக்கிறபோது சுவாமியைப் பார்த்து பார்வதா தேவி சொன்னது. சுவாமி நீங்கள் நமக்கு யிந்த அன்பத்தாறு தேசத்திலே யாதாமொருவர் அறியாத கதையாய் எனக்கு நீங்கள் ஒரு கதை சொல்ல வேண்டுமென்று சுவாமியைக் கோட்டவிடத்திலே அந்தப்படியே அன்பத்தாறு தேசத் திலே ஆறுமொருவர் அறியாத கதையாய் அப்படித்நானே சொல்லுகுறேனென்று சுவாமி சொன்ன சேதி கேட்டு, பணிவிடை பண்ணுகிற பிராமணன், சுவாமி சொல்லுகுற கதையைக் கேட்கவேணுமென்று கேட்டுக்கொண்டு இது அறிய வேணுமெ அந்தக் கோவிலிலே, ஒரு பக்கத்திலே ஒளிஞ்சுக்கொண்டு திருக்காப்புக் கொண்டுப்போட்டுப் போகிறவன் யிந்தப் பிராமணன் இருந்தது அறியார்கள்.

**முடிவு :**

இந்த வேதாளக் கதை பூருவம் சுவாமி யீசுபரிக்குச் சொன்ன கதையை யெழுதிஞேரும், படித்தோரும், படிக்கச் சொல்லி பத்துதிரம் கேட்ட பேர்களும், சகலரும் அதிக சம்பத்துடனே பட்டாபிஷேகம் இருந்து பிறகு சிவ னுடைய பாதம் பேரு பெறுவார்கள். இந்தக் கதை பரமேசுபரன் பார்வதா தேவிக்கு அருளிச்செயித கதை.

அந்தக் கதையை விக்கிரமாதித்தனுக்கு வேதாளஞ் சொன்னது யென்றவாறு. இருபத்தஞ்சாங்கதை வேதாள கதையெழுதி நிறைந்ததும் முத்தும்.

**காலம் :-**

பாவாஸு ஆனிமீ 15-ந்தேதி நயன சோதி மஷ்த்தான் சாயபு அவர்கள் வேதாளங் கதை மேல்ப்படிஹு சுவாமி யானை கையெழுத்து.

**குறிப்பு :**

விக்கிரமாதித்த மன்னனிடம் வேதாளம் சொன்ன இருபத்தைந்து கதைகள். பரமசிவன் பார்வதி தேவியோடு ஏகாந்தமாயிருக்கும்போது சொன்ன கதைகளைக் கோயில் அர்ச்சகர் மறைந்திருந்து கேட்டதால் அவரை வேதாளமாகும்படிச் சபித்தார். அவ் வேதாளம் சாபவிமோசனம் பெற விக்கிரமாதித்தனிடம் அக்கதைகளைச் சொன்னது. இதில் 25 கதைகளிருக்கின்றன. வசனநடையில் உள்ளது. அச்சிடப்பட்டுள்ளது. ஆசிரியர் பெயர் தெரியவில்லையாயினும், எமது நூலகச் சுவடி காட்டலாக்குப் பகுதி II 475-ம் பக்கத்தில் கூறப்பட்டுள்ள 117-ம் சுவடியிலுள்ள 42-ம் செய்யுளால் இதனையும் இயற்றியவர் கவிக்களஞ்சியம் என்னும் புலவராதல் வேண்டும். இவர் புதுப் பாகையில் கருப்பன் என்பாரது புதல்வன் என்பர். இவர் செய்யுளாகப் பாடினர் என்பர்.

---

வரிசை எண் : **1200** சுவடி எண் : **732 (b)**

## விக்கிரமாதித்தன் கதை

ஏடுகள் : *129 (116 - 244).* ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6-8 வரிகள். அளவு : 42×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2600 ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

விக்கிரமாதித்தனிருந்து ராச்சிய பரிபாலனம் பண்ணுகிறபோது அவன் பட்டணம் மகா அலங்கிறுதமாய் மாசம்

மும்மாரியும் பெய தர்மத்தினுலே ராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு யிருக்கிற நாளையிலே சாந்தசீல ரிஷி பொருட்டாக வேதாளம் வசியமாய் அன்பத்தாறு தேசத் திலே உள்ள ராசாக்களுங் கப்பங் கொடுத்துவர இப்படி ராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு இருக்கிற நாளையிலே தேவேந்திரன் சபையிலே ஊர்வசி ரெண்டு பேரும் நடனம் பண்ணினவிடத்திலே யிந்திரன் பார்த்து இந்த ரெண்டு பேரிலே சாமாற்றியமுள்ளவள் யெவள் யென்று சொல்ல யிந்த சபையிலே யிவர்கள் திராணி பாத்துச் சொல்லுங்கோள் என்று கேட்டவிடத்திலே சபை யிலே இருந்தபேர் சொல்லுகுறுர்கள்.

முடிவு :

நீங்கள் சொன்ன கதையைப் படித்த பேரும், கேட்ட பேரும், எழுதினபேரும் புண்ணிய லோக முண்டாகி அஷ்ட்டாஅயிசூரியமுண்டாகி நீடுழி காலம் வாழ்வார் களென்று சொன்னளவிலே திவ்விய ரூபமான சிங்காதனம் தெய்வலோகமே போச்சுது. கன்னியள் முப்பத்து ரெண்டு பேருமாக கயிலாச கிரியிலே பார்பதாதேவி யண்டையிலே போய் ஊழியப் பெண்களாய் போய்ச் சோந்தார்களென்ற வாறு. முப்பத்து ரெண்டு பதுமைக்கதை யெழுதி முடிந்தது.

முத்தும். அல்லா உன் உதவி செய்வானுகவும்

காலம் :- (Colophon)

பரவா ஹூ வைய்யாசி மீ" உ௰அ-ந் தேதி. இந்தப் பதுமைக்கதை நயன சோதி மஷ்த்தான் சாயபு அவர்கள் குமாரன் காதரு சாயபுனுட பொஷ்த்தகம்.

குறிப்பு :

இது போஜராஜன் என்னும் மன்னன் விக்கிரமாதிந்தனுடைய சிம்மாசனத்தில் ஏறச்சென்றபோது, அச்சிம்மாசனத்தில் 32 படிக ளிலுமிருந்த 32 பதுமைகளும் அவனை ஏறவொட்டாமல் தடுத்து அவனுக்கு விக்கிரமாதித்தனுடைய வீர்தீர பராக்கிரமங்களை எடுத்துச் சொல்லிய கதையாகும். முப்பத்திரண்டு பதுமை கதை என இதற்கு மற்றொரு பெயரும் உண்டு.

இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லையாயினும் வேதாளக்கதை எழுதிய புதுப்பாகை என்னும் ஊரிலிருந்த கருப்பன் என்பவரது மகனான கவிக்களஞ்சியம் என்பவராக இருக்கலாம் என்று குறிப்பிட இடமிருக்கிறது. இந்நூல் 12-ம் நூற்றாண்டில் சோமதேவ் பட்டர் வடமொழியில் இய்ற்றிய கதாசரித சாகரம் என்னும் நூலிலிருந்து எடுத்தெழுதப்பட்டது என்றும், பைசாச மொழியில் குணாட்டியர் எழுதிய பிருகத் கதையே கதாசரித சாகரத்திற்கு முதல்நூல் என்றும் கூறுவர். தமிழில் முகம்மது இஸ்மாயில் சாகிபு எழுதியதாகத் தெரிகிறது. பழைய அச்சு நூல்களில் ஆசிரியர் பெயர் அறியக்கூட வில்லை. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

## நாடகம்

வரிசை எண் : **1201** சுவடி எண் : **863**

### சாத்தூர் நொண்டி நாடகம்

ஏடுகள் : 17. ஏட்டின் நிலைமை : மிகவும் பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 3-7 வரிகள். அளவு : 33×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 350. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" தோரணத் தரசர் கோடி சூழ்ந்திடுங் களரி மீதில்க்
காரணத் தாலே நொண்டி கதைதனை விரித்துப் பாட
வாரணத் தானும் வெள்ளை வாரணத் தானு முன்னா
லாரணத் தானுஞ் சாத்தூ ரப்பனுங் காப்ப தாமே "

நூல்.

விமலை திரிபுரை யிமைய மலைமகள்
கமலை யுமையவள் கெவுரியாள்
காமியா ளபிராமி யாள்துணையே தந்தானனு - க

கடலை பொரியவல் விடலை பயறொடு வடைய முதுசெய
கடவு ளார்கற் கடாசல விக்கினேசு பரனே
தந்தானனு - உ

தூயா சிங்குளல் வாயா வெங்கிடா மாயா தன்புகள்
பாடவே

துதிக்கு மதகரி துதிக்கை யார்துணே யேயென்
னுளுமே தந்தானனு - ந

முடிவு :

அடிசேலேக்குங் கைக்கு முபசார மென்னடி பெண்ணே
எந்தன் காலுக்குங் கைக்கும் வரந்தரச்
சொல்லடி மின்னே தந்தனுனததானுனு
மின்னலேயார் பாரில் நொண்டி மெலிவெல்லாஞ்
சொன்னேன் காளி
சன்னதி வாசல் நேரே தவசுக ளிருந்தார் பெண்க
ளன்னவள் வரங்கொடுத்தா ளாண்பிள்ளேச் சிங்கனுன
கன்னியர் கற்பி னுலே காலமு மிடறும் போமே''

குறிப்பு :

இசைநூற் பிரபந்தமென்று சொல்லப்படுவது நொண்டி நாடகம். நாடக வகையைச் சார்ந்தது. ஒருவனே இருந்து தானே தன் வரலாறு கூறுவது. காமவலேயில் சிக்குண்ட கள்வன் காமக் கிழத்தி பொருட்டுத் திருடச் சென்று சிக்குண்டு, அரசனுல் மாறுகால் மாறுகை வாங்கப் பெற்று இறையருளால் அவை வளரப்பெற்று, அக் கடவுளே நெஞ்சுருகப் பாடி பாவமன்னிப்புப் பெற்றுத் திருந்தியது. ஆடுகின்றவன் காலே நொண்டி கட்டிக்கொண்டு ஆடுவதால் இதற்கு 'ஒற்றைக் கால் நாடகம்' எனவும் மற்ளுெரு பெயர் உண்டு.

17-ம் நூற்ருண்டின் பிற்பகுதியிலும் 18-ம் நூற்ருண்டின் முற் பகுதியிலும் எழுந்த இந்நூல், ஊற்றுமலே மறவன், விசயாபுரி முற்று கையில் திருடிச் சாத்தூர் கோயிலில் வழிபாடியற்றியது. அச்சாகி யிருப்பதாகத் தெரியவில்லே.

வரிசை எண் : 1202. சுவடி எண் : 790 (a)

## வேங்கடேச ரெட்டப்ப நாயக்கன் பேரில் சமுத்திர விலாசம்.

ஏடுகள் : 34. ஏட்டின் நிலேமை : ஏடுகள் ஒடிந்தும், சிதைந்தும் உள்ளன. பக்கத்திற்கு : 4—7 வரிகள். அளவு :

38 × 2·5 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 800. ஆசிரியர்: கடிகைமுத்துப் புலவர். முழுமை: முழுவதும் உள்ளது.

தொடக்கம்:

காப்பு.

"விருதிடு கரணராசன் வேங்கடேசுர எட்டேந்திர
வொருதிட புருடன் கீர்த்தியுயர் சமுத்திர விலாசங்
கருதிடத் தமிழால் சொன்னேன் கயமுகத் தரக்கன்வீழப்
பொருதிடர் களையத் தாக்கும் புகர்முகக் களிறு
காப்பாம்."

நூல்.

"பார்பொருந்திய மேன்மை தங்கிய பாரதிண்புய
பூதரன்பங்கை யாசன மங்கைமேவிய சங்கபாணிரு
காத்தவன்
கூர்பொருந்திய வேலெடுத்த குமார எட்டன் வரத்தினுற்
குவலயத்தரசு செயமுளைத்த நயகுணவி தட்சண
விபேகவான்
கார்பொருந்திய கொடையினுனழ குகண்டு மாதர்மட
லெழுதவே
காமனைப் பொருது சோமனைக் குடைகவித்த ராச
துரந்தரன்
வேர்பொருந்திய தாருவின் புடைமேவு மிந்திர ஞமென
வெங்கரா சலதந்தி யெறிய வெங்கடேசுர எட்டனே."

முடிவு:

மண்டலிகன் வாழி யவன்மகவாஞ் செகவீரெட்டமனும்
வாழி துரைகள் கிளைஞர் பிள்ளைமாரும் பாரிவ்ாரமு வாழி
யண்டர் தமக்கோ ரமுதாகி யவனிதனக் கொப்பாகிய
மைந்த வாழிவாழி யெங்கோ ளனிந்தவாழி வாழியதே."
-கூ௰கூ

வேங்கடேசு ரெட்டப்பநாயக்கரவர்கள்பேரில் சமுத்திர விலாச முற்றும்.

சண்முகவேலு துணை.

சண்முகசுந்தரம் எழுதினது சமுத்திரவிலாசம்.

குறிப்பு :

இந்நூல் எட்டையபுரம் ஜமீன்தாராகிய வெங்கடேசுர எட்டப்பன் மீது கடிகைமுத்துப் புலவராற் பாடப்பட்டது. இது சமுத்திரத்தையும், அவ்விடம் திகழ்கின்ற பொருளையும் பார்த்துக் கூறும் வண்ணம், தலைவி பிரிந்து வருந்துவதைப் பாராட்டிக் கூறுவது. இந்நூலில் மடக்கும், சிலேடையுமே மிகுதியாக உள்ளன. இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

---

வரிசை எண் : **1203** சுவடி எண் : **790 (b)**

## காமரச மஞ்சரி.

ஏடுகள் : 29. ஏட்டின் நிலைமை : ஏடுகள் ஒடிந்தும், சிதைந்தும் உள்ளன. பக்கத்திற்கு : 6 — 8 வரிகள். அளவு : 38 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 700. ஆசிரியர் : கடிகை முத்துப் புலவர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

"இன்னிலங்கொண் டாடுவேங்க டேசுரெட்ட
மேந்திரன்மேல்
மன்னிவழர் காமரச மஞ்சரிக்கு—மின்னுமுடி
கம்பகும்பத் தானையொரு கையில்வைத்துப் பந்தாடுங்
கம்பகும்பத் தானைமுகன் காப்பு."

நூல்.

பார்பூத்த பெருதாத தெய்வப் பரந்தாமன்
கார்பூத்த வேலை கடைந்தநாள் - சீர்பூத்த
செய்யதிரு வுடனே தெள்ளமுதம் வந்துதிப்பத்
துய்யமதி மேலாகத் தோன்றுதல்போல் – வையகத்தைத்

முடிவு :

நித்திய கலியாணம் நிறைவேறக் கூடினான்
உத்தமனை நானுமுளத் திருத்திட மத்த
சுகமுந் தயவும் வரதோய்ந் தேனிதுவே
பகருஞ்சுக சோபனம். முற்றும்.

**காலம் : (Colophon)**

இராச்சதஸு கார்த்திகைமீ 4-ந் தேதி ஞாயிற்றுக் கிழமை நவமியும் சதையமும் கூடிய சுபதினத்தில் சிவகெங்கையிலிருக்கும் அருணாசலம் பிள்ளையவர்கள் மகன் மாசிலாமணியா பிள்ளை ஏட்டுப் புருந்திக்கியிணங்க ஷெடி ஊரிலிருக்கும் சண்முகசுந்தரம் பிள்ளை மகன் சுப்பிர மணியன் எழுதப்பட்ட இஃது காமரச மஞ்சரி முற்றிற்று.

ஸ்ரீமன் நாராயணசுவாமி சகாயம்.

**குறிப்பு :**

இந்நூல் வேங்கடேசுரெட்டப்பன்மீது பாடியது. இவர் எட்டையபுரம் ஜமீந்தாராவார். இதனைப் பாடியவர் கடிகைமுத்துப் புலவர் என்பவர், இந்நூல் இன்பச்சுவையுடன் சொல்லணி நிரம்ப உடையது. இந்தப் பிரதி முழுவதும் உள்ளது.

---

வரிசை எண் : **1204** சுவடி எண் :**790 (c)**

## சேதுபதிபேரில் வண்ணம்

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை ; ஏடுகள் ஓடிந்தும், சிதைந்தும் உள்ளன. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 38 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை ; முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

" தானதனந்தன்ன தனதந்தனனுத தனதான தந்தன
தானதந்ததான தந்தானதான நாடியசண்டனையே
அடல்கா பிரசண்டனையே பிறைநாறு மாசனை—
யானையே."

**முடிவு :**

" கூறும்மலங்கினமே மதிதான மலங்கினமே
மேமுனை வேலனுர் சொலு மேகவே வரு
வாளையே யெனவுமெமேனி வாளையே."

**குறிப்பு :**

இது கேசாதிபாத அழகினைக் கூறுவது. அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை. இந்நூலின் இறுதியில் சங்கீத கீர்த்தனைகள் எழுதிய ஏடுகள் 39 காணப்படுகின்றன. ஏடுகள் நல்ல சந்தமுடைய கீர்த்தனைகளாகக் காணப்படுகின்றன.

## வேதாந்த நூல்கள்

வரிசை எண் : **1205** சுவடி எண் : **806 (a)**

### உபநிடதம்—உரையுடன்

ஏடுகள் : 18 (21—38). ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 9—11 வரிகள். அளவு : 30×4 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 800. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

" மெய்யுடைய வடியார்மேல் விருப்புடையான்
கருப்பூர விளக்குப் போலென
பொய்யுடை யவருளப் போதப்
பொருளுடையா னருளுடையான் பொறியைந்தாலு
மையுடைய மனத்தாலு மயக்குடையார்
மதங்களைத் தாமதங்க ளாக்குங்
கையுடைய முகமுடையா னகமுடையான்
றனைக்கருத்தி லிருத்தல் செய்வாம். "

(இ-ள்.) சத்தியத்தையுடைய அடியார்மேல் விருப்பத்தையுடையவன் கருப்பூர தீபம் போல

**முடிவு :**

இருளகற்று நால்வேதத் துபநிடத
மெண்ணுன்கி னெங்கோன் சொன்ன
பொருளதனை நெருக்கத்தே சௌபாக்கிய
குருவென்னும் பொருளி னோடு
மருளகற்றும் படியழுத்தி தமிழ்போலு
மதனையொரு வழியெண் ணுன்கா
யருளகத்தி லிருந்துரைத்த வதிசயமே
வதிசயமற் (றறி)கி லேனே. "

(இ-ள்.) அஞ்ஞானத்தை நிவர்த்தி பண்ணுகின்ற நாலுவேதங்களுடைய முப்பத்திரண்டுபநிஷத்துக்களில் லெடுத்து யெங்கள் சுவாமியாகிய வியாசமகாமுனி திருவாய்மலர்ந்தருளிய பொருளினைச் சௌபாக்கிய குரு வென்னும் பொருளினோடும் அடியேனுடைய இருதயத்தின் மருட்சி அகலும்படி அழுத்தித் தமிழென்று சொல்லப்பட்ட பாஷையில்ப்பொருளை ஒரு வழியாய் முப்பத்திரண்டு செய்யுளாக அருளானது உள்ளத்திலிருந்து சொல்வித்த அதிசயமே யதிசயமில்லாமல் மற்றோரதிசயம் அறியேன் என்றவாறு. இச்செய்கையுள் இந்நூலாசிரியர் தங் குருவைப் புகழ்ந்து கூறியது. ௩௩

உபநிடத உரை முற்றிற்று. குருவே ரட்சியும்.
தர்மமே நிச்சயம். சிவமயம். திருச்சிற்றம்பலம்.
சிவஞான குரு தேசிகன் திருவடிகளே சரணம்.
சிவாய குருவே துணை. முற்றிற்று.

குறிப்பு :

வியாச பகவான் வடமொழியில் கூறிய உபநிடதத்தினைத் தமிழிற் செய்தவர் சௌபாக்கிய குரு எனலாம். 32 செய்யுட்களும், பாயிரம் மூன்று செய்யுட்களும் குரு வணக்கம் இறுதியில் ஒன்பது மாக 36 செய்யுட்கள் உரையுடனுள்ளன. ஏடுகள் தலை தடுமாற்ற மாக உள்ளன. முதல் 20 ஏடுகள் இல்லை.

---

வரிசை எண் : **1206** சுவடி எண் : **806 (b)**

## உடலறிவிளக்கம்.

ஏடுகள் : *11 (41—51)*. ஏட்டின் நிலைமை; நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : *9–10* வரிகள். அளவு : *30 × 4* செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *450*. ஆசிரியர் : சங்கராச்சாரியர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"விடமருந்தி யமுற்தமுண்ட விமலநாதன்
விரிசடையன் மதிசூடி மழுமானேந்தி
இடமருவும் பரைபுதல்வ னறுமுகவன்
கந்தனிளவ லரிமருக நீருறுதோளன்

குடவயற்ற னுக்கிளைய குமரன்செவ்வேள்
குசனைமற வாமல்நெஞ் சகமேபூண்டு
உடலறியு விளக்கமென யுரைத்தேன் பாவுக்
குதவியருள் புரியுமயன் றேவிகாப்பாம்."

முடிவு :

"சினந்துயரத் தழுந்திமனக் கவலைநீங்கார்
தெளிந்தகுருக் கேள்வியில்லாச் சிந்தையாளர்
புனந்தனிற்காய் சருகருந்திப் பால்கொள்வோரும்
பூசனைசெய் தரசாரக் கிரிகையோரும்
யினந்தழுவிப் பாசத்தோ டுழல்கின்றோரும்
யின்பசுகந் தனியாக மோகத்தோடு
மனந்தெளிந்து கண்டுகொள்ள மாட்டாரென்று
மாமுவர் தாமுரைத்த வாறிதாமே." -அசு

மெய்க்குருவுற் றுரைத்ததனைக் கேட்டெழுந்து
மெல்லடியில் வீழ்ந்துவாய் புதைத்துநின்று
பொய்க்குருவைப் போன்றியடி யேனுமிந்தப்
புவியிலலைப் புண்டு திரியாம

குறிப்பு :

இது சங்கராச்சாரிய சுவாமிகள் அருளிச் செய்தது. உடற்கூற்றினை அறியும் தன்மையினைக் கூறுவது. முழுமையுமின்மையால் செய்யுள் எண்ணிக்கை அறியமுடியவில்லை. இதில் உள்ளது 84 செய்யுட்களே. 39, 40-வது ஏடுகள் இல்லை. இதன் பின்னர் களவு வெளியாக்க என்னும் தலைப்புள்ள ஒரு மந்திர ஏடு காணப்படுகின்றது.

வரிசை எண் : **1207** சுவடி எண் : **806 (c)**

## அகஸ்தியர் சூத்திரம் பனிரெண்டு.

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 39 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

“ தாயான யுன்மனைத்தாயிப் பாதம் போற்றிச்
சாஸ்த்திறமோ ஆயிறத்து யிறனூ ருக்குள்
தோயாத கருவொன்று மில்லை யப்பா
சொல்லடக்க மாயுறைத்தே வழலை யொன்று
காயாது மிதைக்குறிக்கி யிறநூறு சொன்னேன்
கனிபோலே யிந்தநூல்ப் பனிரெண் டுக்குள்
வாயாற சொல்லுகுறேன் வகாற மார்க்கம்
மதியிறவி யண்டபிண்டம் வளமை கேளே.”

முடிவு :

தானென்ற அண்டபிண்ட குருவே செய்யத்
தவம்வேணும் சிவம்வேணும் நயவும் வேணும்
வானென்ற அக்கினியா முப்பெத் தானம்
மதிவேணும் விதிவேணும் வாச வேணும்
நானென்ற ஆணுவத்தை யொடுக்க வேணும்
நலமான சிவயோகம் நாட்ட வேணும்
தேனென்ற சற்க்குருவெக் காற்க வேணும்ச்
சித்தியாம் பன்னிரெண்டும் சிறக்கும் முத்தே.” -யூஉ

கலைஞயகித்துணையுண்டாகவேணும். குருவே துணை.

குறிப்பு :

இது வைத்திய சாத்திரம். அகத்தியர் அருளிய 1,200 என்ற நூலைச் சுருக்கி 200 ஆகச் செய்தார். அதன் சுருக்கமே இப் பன்னிரண்டு செய்யுட்கள் கொண்ட நூலாகும். சிறந்த வைத்தியம் கூறப்பட்டுள்ளது.

வரிசை எண் : **1208** சுவ்டி எண் : **806 (d)**

## அகத்தியர் வாதநூல்

ஏடுகள் : 12. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 7—10 வரிகள். அளவு : 30 × 4 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 500. ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" ஆதியனை யானந்த சற்குரு சோதி பாதம்
நீதியெனை யாண்டதொரு கந்தன் பாதம்
நினைவாக முப்பதிலே நிறைந்து வாழும்
வாதியெனப் பேர்படைத்த புலத்தியனே அய்யா
வரிசையால் வழலையுட வகையைக் கேளே ".

முடிவு :

பண்டான வட்டுப்போல் பிடித்து நீயும்
பாங்கான ஓட்டிலிட்டு ஓடு மூடி
மண்டான குக்குடமாய் புடத்தைப் போடு
மைந்தனே நீறியது பர்ப்ப மாச்சே. " -மு.

குறிப்பு :

இது அகத்தியர் அருளிய வாதநூல். செய்யுட்களின் எண்ணிக்கை அறியக்கூடவில்லை. இந்நூலில் வாத நோய்க்குள்ள மருந்துகள் கூறப்பட்டுள்ளன. இந்நூலின் இறுதியில் அகத்தியர் ரெத்தினச் சுருக்கம் எழுதிய ஏடுகள் ஐந்தும், சதானந்த பயிரவன் வைத்தியம் எழுதிய ஏடுகள் 3-ம், கடுக்காய் லேகியம், நெல்லிக்காய் லேகியம், சுக்கு லேகியம்—எழுதிய ஏடுகள் 2-ம் கோர்க்கப்பட்டுள்ளன. இவையும் சேர்ந்தே மொத்தம் 12 ஏடுகள்.

---

வரிசை எண் : **1209** சுவடி எண் : **725 (a)**

## கும்பமுனி நாயனார் வாக்கியம் ஞானம்

ஏடுகள் : 10. ஏட்டின் நிலைமை ; நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 20 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 200. ஆசிரியர் : கும்பமுனி நாயனார். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" ஒன்றான யெழுத்தாலே வாசியாச்சு
ஓகோகோ செகமாச்சு அண்டமாச்சு
ஒன்றான யெழுத்தாலே சிவமுமாச்சு
உள்ளடக்கஞ் சோதியைப்போ லொளியுமாச்சு

ஒன்முன யெழுத்தாலே கோபமாச்சு
உதிக்கிறது மொடுங்கிறது ரெண்டுமாச்சு
ஒன்முன யெழுத்தாலே நந்திநந்தி
உத்தமனே உரைத்துஉன்னி உன்னிப்பாரே". -க

முடிவு :

கூறுகிறோம் சீஷனுக்குச் சொல்லும் ஞான
கோடிதன மீய்ந்தாலுங் கும்பிட்டாலும்
மாறுகிற புத்திகண்டால் முகம்பாராதே
வாய்ப்பேச்சாய்ப் பேசியே வழியேக்கூட்டு
தேறுகிற புத்தியுள்ள சீஷ ஞனுல்
தேவியுட நூல்வகையைத் தெரியச் சொல்லு
ஆறுகிற குனெங்கண்டு வணக்கம் பார்த்து
அப்பனே ஆனந்த முத்து வாயே." -உயரு

குருவே துணை.

குறிப்பு :

இது ஞான மார்க்கத்தினைக் கூறும் நூல். கும்பமுனி என்று அகத்தியருக்கு மற்றொரு பெயருண்டு. ஆகவே இது அகத்தியர் நூலாகக் கருத இடமிருக்கிறது.

---

வரிசை எண். 1210 சுவடி எண் : 725 (b)

## ஆராதார தெரிசனத்தில் மூலாதார தெரிசனம்.

ஏடுகள் : 8. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு ; 6-7 வரிகள். அளவு : 20 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150 ஆசிரியர் : தெரியவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"காலெலும்பு இரண்டுங் கதிரெலும்புங் கூடினவிடங் குய்யம். குய்யத்துக்குங் குதத்துக்கு நடுவே குண்டலி வட்டம். அதுக்கு நடுவே முக்கோணமாயந்த முக் கோணத்து நடுவே நாலிதழையுடைய ஒரு புஷ்ப்ப வட்ட மாய்க் கடப்பம்பூப் போன்றிருக்கும். அந்த புஷ்ப்பத் துக்கு நடுவே ஓங்காரவெழுத்து நிற்கும்."

முடிவு :

மேல்நோக்கி யாதார மாறுங்கடந்து சந்திரநாடி வழியே சென்று அன்னுக்கினூடே பொய்கண்ட பெறு வளியிலே சென்று விந்து நிலையிலே நின்று நாதமுற்பட்ட சிவலிங்க பெருமானைத் தெரிசித்து அப்புறம் எட்டு மிரண்டுக்கு மேலாகி நின்ருடுகிற திருக்கூத்தைத் தெரிசித்த மெஞ்ஞானிக்குப் பிறப்பில்லையென்று பரமகுரு தேசிகன் பாதமடைந்து வாழலாமென்றவாறு. இதற்குச் சக்கரம்.

குறிப்பு :-

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என்று சொல்லப்படுகின்ற ஆறு ஆதாரங்களி னுடைய நிலையினைச் சுருங்கச் சொல்லுவது. அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

இந் நூலின் பின்,

பொய் சொல்லா வாயனி மூடு ஆனந்தம்
பொருளிலிருந்தா நூரு புண்ணியம் தேடுவைய்யக
வாலவல்லாகேடு ஆனந்தம் வாவென்று அலைகவிலா
சுடுகாடு பாவத்தை தேடாதே வுடலே "

என்ற ஒரு ஏடு உள்ளது.

வரிசை எண் : **1211** சுவடி எண் : **896**

## கைவல்லியம் (சக்கரத்துடன்)

ஏடுகள் : 56. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 17 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 900. ஆசிரியர் : மலையாளபண்டிதன். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" நன்னுரிவேருக்கு காப்புக்கட்டி, பால்பொங்கலிட்டு; பெலிகுடுத்து, தூபதீபங்காட்டி ஓம்சிவா சிவாவென்றும் செனன்மோகினியே மோகினி சறுவமோகினிசுவாகா- வென்று பத்து உருச்செபித்து வேர்அருமல் வெட்டி குளிசமாடிட சென்னமோகினி சித்தியாம். "

முடிவு :

சாந்திக்கு சாமான் :

| | | | |
|---|---|---|---|
| செஞ்சாவல் | —க | சேலேவேட்டி | |
| கருஞ்சாவல் | —க | அரிசி படி | —ந |
| பெட்டைக்கோழி | —க | பச்சரிசி படி | —உ½ |
| கோழிமுட்டை | —எ | அஞ்சுவகை அரிசி | |
| வாழைத்தண்டு | —ந | புண்ணுக்கு பலம் | —ரு |
| கும்பகலசம் | —கூ | கருப்புக்கட்டி பலம் | —ரு |
| புது ஓடு | —ந | வஸ்து | ரூ.—க½ |
| சாம்பிராணி | —கரு | சூடன் | —ந |
| அவல்கடலே | | தேங்காய் | —கூ |
| வில்வம் | —எ | | |

குறிப்பு :

இது மாந்திரீக நூல்களுள் ஒன்ருகும். மலேயாள மாந்திரீகம் எனத்தகு சிறப்புகள் உள்ளன.

வரிசை எண் : 1212 சுவடி எண் : 822

## கைவல்ய நவநீதம் - அம

ஏடுகள் : 27. ஏட்டின் நிலேமை : நல்ல நிலேயில் உள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 23 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300. ஆசிரியர் : அறியக்கூடவில்லே. முழுமை : முழுவதும் இல்லே.

தொடக்கம் :

“பொன்னில் மாத ராசை
பொருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னிலந் தரத்தில் சீவ
சாச்சிமாத் திரமாய் நிற்கும்
மென்னிலந் தன்க்கு மிந்த
வெழுநிலந் தனிலு மேலாந்
தன்னில மருவு மேக
ஞயகன் பதங்கள் போற்றி. - க

முடிவு :

அனுபவா னந்த வெள்ளத்
தமுதனந்தியே யகண்ட மாகித்
தனுகர ணங்க ளாதிச்
சகலமுங் கரைந்து சித்தர்
மனதுபூ றணமாய்த் தேக
மாகியே குருவுங் காண
நனைவினில்ச் சுழித்தி யாகி
நன்மகன் சுவாப மானுன். - அம
அழிமகன்

குறிப்பு :

வேதாந்தச் செய்திகளைக் கூறுவது இந்நூல். வேதத்தில் கைவல்ய உபநிஷத் என்ற பகுதி இருக்கிறது. இந்நூலில் மூலம் மட்டும் 80 செய்யுட்கள் இருக்கின்றன. இதன் முழு அளவு 186 செய்யுட்கள் இருக்கின்றன. இது உரையுடன் அச்சிடப் பட்டுள்ளது. பாடபேதங்கள் நிறைந்து காணப்படுகின்றன.

வரிசை எண் : **1213** சுவடி எண் : **947**

## சங்கராச்சாரியார்
## நாதாந்தத் திறவுகோல்.

ஏடுகள் : 13. ஏட்டின் நிலைமை: பூச்சியரித்தது. பக்கத்திற்கு : 8 — 9 வரிகள். அளவு : 30 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 450. ஆசிரியர் : சங்கராச்சாரியார். முழுமை ; முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" அண்டாண்டங் கடந்துநின்ற நிற்குணமே போத்தி
அளவிலா நிற்சணத்தை யடுத்தென் ஞளுங்
கொண்டுநிற்கும் பூரணத்தைத் துடந்து கூடிக்
குண்டலிகுள் ஈசர(னைக்) கூர்ந்து போத்தி

முடிவு :

"நாதாந்தந் திறப்பதற்கு திறவு கோல்தான்
நாட்டினேம் களங்கமின்றி மூல யோகம்
போதாந்தம் மேத்திவிக்கும் பொருளைக் காட்டு
பூரணத்தில் ஞலாதான் பிடித்துப் பாரு
காதாந்தம் மோடாது சுளினை நோக்கி
கண்ணிமைக்குள் விண்ணுக்குள்க் காணும்ந் தீபம்
வேதாந்தங் கடந்துநின்ற நிற்மலத்தைப் போற்ற
வெளியாகி ஒளிமிகுந்த சோதி முற்றே." -சூயக

காலம் : (Colophon)

நாதாந்தத் திறவுகோல் தாருணஞு மாற்(ர்)கழிமீ ரு-உ அனுச நட்சத்திரமுளைச்ச வேளையில் எழுதி நிரை(றை)ந்தது. முற்றும்.

சிவாயகுருவே துணை.

குறிப்பு :

இது யோகசிந்தாந்த நூல். நாதத்தின் தத்துவாதீதமான ஈசுவர சொரூபமும் அதனை அனுபவித்து அடையும் பயனும் இதில் கூறப்பட்டுள்ளன.

வரிசை எண். 1214 சுவடி எண் : 889

## சட்விதலிங்க வர்ணகம்

ஏடுகள் : 50. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தது. பக்கத்திற்கு : 5-6 வரிகள். அளவு ; 26 × 2.5 செ. மீ. எழுத்து ; தமிழ். கி. எண்ணிக்கை : 800. ஆசிரியர் ; அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

சடுவித லிங்கத்தின் தார்ப்பரியம். அஃதெப்படியெனில் உபக்கிரமம், உபசங்காரம், அப்பியாசம், அபூர்வதைபலம், அர்த்தவந்தம், உபத்தி யெனஆராம். இவைகளில் உபக்கிரம் உபசங்காரம் இரண்டும் ஒரு லிங்கம்.

அப்பியாசம் ஒருலிங்கம். அபூர்வதை ஒரு லிங்கம்.
பலம் ஒரு லிங்கம். அர்த்தாவதம் ஒரு லிங்கம்.
உபபத்தி ஒரு லிங்கம். இந்த ஆறு லிங்கங்களாலேயும்
சுருதிகளின் தார்பரியமானது நிர்ணயிக்கப்படுகின்றது.

முடிவு :

ஆண்ட தேசிகனு மையனுரண னனனந்தன் பாதம்.
பூண்ட.........ரோபத்தான் முன்பொன்மயக்காய்
-வந்தத்தை
மாண்டநல்ல.........மாய்த்த..........ஞுக்கத்தென்றும்.
காண்டடி......வைத்தளி......தூர..............
தாரணுபோற்றி போற்றி.

காலம் :- (Colophon)

மன்னுர்பாளையம் சோமசுந்தர அய்யர் புத்தகம்.

குறிப்பு :

இது வேதாந்த நூலாகும். 6 வகையான லிங்கங்கள் தொடக்கத்தில் கூறப்பட்டுள்ளன. இந்நூலின் இறுதி ஏடுகள் மிக மிகச்சிதிலமாக உள்ளன.

---

வரிசை எண் : **1215** சுவடி எண் : **906**

## சிதம்ப்ர சக்கரம்

ஏடுகள் : 35. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் எலி கடித்துள்ளது. ஒடிந்துமுளது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 28 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை ; 650. ஆசிரியர் ; அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" கிளமேல்-ய௨, தென்வடல்-ய௨ ரேகை கீரி-ாஉய்க
அறையாக்கி வாயு கோணத்தறையிருபத்தஞ்சுக்கு
மவாயநசி-யநவாசிம-நமசிவாய-வசிமயன-சியந
மவாய இடவும். ஈசான மூலையில் சிநயமவா-நமசிவாய
மயநமசி-நவம்சிய-சிவாயநம என்றிடவும்.

முடிவு :

" மகாரம் நடுவாய் வளைப்பது றீங்சாரம்
ஓகாரம் வளைத்ததில் யுள்ப்பிளந் தெற்றி
யகாரம் தலையா யிறுகண் சிகாரமாயி
நகார மகறம் யிறுகாது ஞடுமே." -ச

" ஞடுபி......வாகும் நாரணன் றீங்காரம்
ஞடு நடுமுகம் நமச்சிவாய மென
ஞடும் யிறவட்ட நமசிவாயமே." -ரு

குறிப்பு :

இது நமசிவாய எனும் அட்சரத்தின் மகிமையினைக் கூறுவது. சதுரக்கட்டங்கள் வரைந்து அதில் அட்சரங்களை வரைந்து அதனைப் பூசித்துப் பேறு பெருவதாகும். இந்நூல் No. 921-ஐப் போன்றது.

❀❀❀

வரிசை எண் : 1216 சுவடி எண் : 921

## சிதம்பர சக்கரம்

ஏடுகள் : 64. ஏட்டின் நிலைமை ; நல்ல நிலை.
பக்கத்திற்கு : 5-6 வரிகள். அளவு : 20.5 × 2.5 செ.மீ.
எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 900. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

குறிப்பு :

இந்நூல் No. 906 என்னும் சுவடியைப் போன்றது.

வரிசை எண் : 1217. சுவடி எண் : 934

## சிவயோகஞானம்

ஏடுகள் : 7. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 8-9 வரிகள். அளவு : 14 × 3.5 செ. மீ.
எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம்:

"சித்திபெத்த விநாயகன்தன் பாதங் காப்பு
சிவனுமையாள் பெத்தெடுத்த செல்வன் காப்பு
ஆதியென்ற ஆதியது மூலங் காப்பு
ஆடினதோற் பதினெண்பெர் பாதங் காப்பு
முத்திபெத்த ரிசிகள்சித்தர் பாதங் காப்பு
மூனேமேலே நின்றபரஞ் சோதி காப்பு
சத்தியா யுலகெல்லா மொன்றாய் நின்ற
சகலபொரு ளாய்நிறைந்த சரசுபதியே காப்பு"

முடிவு:

"கூர்ந்துபார் வேதாந்தி சொன்ன வாய்க்கங்
குருப்பரிந்து பதினாலு கூர்ந்து பார்த்தால்
தேர்ந்துபார் மணங்களெல்லாந் தெளிந்து போகுஞ்
சிகச்சால வித்தையென்று மனம்தேரிப் போகும்
ஆர்ந்துபார் பலகலையின் ஞான மெல்லா
மரிவுபோல் யெடுத்துவைத்தே னரிவுள் ளோர்க்கு
சேர்ந்துபார் கதிர்மதியின் மௌன மூலஞ்
சிவயோக ஞானமெல்லாஞ் செல்வந் தானே."

குறிப்பு:

இது யோகசாத்திரமாகும். சிவயோகத்தின் நிலையினை விளக்குவது. இந்நூல் 8-ஆம் ஏட்டிலிருந்து தொடங்குகிறது. முதல் 7 ஏடுகள் காணப்படவில்லை. இடையில் 9-ஆம் ஏடும் காணப்படவில்லை.

வரிசை எண்: 1218 சுவடி எண்: 907 (a)

## சுப்பிரமணியர் இரண்டாவது சுத்தஞானம் 100

ஏடுகள்: 15. ஏட்டின் நிலைமை: நல்ல நிலை.
பக்கத்திற்கு: 7-11 வரிகள். அளவு: 25 × 3 செ. மீ.
எழுத்து: தமிழ். கி.எண்ணிக்கை: 500. ஆசிரியர்: சுப்பிரமணியர். முழுமை: முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" சந்திர நான விந்துவும் றவியதும் தான்கலந்து
மந்திர மான பிரணவ மாகி மவுனமதாம்
யிந்திரன் வானவர்க் கெட்டா தரும்பொருள்
யின்பமதாம்
தந்திர மான ஞானசைய் தன்னியம்ங் காப்பதுவே "

முடிவு :

பேசியதோ ரின்னூலை பேணிப் பாருற்
பெரியோர்கள் வாக்கியத்துக் கீடோ என்பாற்
தாசிமகன் வாயிலேநீ மண்ணைப் போடு
தையலுக் குதவாத சறடால்ச் சண்ணு
தேசிகனுற் திருவடியை அடுத்த பேர்கள்
செயமான ஞானியர்க்கு யென்னூல் விளங்கும்
பாசிமன மடையனுக்கு விள்ளா தப்பா
பண்ம்புடனே யின்னூல்தான் பண்ம்பாய் முற்றே.

சுப்பிரமணியன் 2-வது பாகம் முற்றும்.

குறிப்பு :

இது ஞான மார்க்கத்தினைக் கூறும் நூல். அகத்தியருக்கு சுப்பிரமணியக்கடவுள் உபதேசித்தது. முதல் ஞானமென்றொரு நூலுண்டு இதன் பின்னர் வேறு பாடல் எழுதிய ஏடு ஒன்று உளது.

---

வரிசை எண் : 1219 சுவடி எண் : 907 (b)

## சுப்பிரமணியர் பத்து

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு ; 25 × 3 செ. மீ.
எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : சுப்பிரமணியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

குருமுனிக்கு உபதேசித்தது.

" ஆதியாம் பருபறனை போத்தி செய்து
அம்மையவள் உலகத்தோர் பிள்ளை வேண்டி
நீதியாய் மாந்திரிகம் சக்கரங்கள் மூலிகை
நிசமாக உறையென்று அறனைக் கேள்க்க

சோதியே உமையவளை நீகே ளென்று
சொல்லுகிறேன் பஞ்சாட்சரத்தின் சுருக்கந் தன்னை
வாதியாம் பெரியோர்க்கு புத்தி யுள்ளோர்
மன்னவர்க்கு யிதுவகை ஆகுமே." -க

முடிவு :

" நீருகு மஞ்சனத்தி லகப்ப டாது
நிலையான கற்மம்வித்தை நிகரில் லாது
தேருன கோடிவித்தை யாடிப் பாறு
சிகச்சால வித்தையெல்லா மிதிலே யாடும்
சீருன குருபதத்தை மறந்தி டாதே
செப்புகின்றேன் பத்துக்குள் சிறப்பு முற்றே." -ய

சுப்பிரமணியர் பத்து முற்றும்.

குறிப்பு :

இதுவும் ஞான மார்க்கத்தினைக் கூறும் நூல். அகத்தியருக்கு அருளியது எனக்காணப்படுகின்றது.

---

வரிசை எண் : 1220 சுவடி எண் : 907 (c)

## அகத்தியர் வாதம் ஆறு

ஏடு : 1. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 9 வரிகள். அளவு : 25 × 3 செ. மீ.
எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 30. ஆசிரியர் :
அக்த்தியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" சித்தாதி ஆதியிலே பதினெண் பேர்கள்
சிவமரியாய்த் தேவியுட வார்த்தையி நாலே
கத்தாகி சிவனுடைய திருக்கூத் தப்பா
காரணமாய் சிவ்முனிவர் பாறு பாறு
வித்தாதி சாஸ்த்திரங்கள் கோடர் கோடி
விளம்பினேன் யின்னூலை விரைந்து பாறு
அத்தாதி யானவர்க்கே யெய்தும் மெய்தும்
அல்லாட்டா லெய்துவது அறிந்து பாரே."

முடிவு :

"வகாறமடா ஆருக்குள் ஒளிக்க வில்லை
மைந்தனே சமுத்திரத்து உப்பு ஆதி
சிகாறமடா வேதைகளோ கோடா கோடி
சித்திலே இதைவிட்டால் சாப மாகும்
வகாறமடா யின்னூலே அண்ட பிண்டம்
பரமகுரு தானறிய வெளியில் வைத்தேன்
நகாறமடா சுந்தரமே யின்னூலைப் போல
நாட்டார்கள் வாதத்தின் செய்கை முற்றே."

அகத்தியர் ஆறு முற்றும்.

குறிப்பு :

இந்நூல் உப்பின் மகிமையினை எடுத்துரைக்கின்றது. தத்துவத்தின் ஞானம் கூறுகின்றது. ஆறு செய்யுட்களே உள்ளன.

வரிசை எண் : **1221** சுவடி எண் : **931**

## சுப்பிரமணியர் உகாரம்

ஏடுகள் : 12. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 22×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 200. ஆசிரியர் : சுப்பிரமணியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"சுளியான சுளிதனிலே வொடிங்கி நல்ல
உத்தகலை வாசிசிவ யோகத் தேகி
வளியான துரையறிந்து மௌவுனங் கொண்டு
மகத்தான ஆண்டவரை முடிமேல்ச் சென்று
தெளிவான ஓங்காரம் வடிவேல்க் கொண்டு
தெளிந்துமனத் தறிவத்தால் தன்னைக் கண்டு
வெளியான வெளியறிந்து வாச மாகி
வேதாந்தச் சத்திசிவ ஆதி காப்பே." -க

முடிவு :

தெளிவான தெளிவதென்ன தன்னைப் பார்த்து
தீர்க்கமுட னிருந்துதவம் செய்வா யென்று
வளியாக அனுகிரேகம் வறமு மீய்ந்து
மார்க்கமுள்ள மயில்வீரன் வடிவேல்க் கொண்டு
அளியாத ஆண்டவரை முடிமேல் வைத்து
அஷ்டகிரி பருவதத்துக் கரசு மாகி
ஒளியாகி அண்டவெளி யெங்குந் தானய்
ஓங்கார வடிவேலர் உகார முற்றே.

முற்றிற்று.

சுப்பிரமணியக் கடவுள் துணையாகவும். முடிந்தது.
ஷ ராத்திரி ௰௧இ ($11\frac{1}{2}$) மணிக்கி மேல் குரு நமசிவாயம்.
குக நமசிவயம்.
சரசுபதி துணை.

குறிப்பு :

வேதாந்த நூலைச் சாருமிது. சுப்பிரமணியர் அகத்தியருக்கு உபதேசித்தது. ஓங்காரத்தில் உள்ளெழுத்தாகிய உகரத்தின் பொருள் கூறுவது.

---

வரிசை எண் : **1222** சுவடி எண் : **920**

## சுப்பிரமணியர் சுத்த ஞானம்—ா

ஏடுகள் : 15. ஏட்டின் நிலைமை : சிறிது எலி கடித்துள்ளது. பக்கத்திற்கு : 9-15 வரிகள். அளவு : 26×3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 500. ஆசிரியர் : சுப்பிரமணியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"ரசிதமாஞ் சுத்தக் கியான
ரகசியப் பொருளில் தோன்றும்
சசிதமாம் வாய்வு பஞ்சு
சுழல்கின்ற வட்ட மொன்று

உசிதமாம் தேய்வும் அப்பும்
உலாவிய சிந்தை தன்னில்
தொசிதமாஞ் சித்த மாகி
துலங்கிய காப்புத் தானே."

முடிவு :

"பொன்வெள்ளி செய்கிறவன் பெரியோ னல்ல
புகழான அஷ்ட்டசித்தர் பெரியோ னல்ல
முன்னின்ற வைத்தியனும் பெரியோ னல்ல
மூச்சடக்கி யெழும்பினவற் பொரியோ றல்ல
தன்னிலையை யரிந்தவரே பெரியோ ரப்பா
தனையரியான் பெரியறல்ல சண்டி மாடே
சின்னமுள்ள குளியிறுப்போற் பெரியோ ரல்ல
திரமுள்ள கவனமிட்டோர் பெரியோ ரல்ல." -ா

குறிப்பு :-

இது வேதாந்த நூலாகும். சுப்பிரமணியர் அகத்தியருக்குப தேசித்தது. ஐந்து பூதங்களின் இயல்பினைக் கூறுவது. 2-வது சுத்த ஞானம் போன்றது.

வரிசை எண் : 1223. சுவடி எண் : 912

## சுப்பிரமணியர் ஞானம் 200

ஏடுகள் : 93. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 4—5 வரிகள். அளவு : 16 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1300. ஆசிரியர் : சுப்பிரமணியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" அண்டற் பருபரமாம் பரையின் பாதம்
அய்யனெங்க ஆதிவஷ்த்தின்ம் பாதம் போற்றி
தொண்டர்கள்மெஞ் ஞானியுட பாதம் போற்றி
சொல்லுகிறேன் னுபதேச மிரநூர் தன்னை

முடிவு :

தெளிவான தெளிவதென்ன தன்னைப் பார்த்து
தீர்க்கமுட னிருந்துதவம் செய்வா யென்று
வளியாக அனுகிரேகம் வறமு மீய்ந்து
மார்க்கமுள்ள மயில்வீரன் வடிவேல்க் கொண்டு
அளியாத ஆண்டவரை முடிமேல் வைத்து
அஷ்டகிரி பருவதத்துக் கரசு மாகி
ஒளியாகி அண்டவெளி யெங்குந் தானுய்
ஓங்காரா வடிவேலர் உகார முற்றே.

முற்றிற்று.
சுப்பிரமணியக் கடவுள் துணையாகவும். முடிந்தது.
ஷ ராத்திரி ௰௧௨ (11½) மணிக்கி மேல் குரு நமசிவாயம்.
குக நமசிவயம்.
சரசுபதி துணை.

குறிப்பு :

வேதாந்த நூலைச் சாருமிது. சுப்பிரமணியர் அகத்தியருக்கு உப தேசித்தது. ஓங்காரத்தில் உள்ளெழுத்தாகிய உகரத்தின் பொருள் கூறுவது.

---

வரிசை எண் : **1222** சுவடி எண் : **920**

## சுப்பிரமணியர் சுத்த ஞானம்—ா

ஏடுகள் : 15. ஏட்டின் நிலைமை : சிறிது எலி கடித்துள்ளது. பக்கத்திற்கு : 9-15 வரிகள். அளவு : 26×3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 500. ஆசிரியர் : சுப்பிரமணியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"ரசிதமாஞ் சுத்தக் கியான
ரகசியப் பொருளில் தோன்றும்
சசிதமாம் வாய்வு பஞ்சு
சுழல்கின்ற வட்ட மொன்று

உசிதமாம் தேய்வும் அப்பும்
உலாவிய சிந்தை தன்னில்
தொசிதமாஞ் சித்த மாகி
துலங்கிய காப்புத் தானே."

முடிவு :

"பொன்வெள்ளி செய்கிறவன் பெரியோ னல்ல
புகழான அஷ்ட்டசித்தர் பெரியோ னல்ல
முன்னின்ற வைத்தியனும் பெரியோ னல்ல
மூச்சடக்கி யெழும்பினவற் பொரியோ றல்ல
தன்னிலையை யரிந்தவரே பெரியோ ரப்பா
தனையரியான் பெரியறல்ல சண்டி மாடே
சின்னமுள்ள குளியிறுப்போற் பெரியோ ரல்ல
திரமுள்ள கவனமிட்டோர் பெரியோ ரல்ல." -ா

குறிப்பு :-

இது வேதாந்த நூலாகும். சுப்பிரமணியர் அகத்தியருக்குப தேசித்தது. ஐந்து பூதங்களின் இயல்பினைக் கூறுவது. 2-வது சுத்த ஞானம் போன்றது.

வரிசை எண் : 1223. சுவடி எண் : 912

## சுப்பிர்மணியர் ஞானம் 200

ஏடுகள் : 93. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 4—5 வரிகள். அளவு : 16 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1300. ஆசிரியர் : சுப்பிரமணியர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" அண்டற் பருபரமாம் பரையின் பாதம்
அய்யனெங்க ஆதிவஷ்த்தின்ம் பாதம் போற்றி
தொண்டர்கள்மெஞ் ஞானியுட பாதம் போற்றி
சொல்லுகிறேன் னுபதேச மிரநூர் தன்னை

மண்டலிகர் மகாயோகி மதிக்க வென்று
மறுவில்லா ஞானமதை மாட்டு வேயான்
கண்டவர்கள் கண்டகோ டாலி யாகக்
கண்காணு ஞானமதைக் காட்டு வோமே." -க

முடிவு

" நிச்செயமாய் யிப்படியே நிலையும்ஞ் சொல்லி
நெடுநாளாய் வாழவென்று நிதானம்ஞ் சொன்னேன்
அச்செயமாய் யென்னுடைய யிருனூற்க் குள்ளே
அடங்காத கருவையெல்லாம் அடக்கிப் பொட்டென்
பச்செயமா பருபரத்து நிலையுஞ் சொன்னேன்
பாஞ்சுமயில் லேருகிர வகையுஞ் சொன்னேன்
அச்செயமாய் யிதையறிந்து மவுனங் கொள்ளு
அடங்காதி யிருனூரு முகிந்து முற்றே". -ாகூ௰கூ

சண்முகனுதன் துணே. குண்டலிசத்தி துணே.
குருமின் நிற்க.

குறிப்பு :

இந் நூலில் 8-வது ஏடுமட்டும் காணப்படவில்லை. இது சுப்பிரமணியர் முதலாவது சுத்த ஞானமாக இருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது. சுப்பிரமணியர் 2-வது சுத்தஞானம் எமது 907உ-ல் உள்ளது. இந்நூலில் பிழைகள் மலிந்து காணப்படுகின்றன.

---

வரிசை எண் : 1224 சுவடி எண் : 948

## ஞானமதியுள்ளான்

ஏடுகள் : 33. ஏட்டின் நிலைமை ; பூச்சியரித்தது.
பக்கத்திற்கு : 7—8 வரிகள். அளவு : 17 × 3 செ. மீ.
எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 700. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

காப்பு

" சீலத் தரும்பொருளை தேசொன் மயப்பொழிவே
மூலத் தருகவே முதர்க்குரு ... ... ரரீ
துய்ய பதஞ்சலிமுன் பொதிய திருப்புகழ்க்கங்
கையனிரு பூஞ்சுறனே காப்பு ".

நூல்

வண்மையால் யுலகையாண்டு வாழ்ந்துதான் கொந்தி மன்னன்
உண்மையாய் னூல்கள்பார்த்து உள்ப்பொரு ளிதுவே என்று
நன்மையாம் பதத்தில்சேர்ந்து ஞானமாம் பதியிலேறி
தன்மையாய் வல்லியாலே தானமதி கெட்டுள் ளானுந்

முடிவு :

ஐந்தான சிதம்பரத்தில் நித்தம் ஆடும் வல்லித்தமிழ் பாடும்வல்லி
விந்தர்மதி முகத்தாளரவி மெய்த்தாளத்தாள் கையில் பொறுத்தகத்தாள்
தந்தாளுங் குங்குமத்தாள் தண்டைச் சத்தஞ்சில தானெநவே
வந்தாள் சொரூபமணிதந்து ... ...

குறிப்பு :

இது ஞான மார்க்கத்தினை உவமானத்துடன் உருவகப்படுத்திக் கூறுகின்றது. தத்துவநூலைச் சாருமிது. இரண்டாமேட்டில் "குரு முனிநந்தி குறுபாத முட்கொண்டு... ... ... ... எனத் தொடங்கும் பாடலொன்றுளது.

---

வரிசை எண். 1225 சுவடி எண் : 937

## ஞானவாசிட்டம்

ஏடுகள் : 224. பக்கத்திற்கு : 7–8 வரிகள்.
அளவு : 37 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி.
எண்ணிக்கை : 8000. ஆசிரியர் : ஆளவந்தான் வீரையன் மாதவபட்டன். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

பெண்மை பாதியன் பெற்ற களிற்றனை
யன்மை தீற மனவகத் துன்னுவர்
திண்மை ஞான சிறப்புயர் வாசிட்டம்
உண்மை யாக வொருங்குரை செய்யவே.

முடிவு :

பறம மேனி வசிட்டமுனி பச்சை மேனி யிருமற்குப்
பிறம ஞானம் முணற்வித்த பெறுவா சிட்டம் மெய்நூலை
திறம தாக கறப்பளவே சீவன் முத்தி பதஞ்சேர்வாய்
உறம தாக உள்ளுறை வோருருபே றங்ங
னுரைப்பதுவே -சுஅ

திருச்சிற்றம்பலம்.
யோக சத்த பூமிகதை முற்றும்.
ஆகக்கதை சயஙக்குத் திருவிருத்தம் உ௦௦டுயடு.

காலம் : ( Colophon )

" தாளவந்தான் மலரோன்றன் மனத்துதித்த வசிட்டன்
றன்பாற் கேட்டு
நாளவந்தான் போகாத யிராமனுக்கங் குபதேசம்
நல்கி யிங்கே
யாளவந்தான் வீறையன் மாதவப்பட் னடங்கிசவ
தாற மாகி
மீளவந்தான் வந்துதமிழ் வசிட்டரா மாயணமும்
விளம்பி னனே."

வாசிட்டம் எழுதி நிறைந்தனன்.
முற்றும்.

குறிப்பு :

இது வேதாந்த நூல். வசிட்ட முனிவர் இராமபிரானுக்கு உபதேசித்தது. இதனை வடமொழியில் பரத்துவாச முனிவருக்கு வால்மீகி முனிவர் அருளியதாக அறியக்கிடக்கின்றது. பாட வேறுபாடுகள் காணப்படுகின்றன. இதன் பின்னர் ஏழு வெற்றேடுகள் உள்ளன. இது அச்சாகியுள்ளது.

---

வரிசை எண் : 1226 சுவடி எண் : 844

## நெஞ்சறிவிளக்கம்

ஏடுகள் : 52. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு ; 4-5 வரிகள். அளவு : 28 × 2 செ. மீ. அளவு : தமிழ். கி. எண்ணிக்கை : 350. ஆசிரியர் : கணபதிதாசர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்

"வஞ்சக மனத்தி னுசை
மாற்றிய பெரியோர் தாளில்
கஞ்சமா மலரி டத்துங்
கணபதி தாசன் பாலன்
நெஞ்சறி விளக்குஞ் ஞான
நீதிநூ லூறும் பாடக்
குஞ்சர முகத்து மூலக்
குருபரன் காப்ப தாமே."

நூல்

"பூமியிற் சௌந்த ரப்பெண்
புணர்ந்திடு நாகை நாதர்
நாமமென் னுளு நாவி
னவின்றுசெந் தமிழாற் பாடிக்
காமமு மாசா பாசம்
கற்மமு மகற்றி மூல
ஓமெனு மெழுத்தைய்ந் தாலே
யுனையறிந் துணர்வாய் நெஞ்சே." -க

முடிவு :

கனகமா மணிசேர் மூல
கணபதி தாச னுனே
நினைவினு லறிந்து செப்பு
நெஞ்சறி விளக்க நூறும்
வினவியே படிப்போர் கேட்போர்
வினையெல்லா மகன்று மெய்யுள்
மனமெனு மோட்ச நாளாம்
பதம்பெற்றுப் பரத்துள் வாழ்வார். -ளரு

குறிப்பு :

நெஞ்சினை முன்னிலைப்படுத்தி அறவுரை கூறும் நூல் இது. காமம், பாசம், கன்மம் முதலானவற்றை நீக்கும் வழிகளைக் கூறும் வேதாந்த நூல். அச்சிடப்பட்ட நூலுக்கும் இதற்கும் பாட வேறுபாடுகள்

இருக்கின்றன. 103 செய்யுட்கள் உள்ளன. முகப்பு ஏட்டில் 'யீரோட்டு தாலூகாவிருக்கும் பெருந்துரைக் குருநாதன் நெஞ்சையறி விளக்கம்' என்றுளது.

வரிசை எண் : 1227 சுவடி எண் : 915

## நெஞ்சறி விளக்கம்

ஏடுகள் : 20. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 7—8 வரிகள். அளவு : 28 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 350. ஆசிரியர் : கணபதிதாசன். முழுமை : முழுவதும் உள்ளது.

குறிப்பு :

இது முன்பிரதி போன்றது. காப்புச் செய்யுள் அன்றி 100 செய்யுட்களே உள்ளன. அச்சாகியுள்ளது. பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன.

வரிசை எண் : 1228. சுவடி எண் : 782

## பகவத் கீதை — செய்யுள்

ஏடுகள் : 126. ஏட்டின் நிலைமை : சில ஏடுகள் ஓரங்கள் சிதைந்துள்ளன. பக்கத்திற்கு : 11—13 வரிகள். அளவு : 11 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2000. ஆசிரியர் : சங்கரபகவர். முழுமை : முழுவதும் உள்ளது.

குறிப்பு :

இந்நூல் அடுத்துள்ள 772-ஐப் போன்றது. இந்நூலின் இறுதியில் உள்ள ஏடுகள் மிகவும் சிதிலமாக உள்ளன. பின்னர் பஞ்சபட்சி சாத்திர ஏடுகள் 2 உள்ளன.

வரிசை எண் : 1229 சுவடி எண் : 772

## பகவத் கீதை — செய்யுள்

ஏடுகள் : 124. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் பூச்சி அரித்து உள்ளன. பக்கத்திற்கு : 5—8 வரிகள். அளவு : 15.5 × 2. செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2000. ஆசிரியர் : சங்கரபகவர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" பாதியோர் பெண்மையான் பரிந்து பெற்றதோர்
சோதியாங் களிற்றினைத் தூர மண்மையாற்
பேதியா துளம்பெறப் பேணிப் பகவத்
கீதையான் மொழிகுவன் ஞானங் கிட்டவே ". -க

முடிவு :

" ஆற்றிய வழுவில் புலன்க ளைந்தையு
மாற்றிய சங்கர பகவர் பத்தனென்
றேற்றிய பெயரினு லருளி னுலியான்
சாற்றிய திப்பெருந் தமரும நூலையே ". -அக

பதினெட்டாவது அத்தியாயம் முற்றும்.

காலம் : (Colophon)

சுப்பிரமணியன் எழுதி ... ... ... உயடு-ந் தேதி புதன் கிழமையும் சதுர்தெசியும் மூலா நட்சத்திரத்தினுல் கூடின சுபதினத்தில் எழுதி முடிந்தது.

குறிப்பு :

இது, கண்ணபிரான் போர்க்களத்தில் அருச்சுனனுக்கு உபதேசித்த வேதாந்த நூல். இந்நூல் வடமொழியினின்றும் மொழிபெயர்த்துச் செய்யுளாக்கப்பட்டது. உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

---

வரிசை எண் : **1230** சுவடி எண் : **754 (a)**

## பகவத்கீதை - செய்யுள்

ஏடுகள் : 79. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது; சிறிது சிதிலம். பக்கத்திற்கு : 10—13 வரிகள். அளவு : 16 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2000. ஆசிரியர் : சங்கரபகவத்பாதாள் (உரையாசிரியர் பச்சையப்பன்.) முழுமை : முழுவதும் உள்ளது.

காப்பு.

தொடக்கம் :

" நல்ல சொற்பொரு ளுடி நடத்தவு
மெல்லை காணவும் பேரின்ப மெய்தவும்
வெல்லு மானை முகத்தனை மேவிவாழ்
வல்ல பைக்குரி யானை வாழ்த்துவாம். "

நூல்

மன்னருள் விசையன் கேட்பவாள் மாதன் மேலீட்டு
மின்னவிற் படைக்கை மாய னுரைத்தமெய்ப் பொருளை
யெல்லாம்
பன்னரு மறைகள் கோர்த்த பழமுனி பணித்த வண்ண
மென்னறி வளவி னாலே தமிழிநா லியம்பு கின்றேன்.

முடிவு :

ஆற்றியல் வழுவிய புலன்க ளைந்தையும்
பாற்றிய சங்கரற் பகவற் பாரதன்
னேற்றிய பெயரினு னருளி னுலியான்
சாற்றிய இப்பெரும் தரும நூலையே". -அஉ

பதினெட்டாவது முற்றும்.
பச்சையப்பன் கையெழுத்து.

சொக்கனுயகர் பாதாரவிந்தமே துணை. ஆக அத்தியாயம் கஅ-க்கு
விருத்தம் ௱ாசுயஉ பகவற்கீதை முற்றும்.

குறிப்பு :

இந்நூல் முன்பிரதி போன்றது. இந்நூலுக்கு உரை எழுதியவர் பச்சையப்பன். இந்நூலில் 1-18 அத்தியாயங்கள் இடம்பெற்றுள்ளன. அச்சாகியுள்ளது.

---

வரிசை எண் : 1231 சுவடி எண் : 754 (b)

**பகவத்கீதை**-செய்யுளின் உரை

ஏடுகள் : 86. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 10—13 வரிகள். அளவு : 16 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2700. ஆசிரியர் : பச்சையப்பன். முழுமை ; முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

தர்மராசா வகையுந் துரியோதனன் வகையுமுயுத்தத்துக்கு ஆயத்தப்பட்டு, இரண்டு தளமுமிருக்கிறபோது திருதராட்டிரன் சிந்திச்சுக் கொண்டிருக்கையில் அவ்விடத்துக்கு வேதவியாச மாமுனி வந்து ... ... ...

முடிவு

சொல்லாதிருந்தால் தோஷ உண்டு. அதுவறிந்து கற்றிருப்பதைப்பி ரியப்பட்டுக் கேள்க்குறபேர்களுக்கு வகை விபரமாகச் சொல்ல வேணும்.

சொக்கநாயகர் பாதாரவிந்தமே கெதி. கிருட்டிண சகாயம்.

இந்தப் பகவற்கீதை உரையெழுதினேன் பச்சையப்பன்.

குறிப்பு :

இது No. 754-இல் கூறப்பட்டுள்ள பகவத்கீதைச் செய்யுளின் உரையாகும். இது கண்ணபிரான் பாரதப்போரில் அர்ச்சுனனுக்கு சாரதியாயமர்ந்துசென்று போர்க்களத்தில் அர்ச்சுனனுக்குபதேசித்த வேதாந்த நூல். உரை எழுதியவர் பச்சையப்பன் என்றுள்ளது. 18 அத்தியாயங்களும் உரையுடன் இருக்கின்றன. இது 557-ம் எண் போன்றது. உரையாசிரியர் கையெழுத்துச்சுவடி போலுமிது.

வரிசை எண் : 1232 சுவடி எண் : 917

## பழனியாண்டவர் உடற்கூற்று ஆனந்தக் களிப்பு

ஏடுகள் : 20. ஏட்டின் நிலைமை : கறையான் அரித்த நிலை. பக்கத்திற்கு : 5–6 வரிகள். அளவு : 22×2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை: 200. ஆசிரியர் : சரவணபவானந்தன். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

“ சிவயநம (சிவயவென்) ரேது - அதிலே
தெளிவாகி நித்தந்தி யானிக்கும் போது
நவகோண சக்கிர மீது-நின்று
நடனம் புரிந்தாளே செகமோக மாது
சுகமான பஞ்சவர்கள் சூது-இந்தத்
தொல்லுலகி லெப்போது நம்பப் படாது
சகமேவுந் தென்பழனி மீது-யோக
சரவண பவாநந்த சாமிதுணை யாமே.”

சங்கர சங்கர சம்போ - சிவ
சங்கர சங்கர சங்கர சம்போ. -க

முடிவு :

"எங்குந் துலங்கும் பிரகாசன் - அன்பர்
அன்பமாய் மனதி லிருந்திடும் விலாசன்
துங்கவடி வானகமு காசன்-எங்குந்
துதிக்கவே வரமருளுஞ் சேவலணி தாசன்
புங்கவன் குமரவிசு வாசன்-நாளைப்
புகழ்பதவி யெல்லோர்க்கு முதவிசெய் யீசன்
சங்கம் புகழ்பழனி தேசன்-யோக
சரவண பவாநந்த சாமிதுணை யாமே." (சங்கரா) -சம

பழனியாண்டவர் பேரில் உடற்கூற்று
ஆனந்தக்களிப்பு முற்றுப்பெற்றது.

முடிவு :

ஞான மார்க்கத்தினை எளிமையாகக் கூறும் இந்நூல் 40 செய்யுட்களையுடையது. "யோக சரவணபவ்னந்த சாமிதுணையாமே" என்ற ஈற்றடியினைக் கொண்டது. உடற் கூற்றினையும், நிலையாமையினையும் கூறுவது. அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

---

வரிசை எண் : **1233** சுவடி எண் : **768**

## பிரவண இலக்கணம்

ஏடுகள் : 57. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 4-5 வரிகள். அளவு : 33.5 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 700. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

கயிலை மீதில் கயிலாயத்தில் பேரொளியாய் அகண்ட பரிபூரணமாய் எங்குந்தானாய் விளங்குவது பிரணவ சொரூபியாகிய பரசிவமேயாம். இவ்வாரு ஞான சோதியாய் விளங்காநின்ற பரமசிவத்தை பரகுடிலை நாதம் பரவிந்து எனவும் கூறப்படும்.

-க

முடிவு :

ஆவின் நெய்யில் அந்தபடி உருவேற்றி மூன்று திங்கள் கொடுத்தாலும் பஞ்சகவியத்தில் ஒரு மண்டலங் கொடுத் தாலுங் கருப்பமுண்டாகும். பச்சை மஞ்சளில் அந்தபடி உருவேற்றி அந்த மஞ்சள் இரண்டு திங்கள் குளிக்கச் செய் தால் கருப்பமுண்டாகும்.

சருவசங்காரவிஞ்சை முற்றும்.

குறிப்பு :

இந்நூல் ஓம் என்னும் பிரணவ மந்திரத்தின் தன்மையைக கூறு கிறது. ஷெ மந்திரத்தின் மகிமையால் நோய் நீங்கும் தன்மையினையும் இந்நூல் கூறுகின்றது. சிவயோக நிட்டை, பஞ்சாட்சரவிலக்கணம், பஞ்சபூத உடல் சக்கரம், பஞ்சபூத நிறம், பஞ்சபூத உயிரெழுத்து, பஞ்ச சக்திகளின் மகிமை, தத்புருஷ முகத்தில் 25 மந்திரத்தினுல் வரும் நல்வினை, தீவினை, சிவபஞ்சாட்சரம், அகோர முகத்தில் வரும் நல்வினை, தீவினை, பிரமரிஷி பஞ்சாட்சரம், சமுத்திர பஞ்சாட்சரம், ருத்திர தியானம், பரமகுருவாகி(ய) நந்தீசர் தியானம், சுப்பிரமணியர் தியானம், வயிரவர் தியானம், வேல் முருகர் சருவசங்கார திரிஅச்சர மந்திர விஞ்சை ஆகிய தலைப்புக்கள் உள்ளன.

வரிசை எண் : 1234 சுவடி எண் : 869 (உ)

## ரோமரிஷி சொல்லூறு

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 20 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

“ தந்தி முகத்தோன் தங்கத்தாள் காப்பு
சகலபொரு ளாய்நிரைந்த தாயார் காப்பு
சுந்திரம்போல் புரிவுடைய மக்க ளுக்குத்
தொடுகுரியும் யிருநிலந் தோணும் தோணும்
யிந்தவரை பதினாறும் சொன்னே நப்பா
ரோமரிஷி நாலுக்கு எதிரான நூலொன் —
றில்லைத்தான்.

முடிவு :

பிசகாது அபானத்தில் மலமே குத்தம்
பேசுகின்ற அதானத்தில் நாடி குத்தம்
விசையான கண்டத்தில் கயமை குத்தம்
மேல்மூல வலையிலொரு... ... ...

குறிப்பு :

தத்துவத்தை உள்ளடக்கிக்கூறும் நூல் இது. பிழைகள் அதிகம். பரிபாடைச் சொற்களாலானது. இந்நூலின் இறுதியில் "வயிரவர் பிரசன்னம்", பார்வை பளபளப்பாக மருந்து முதலியன மூன்று ஏடுகளில் எழுதப்பட்டுள்ளன.

வரிசை எண் : 1235 சுவடி எண் : 869 (b)

## சல்லியநூல் (உரையுடன்)

ஏடுகள் : 27. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 20 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 450. ஆசிரியர் : சல்லியன். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" குறுமொழி தவறுய வண்ணம்
கூறிய தனமா வகில
எறிவறு கோபம் தீர்ந்து
எவ்வுயிர்க் கிரங்கு வோனுய்
பிறிவுறு பூறகயு மன்றி
மிகமிகப் பகரு வோனுய்
திருவரு ளாலே சல்லியம்
சித்திக்கு முதன்மை தானே ".

முடிவு :

என்றது கழுவின் குதிநறம்பெடுத்து களுவின் முதுகுத்தண்டு பவளத்துக்கு மேலேயிருக்கும் நறம்பெடுத்து மணியாக நறுக்கி, அந்த நரம்பிலே கோத்து மஞ்சள் சுண்ணும்பு கலக்கி செவ்வறளிப்பூ போட்டு கறுமுனை கம்பைமுனை,

கம்பைமுனையாகச் செய்துக்கு பில்லிலடிக்கவும். மறுறக்க நலப்பொறி போட்டு செய்யவும். களுமுனைக் கொம்புக் கொன்று கறுவினைமந்திரம். ௩அ—௨டு

சேவித்துவுறுக்கொரு அடிஅடிக்க வில்லுக்குக்கீழே காலடிமண்பொடி சேவிக்கவும். தாக்குமென்றவாறு-௪௪.

குறிப்பு :

மாந்திரீக நூலாகுமிது. பிழைகள் அதிகம். எழுத்துக்கள் தெளிவில்லை. 44 செய்யுட்கள் உரையுடனிருக்கின்றன.

வரிசை எண் : **1236**. சுவடி எண் : **869 (c)**

## சல்லிய மூலமந்திரம்

ஏடுகள் : 35. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 20 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 550. ஆசிரியர் ; சல்லியன். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

“பட்டு-பட்டு-இட்டு-மாடா - பட்டு - தியட்டு - மாடா-பட்டுஉ-லிரமாடாபட்டு - வீரபத்திரமாடாபட்டுஉ - பகடை மாடாய்பட்டுஉ-அனுமந்தமாடாய்பட்டு-பட்டுஉ-தாண்டவ மாடாய்பட்டு மாடிபடருமாடாய்பட்டு—-படருனனஞே எதுத்தசத்து பூவைகசுத்துஉ மி......விதி-குடலைப்புருங்குயி றலையும்......றச்சியும்-புருங்கி திண்ணுஉ - ஊட்டிஞய் முறி முறிவிலாவை ஏடிகால... ... ... ... ... ...

முடிவு :

ஆனை வகுத்தல பறும பில்லும் செறித்ததால் குதிரை வயத்தில்க்கொள்ளும், பில்லும் செறித்தாப் போலே சோதித்தருவாய் சொல்லு அறவாநீதி அறிவாளி போலே அறிவாய் அடிபிடி தளிதளி சுவாகாந......சுக்கு பார்க்கவும். முன்னிற்க.

குறிப்பு :

இது மாந்திரீக நூல்களுள் ஒன்றாகும். சக்கரங்களுடன் இருக்கின்றது. பிழைகள் அதிகம்.

வரிசை எண் : **1237** சுவடி எண் : **869 (d)**

## மந்திர சாத்திரங்கள் (சக்கரத்துடன்)

ஏடுகள் : 12. ஏட்டின் நிலைமை : மிகமிகப்பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 20 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

உபதேசமந்திரம் : ஹறிஓம் சிவயநமா.

**முடிவு :**

**தியானம்**

தாபா சோம் பிரசன்னம். ஓம் அய்யும்-கலாம்-கிலியும்-குலுவும். அறுமறிவும் உருவும்-பூபதோ தாறணுய அசாமல பத்தனுயா - சுவற்னனலொ கெஷிவறுயா சுவற்னறுகற சன்னவ பிரவாயா. மபதாறிதிறி பனுசனுயா சிறியும். பெறியும், கிலியும் சுவற்ண வயிரவாயா. உம்படுசுவாகா,

**குறிப்பு :**

இந்நூலில் பலவகை தெய்வங்களின் மந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. தீட்சை மந்திரமும் கூறப்பட்டுள்ளது. சித்தருக்கு வாக்கியம் முதலியன இந்நூல் வரிசையில் கூறப்பட்டுள்ளன.

வரிசை எண் : **1238.** சுவடி எண் : **767 (a)**

## வேதாந்த சூடாமணி—உரையுடன்

ஏடுகள் : 86. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 9—17 வரிகள். அளவு : 25 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 4500. ஆசிரியர் : சிவப்பிரகாசர். முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

" உரைதரு வேதாந்த சூளாமணி யுட்பொருளை
யுலகிலுள்ளொருணரவுரை செயகவெனக் கடல்சூழ்
தரையரசன் சேதுபதிய மாத்தியனுந் தாமோதரன்
கங்கர்குல திலகன்றகுதி பெறச் சாற்ற
வரையறுத்துச் சித்தாந்தப் பொருட்டிற முந்தோன்ற
வகுத்தன னற்றுறைசை நமச்சிவாய தேசிகன்தாள்
பரவுசிவக் கொழுந்து நிதியருள கல்விக்கடலைப்பருகு
முகில் சர்க்கரை நற்பா வல்லவன்னே ".

இவ்வுரைப் பாயிரம் இராமநாதபுரத்திலிருக்கின்ற நெல்லையப்ப பிள்ளை குமாரர் எம்மொடு கற்றோராகிய சுவாமிநாத பிள்ளையவர்கள் பாடினது.

**முடிவு :**

உதவின ஆசிரியனுக்கு மாணுக்கனுக்குங் குற்றம் பயக்குமென்பார். இவ்வா றுதவுகவென ஞானிகள் மேன்மையும் . இந்நூன் மேன்மையுந் தோன்றக் கூறினு ரென்க. இந்நூற்கு உரை எழுதினேனென்று பெயரிட்டு எனதறியாமையை யுலகுக்கெல்லாம் அறிவித்தலாலிக் குற்றத்தைப் பெரியோர் பொறுத்தருள்க.

வேதாந்த சூளாமணியுரை எழுதி முற்றுப்பெற்றன.

**காலம் :** ( Colophon )

விகாரி வருடம் கார்த்திகை மாதம் 22-ந்தேதி சனி வாரத்திலெழுதி முடிந்தன. இவை முதுகுளத்தூரிலிராமன் பரதேசி யெழுதினேனென்றறிக.

குருதேசிகன் சரணமலரே நம்புக. பிரமமேநித்தியம்.

சிவகெங்கைச் சீர்மை சமஸ்தான வாசலட்டவணை நாகலிங்கம் பிள்ளையவர்கள் குமாரன் சுப்பிரமணிய பிள்ளை குமாரன் தியாகராச பிள்ளை ஷை குமாரன் சுப்பிரமணிய பிள்ளை. ஷை குமாரன் சண்முகசுந்தரம் பிள்ளை. ஷை குமாரன் முத்துப் பிள்ளை. ஷை குமாரன் காளமேகப் பெருமாள் பிள்ளை.

விசுவநாத விசாலாட்சி துணை.

குறிப்பு :

இது ஒரு வேதாந்த நூல். வடமொழி வேதாந்த சிந்தாமணியின் மொழிபெயர்ப்பு. இதனை மொழிபெயர்த்துத் தமிழில் இயற்றியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் என்பவர். திருக்குவிவேகம் திரிசியவிவேகம் என இரண்டு பகுதிகளாக உள்ளன. இந்நூல் உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது. உரை செய்தவர் சர்க்கரைப் புலவர்.

வரிசை எண் : 1239 சுவடி எண் : 767(b)

## கைவல்யநவநீதம் தத்துவக்கட்டளை

ஏடுகள் : 31. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 11—13 வரிகள். அளவு : 25 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1000. ஆசிரியர் : தாண்டவராயமூர்த்தி. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"பொன்னில மாதராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னிலந் தரத்திர்ச் சீவசாட்சி மாத்திரமாய் நிற்கு
மென்னிலங் களினுமிக்க வெளுநில மதனின் மேலாய்
நன்னில மருவு மேகனுயகன் பதங்கள் போற்றி". -க

முடிவு:

" ஆண்ட தேசிகனும் ஞதனய்யன் நாருயண ந்தான்
பூண்ட வாரூேபத்தால் முன்போய் மயக்காய் வந்ததை
மாண்ட வல்லவ வார்த்ததான் மற்றருனேக்கத்தென்றுங்
காண்டருள் வைத்தளித்த காரணு போற்றி போற்றி".

கைவல்லியம், உத்திரப் படலம், சந்தேகந் தெளிதல் சம்பூரண முற்றும். ஆகப்படலம் உக்குத் திருவிருத்தம் ஈஎ௰.

சிவமயம்.

காலம் :

சிவகங்கைச் சீர்மை வாசல்அட்டவணை நாகலிங்கம் பிள்ளையவர்கள் மகன் சுப்பிரமணியன் எழுதின ஏடு ஷ கையெழுத்து.

கருணாநிதி பரமேசுபர அருணாசலகுருவே
சிவஅருணாசல குருவே துணே.
சிவமயம்.
விசுவனாத விசாலாட்சி துணே.

குறிப்பு :

இந்நூல் அத்வைத மதத்தைச் சேர்ந்தது. ஆத்மஞானம் உண்டாகும் பொருட்டு ஞானாசிரியனைத் தேடிக்கண்ட சீடன் அவரை வணங்கி மாய வாழ்வினால் வருந்திய வென்னைக் காக்கவேண்டுமென்று வேண்டியதற்கிணங்க தத்துவங்களின் நிலையை நன்கு விளக்க, அதனால் அவன் ஆன்ம சொரூபமின்னதென உணர்ந்து தனக்குண்டான சந்தேகங்கள் இன்னதெனச் சீடன் கூற, அச்சந்தேகங்களை நன்கு விளக்கி அவனுக்கு உண்மை ஞானத்தினை விளக்கிய தன்மையினை இந்நூல் கூறுகிறது.

இந்நூல் இரண்டு படலங்களைக் கொண்டது.

1) தத்துவ விளக்கப்படலம்.
2) சந்தேகந்தெளிந்த படலம்.

---

வரிசை எண் : 1240 சுவடி எண் : 767 (c)

## உபநிடதம்

ஏடுகள் : 8. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 11—13 வரிகள். அளவு : 25 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 250. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

“ மெய்யுடைய வடியார்மேல் விருப்புடையான்
கருப்பூர விளக்குப் போலெனை,
பொய்யுடை யவருட்போதப் பொருளுடையா
னருளுடையா னறிபொறி யைந்தாலு
மையுடைய மனத்தாலு மயக்குடையார்
மதங்களைத்தா மதங்க ளாக்குங்
கையுடைய முகமுடையா னகமுடையா
னெனக்கருத்தி லிருத்தல் செம்வாம் ”.

முடிவு :

யிருளகற்றும் நால்வேதத் துபநிடதமெண்ணுன்கு
மென்கோன் சொன்ன
பொருளதனை நெஞ்சகத் தேசவுபாக்கிய
குருவென்னும் பொருளி ஞேடு
மருளகலும் படியளுத்தித் தமிழ்போலு
மதனையொரு வளியெண் ணுன்கா
யிருளகத்தி லிருந்துரைத்த வதிசெயமெவ்
வதிசெயமற் றறிகி லேனே. -ந௩

உபநிடதம் முற்றும்.
சிவமயம்.

(இறுதியில் இந்தப்பாட்டும் எழுதப்பட்டுள்ளது.)

நங்கென்று நாட்டிடவே நாடாதொன்றும்
நலமான பீரங்கி வல்லையமுங்கத்தி
அங்கென்ருல் ஆயுதங்களெல் லாமோடு
மாச்சரிய மண்டத்தில் இடிகள்வீளா
சிங்கென்ருல் மிருகமொடு பசாசுபூதஞ்
சிதறியேயோடு மடாசத்து ருக்களெல்லாம்
வங்கென்ருலுல கமெல்லாம் வசியமாகு
மய்ந்தனே சுளிமுனையில் மாட்டிப் பாரே ".

குறிப்பு :

இது வேதாந்தக் கருத்துக்களை விளக்கும் நூலாகும். வடமொழி நூலாகிய சொரூபானந்தம் என்பதின் மொழி பெயர்ப்பாகும். 33 செய்யுட்கள் மட்டுமே உள்ளன.

வரிசை எண் : **1241** சுவடி எண் : **767 (d)**

## சசிவர்ண போதகம்

ஏடுகள் : 9. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 7–13 வரிகள். அளவு : 25 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 400. ஆசிரியர் : தத்துவராயர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

சசிவர்ண போதகம்

"அலகை யச்ச மரமக வான்களு
முலகில் முத்தி பெரும்பரி சேர்துவாம்" —க

"புணர்ந்த பாவமெல்லாம் பரிபூரண
முணர்ந்த ஞானி விளிபட ஓடுமே."

முடிவு :

தேவரு மனிதரு மிவன்ருெழில் வியந்துரைசெயப்படுவதோ
மூவரும் வணங்கிய முடியாலவன தேவல் செய்ய
முந்துருவாரே" -ாஅ

சசிவர்ண போதகம் முற்றும்.

விசுவநாத விசாலாட்சி துணை. நாகலிங்கம் துணை.

குறிப்பு :

இது வேதாந்த நூலாகும். அத்வைத விஷயமானது. ஆசிரியர் பெயர் தத்துவ தேசிகரது மாணுக்கராகிய சோதிப் பிரகாசராகும். தத்துவராயர் என்பாருமுளர். சசிவர்ணனென்பான் பாவயக்ஞ னென்னும் அந்தணரின் மகன். பஞ்சமாபாதகங்கள் செய்து அதனுல் நோய்வாய்ப்பட்டான். அது கண்ட தேவபக்தரென்னும் மாதவர் 'நந்திவெற்பிலுள்ள நந்த பராயணரைப் பணிந்தால், அவரருளால் நோய் நீங்கி முக்தியடைவாய்' எனக்கூறக் கேட்டு அதன்படியே முத்தியடைந்தான் என்னும் கதையினைக் கூறுவது. இது 'மோக வதைப் பரணி'யின் ஒரு பகுதியாகும். பேயிரங்கல் என்னும் அதிகாரத் துட் கூறப்பட்டுள்ளது. இதில் 108 செய்யுட்கள் இருக்கின்றன. இது உரையுடன் அச்சிடப்பட்டிருக்கின்றது. கடைசி ஏட்டின் பின்புறம் பாட்டு முதற்குறிப்பு உளது.

வரிசை எண் : 1242 சுவடி எண் : 767 (e)

## சதாநந்தசுவாமி பஞ்சீகரணம்

ஏடுகள் : 16. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 11-13 வரிகள். அளவு : 25 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 700. ஆசிரியர் : சதாநந்தசுவாமி. முழுமை : முழுவதும் இருக்கிறது.

**தொடக்கம் :**

சகல வேதாந்த சாத்திரங்களையுஞ் சங்கிரகம் பண்ணி இந்தச் சாத்திரம்பாத்த பேருக்கெல்லாம் ஞானோதயமாகும் பொருட்டாகத் தத்துவ சாரமென்கிற கிரந்தத்தைச் சதா நந்த சுவாமியள் தமிழினால்ப் பனுவலாகப் பண்ணி சச்சிதா னந்த யோகிக்கு உபதேசம் பண்ணின கிறமம் நித்திய தர்மங்களும் நைமித்திய கற்மங்களு வெகுசெனனங்கள்

**முடிவு :**

சிவன் முத்தாளிந்தப்படி இந்தப்பிரகரணம், ஸ்ரீவாசு தேவ சொரூபரான விமரிசாநந்த யோகீசுர சுவாமியள் சரணாரவிந்தங்களில் பிருங்கம்போலே சஞ்சரிக்கிர சதானந்த யோகீசுரருக்கு உபதேசம் பண்ணின சதானந்த கீதை முற்றும்.

**குறிப்பு :**

இந்நூலின் பின்னர் உற்பத்திக்கிரமம், மந்திரங்கள் அதன் சக்கரங்களுடனும் பின்னால் தொண்ணூற்றாறு கரணங்கட்கு வகை இரண்டு ஏடுகளிலும், கைவல்ய சிட்டை 3 ஏடுகளிலும், பாட்டுக்களின் அட்டவணை முதலியன 3 ஏடுகளிலும் உபநிடத சிட்டை ஒரு ஏட்டிலும், கப்பல் பாட்டு ஒரு ஏட்டிலும் எழுதப்பட்டு சேர்க்கப் பட்டுள்ளன. இறுதி ஏட்டில் ஒரு வெண்பா காணப்படுகிறது.

## சைவசமயநூல்கள்

வரிசை எண் : **1243** சுவடி எண் : **880 (a)**

## கொங்கணர் ஆருதார விளக்கத்துவம்

ஏடுகள் : 7. ஏட்டின் நிலைமை : நன்றாக இருக்கின்றது. பக்கத்திற்கு : 8-9 வரிகள். அளவு : 27 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 200. ஆசிரியர் : சிவன். முழுமை : முழுவதும் இருக்கிறது.

நொடக்கம் :

"தத்துவத்திலே மனுஷருடலில் ஆறு ஆதாரமுண்டென்றும் அந்த ஆறு ஆதாரத்தில் ஆறு தேவதை நிற்கும் நிலே, குதத்தில் யிருந்து உச்சி மட்டும் ஆறு சக்கரமாய்ப் பிரிந்து ஆறு அஷ்ட்டசரமும் ஆறு தேவதைகள் யிருக்கும் கமலங்களடங்கிய அன்பத்தோ ரக்ஷரமும் யிதளுகளின் வர்ண வேற்றுமையும்

முடிவு

அவருக்குப் பூசையேதென்னில், அறிவே அபிஷேகம், அன்பே புஷ்பம், யிச்சாபதார்த்தமே நெய்வேத்தியம் யென்று வருந்திக்கொண்டு யிருக்கவும். யிதன்பொருள் கல்வி. மகரிஷிக்கி சிவன் குருஉபதேசம் சொன்னது. ஆரு தார வுபதேசம் செயிதது.

குருனுதன் துணே.

குறிப்பு :

உடலிலுள்ள ஆறு ஆதாரங்களேயும் அதற்குரிய சிறப்புக்களேயும் கூறுவது. சிறந்த தத்துவ நூல்.

வரிசை எண் : 1244 சுவடி எண் : 880 (b)

## சிவயோகதீபிகை

ஏடுகள் : 40. ஏட்டின் நிலேமை : நல்ல நிலேமை. பக்கத்திற்கு : 8-9 வரிகள். அளவு : 26 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1400. ஆசிரியர் : சதாசிவயோகீசுவரர். முழுமை : முழுவதும் இருக்கின்றது.

தொடக்கம் :

காப்பு

"வாக்குண்டாம் நல்ல மனமுண்டா மாமலராள்
நோக்குண்டா மேனி நுடங்காது-பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு"

யிது ஸ்துதியென்றறிக. யிப்பால் ஸ்ரீ சதாசிவ யோகீஸ்பர ஞலே லெட்சிக்கப்பட்ட சிவயோகதீபிகை யென்கிற யோக சாஸ்த்திரத்திலே அந்தர பூசாவிதானமாகிறதை நிரூபிக்கிருர். அதெட்பபடியென்னில் பரமயோகீஸ்பரர்களுடைய மனசாகிறது, தாமரைப் புட்பத்து வண்டு போலவும் காரண திறையங்களுக்கு கரணமாகவும், அவ்வியமாகியும் சகுண நிர்குணத்துவ சொரூபமாகியுஞ் செனன மரணங்களில்லாத

முடிவு :

அல்லவென்று யாதாமொருத்தன் மூடனுனவனுக்குக் கொடுப்பனுகிலவன் குருத்துரோகி யாவான் ஆகையினுலே அவரவர் பக்குவமறிஞ்சு கொடுக்கவேண்டியது. -டுயகூ

இந்தத்திறமுடைய சிவயோகதீபிகை யென்கிற கிரந்தமானது ஊஅ௰ எ சுலோகங்களும் நாலுவித சத்தாறங்களோடே அஞ்சு படலங்களாசிக்கப் பட்டதென்று சொல்லுகிறதை கர்த்தா அநுக்கிரகம் பண்ணினுர். சுய.

யிந்தப்படி சதாசிவ யோகீஸ்வரராலே ருசயோக விஷயமான அமனஷ்டக விதானமான அஞ்சாம்படலம் முத்தும். ஆக படலம் அஞ்சுக்கு சுலோகம் ஊஅஎ.

குறிப்பு :

சுலோக வடிவில் வடமொழியில் இயற்றியவர். சதாசிவ யோகீஸ்வரர். இது அதன் மொழி பெயர்ப்பு. மொழி பெயர்த்தவர் இன்னுரெனக் காண இயலவில்லை. 5 படலங்கள் முற்றும் உள்ளன. யோக நூல்களுள் ஒன்ருகுமிது. இதன் பின்னர் அகத்தியர் பாடல் தொடர்ந்து காணப்படுகின்றது.

---

வரிசை எண். **1245** சுவடி எண் : **945**

## சிவஞான போதம் (உரையுடன்)

ஏடுகள் : *118.* ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும் ஓரங்கள் முறிந்தும் உள்ளன. பக்கத்திற்கு : *9-10* வரிகள். அளவு : *16 × 3* செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *1700.* ஆசிரியர் : மெய்கண்ட தேவர். முழுமை : முழுவதும் இல்லை.

திருச்சிற்றம்பலம்

தொடக்கம் :

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லா... ... ... ...

தலைதலைமையானே தம்மைபுரன
அவனவ ளதுவெனு மவைமூ வினை... ... ...
ரேற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்தமாதி யென்மனுர் புலவர்.

முடிவு:

... ...முரைக்கு மிரும்பெனு மெய்யுளத்தோங்கிய
... ...வரே... ...உக யிக-முற்றும்.
... ...செம்மலராம் பன்னி... ... ...
... ...முன்னுகச் சேருஞ் சூரணியெது... ...
... ...யிவை கடம்முள்.

குறிப்பு :

இது சைவ சித்தாந்த நூல் பதினுன்கனுள் முதன்மையானது. பன்னிரு சூத்திரங்களையுடையது. ரௌரவாகமத்தில் பாப விமோசனப் படலத்தில் சகலாகம சாரமாக விளங்குவது. வடமொழியில் உள்ள இதனைத் தமிழாக்கம் செய்தவர் சுவேதவனப் பெருமாள். இவரது ஆசிரியர் பரஞ்சோதி முனிவர். இவரது தீட்சா நாமமே மெய்கண்டார். சிவஞானம் கைவரப்பெற்றவர். இவர் வார்த்திகம் என்ற உரையையும் இதற்கு எழுதியுள்ளார். மேலும் இதற்குப் பலர் உரை எழுதியுள்ளனர். இந்நூல் மிகமிகச் சிதைந்துள்ளதால் இது யாருடைய உரை என்பதனைக் காண இயலவில்லை.

வரிசை எண் : **1246** சுவடி எண் : **895**

## சிவவாக்கியர் வேதசாத்திரக்கும்மி

ஏடுகள் : *43.* ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 37 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *1500.* ஆசிரியர் : சிவவாக்கியர். முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

" சீற்மிகு ஞானப் பெண்மேற்
றேவநாற் பாட்டுக் கொப்பாய்
போற்மிகு சமயத் தோற்கள்
புரிந்துரெண் டகத்தைக் காட்டி
யேற்மிகு வேத சாஸ்த்திரக்கும்மி
யியம்புதற் கிணையில் லாத
பாற்மிகு உயிர்கள் யாவும்
படைத்தமெய்ப் பொருள்காப் பாமே " -க

சீர்கொண்ட ஞானந் திரமாக—ஒரு
சிறந்த சாத்திரக் கும்மிசொல்ல
பார்கொண்ட வேதத்துக் கெட்டாதே—நின்ற
பரப்பிர மப்பொருள் காப்பாமே ". -உ

**முடிவு :**

ஐய்யோ பேயின்ம யக்கத்தை விட்டு
விட்டையோ பறப்பிரமத்தை ஸோத்திரியும்
மைய்யோ சாஸ்த்திரக் கும்மியெண்ணூற்
றைம்பதாக முடிந்தது ஞானப்பெண்ணே -அாடுய

சிவவாக்கியர் ஞானக்கும்மி முற்றும்.

**குறிப்பு :**

வேதாந்தத்தைச் சார்ந்த தத்துவத்தினைக் கூறுவது. மிகச்சிறிய எழுத்துக்கள். சிவவாக்கியர், 18 சித்தர்களில் ஒருவர். இவர் பாடல்கள் தத்துவத்தை உள்ளடக்கிக்கொண்டிருக்கும். இதில் 850 பாடல்கள் உள்ளன.

---

வரிசை எண் : **1247** சுவடி எண் : **964**

## சைவ சித்தாந்த நூல் *(பஞ்சாக்கர மாலை)*
உரையுடன்

ஏடுகள் : *163.* ஏட்டின் நிலைமை : மிகவும் பூச்சி அரித்த நிலை. பக்கத்திற்கு : *10—11* வரிகள். அளவு : 25.5 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 7000. ஆசிரியர் : நமச்சிவாய குருக்களின் மாணுக்கர் போலும். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

மணமுதல் சிவமீறுகிய தத்துவங்களா... ...
தற்புருடகலை—ச, அகோர்கலை அ—வாமதே... ...
சிவமாகவும் பாவிக்க வேண்டும் சித்தியாரில்... ...
யந்தானுஞ் செய்யுளுரையிற் விரிவாக... ...
மங்கலைக்கழித்து அஸ்த்திரமந்திரத்த... ...
பெருமானைப்பார்த்துச்... ... சருவவியாபக... ...

முடிவு :

சிவஞானம் பாடியத்துங் காண்க. முத்தியிற்கலந்து கெடாமற் சிவனிறையி லின்புற்று நிற்பதற்குவமை.

" பண்ணிசைவெம் பருதிமதி திலந்தயிலம்
தீயிரும்பு பாணி யப்பு
விண்ணிலம் உடலுயிர் நீர்நிழல்
உச்சிப்பளிங்கு பகல்விளக்கு பால்நீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிரிவிரிய
வத்துவிதக் கலவி காட்டி
தண்ணளிவைத் தெனையாண்ட துறைநமச்சி
வாயகுரு சரணம் போற்றி ".

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீபஞ்சாட்சர சத்குரு சுப்பிரமணிய தேசிகர் பாதார விந்தமே கெதி.

சத்து உள்ளது; சித்து—அறிவு; ஆனந்தம்—பேரின்பம் சத்தியஞானனந்தம்-சச்சிதானந்தம்—எ—து ஒரு பொருட் கிளவி—III.

குறிப்பு :

முதல் 30 ஏடுகள் மிகச் சிதிலமாக உள்ளன. முதல் ஏடு பாதியாக முறிந்துள்ளது. இதில் பெரும் பெயுருச்சரிப்பு முறை, ஞான பூசை மறுப்பு, பஞ்சாக்கர மாலையுரை, சூக்கும பஞ்சாக்கர முறை, ஆதீன ஞான பூசையன்று வேறு விதி, ஞான பூசை, திருவண்ணுமலை ஆதீனத்தாராலியற்றிய கட்டளை, சதாசிவமூர்த்தி கட்டளை, ஞானவமிர்தக்கட்டளை, பொறிபுலன் கட்டளை முதலானவைகள் அடங்கி உள்ளன.

முதற்பிரிவு முடிவில் : ' ஆகபஞ்சாக்கரமாலையுரை வகை நக்கு செய்யுள் சூய.,, ... இனி மூலத்தைத் துறுவி விசாரித்து அமைக்க வேண்டும். முற்றிற்று ' என்றுளது.

வரிசை எண் : 1248 சுவடி எண் : 801

## தசகாரிய மூலம்

ஏடுகள் : 37. ஏட்டின் நிலைமை : சிதிலமாகவும் பூச்சியரித்தும் உள்ளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 40 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை: 1200. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இருக்கிறது.

தொடக்கம் :

தசகாரிய மூலம்

உழிதர லியைந்த காய வோங்கலிற் காம மாதி
கழிபெருங் கதிரெ ரிப்பக் கனன்றுளம் வருந்து வேனை
வழிமது வொழுகுந் தண்டா மரையடி நீழல் சேர்க்கும்
பொழிமதக் கலுழி நால்வாய்ப் பொருப்பினை விருப்பஞ்
செய்வாம்.

முடிவு

" புரையறு வேட மீசன் பொருந்துமா லையங்க ளெல்லா
முரைபுணர் விரிந்து மேவா மொருவன துருவ மென்றே
தரையினிற் தொழுது போற்றி தற்பர வடிவாய் வாழ்வர்
கறையிறந் தகன்ற ஞானக் கடலமு தருந்தி னேரே" -ய

சிவபோக முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் -நாக.
திருச்சிற்றம்பலம்.

குறிப்பு :

இந்நூல் சைவ சித்தாந்த சாத்திரங்களுள் பண்டார சாத்திரம் பதினான்கனுள் ஒன்று. தத்துவரூபம், தத்துவதரிசினம், தத்துவசித்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசினம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசினம், சிவயோகம், சிவபோகம் என்னும் தசகாரியங்களின் தன்மையை விளக்கமாகக் கூறுகிறது.

---

வரிசை எண் : 1249 சுவடி எண் : 737

## பிண்டோற்பத்தி

ஏடுகள் : 8, ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும், ஏடுகள் சிதைந்தும் ஒடிந்தும் உள்ளது. பக்கத்திற்கு :

4-5 வரிகள். அளவு: 46 × 3 செ. மீ. எழுத்து: மணிப்பிரவாளம். கி. எண்ணிக்கை: 100. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

**தொடக்கம்:**

ஹரி ஓம் சுபமஸ்து

* * * * *

ஆகாசத்தில் வாயுத்தோன்றி வாயுவிலக்நி தோன்றி அக்நியி லப்பு தோன்றி அப்புவில் பிரதிவி தோன்றி. பிருதி வியில் ஓஷதி தோன்றி, ஓஷதியில் அன்னந் தோன்றி, அன்னத்தில் ரசந்தோன்றி, ரசத்தில் மாம்சந் தோன்றி, மாம்சத்தில்

* * * * *

எடுக்கப்பட்ட சரீரமாய் கடுப்பும் பெருமையும் போலே கண்டித்து நடுவேயொரு சுழியுண்டாய் அந்தச்சுழிக் குண்டுலே இருபது ரோம.........

**முடிவு:**

நம் - சீமநந்தம் விஷ்ணுவை லா ஜாதகன்

**குறிப்பு:**

இது மணிப்பிரவாள நடையில் உள்ளது. ஏடுகள் முறிந்தும், துண்டுகளாகவும் உள்ளன.

ஆண் பெண் கூட்டுறவால் பிண்டம் உண்டாகும் போது, இன்ன நேரத்தில் உண்டானல், இன்ன இலக்கணங்களோடு இருக்கும் என்பதைக் கூறும் நூலாகலின் இதற்குப் பிண்டோற்பத்தி என்னும் பெயராயிற்று. தொடக்கமும் முடிவும் சரிவர இல்லை. ஆசிரியர் பெயர் இல்லை.

---

## சைவத் திருமுறைகள்

வரிசை எண்: 1250. சுவடி எண்: 803 (a)

## தேவாரம் (திரட்டு)

ஏடுகள்: 40. ஏட்டின் நிலைமை: நல்ல நிலையில் உள்ளது; சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு: 4-6 வரிகள். அளவு: 23 × 3 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 500. ஆசிரியர்: மூவர். முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி
சூடிக்
காடுடைய சுடலைப்பொடி பூசியென் னுள்ளங்கவர்கள்வ
னேடுடைய மலரான் முனைநாட்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடைய பிரமாபு ரமேவிய பெம்மானிவ னன்றே" -க

முடிவு :

"காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையாற்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாபணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால் வெண்ணை நல்லூரருட்
டுறையு
ளாரூரனெம் பெருமாற்காளா யினியல்லே னெனலாமே".

திருச்சிற்றம்பலம், தேவாரப்பதிகம் முற்றும்.

வேணும் சிவகிருபை.

குறிப்பு :

இந்நூலில் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனர் ஆகிய மூவரின் தேவாரப்பதிகங்களின் திரட்டு உள்ளது. திருப்பிரமபுரத்திருப்பதிகம், திருநீற்றுப்பதிகம், (நாவுக்கரசர்) கோயிற்திரு நேரிசை, திருவண்ணுமலைத் திருநேரிசை, கோயிற்றிருவித்தம், (நமச்சிவாயப் பதிகம்), கோளறு பதிகம் (சம்பந்தர்), (சுந்தரர்) திருவெண்ணெய் நல்லூர்ப்பதிகம், அவிநாசித் திருப்பதிகம், (சம்பந்தர்) திருப்பிரமபுரத்திருப்பதிகம், (சுந்தரர்) திருவெண்ணெய் நல்லூர்ப்பதிகம் ஆகியவை உள்ளன. சம்பந்தர் திருப்பிரமபுரத் திருப்பதிகமும், சுந்தரர் திருவெண்ணெய் நல்லூர்த் திருப்பதிகமும் இரண்டு முறை எழுதப்பட்டுள்ளன. சில பதிகங்களில் ஒரு செய்யுள் மட்டும் உள்ளது.

வரிசை எண். **1251** சுவடி எண் : **803 (b)**

## திருவாசகம் (திரட்டு)

ஏடுகள் ; 4½. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யரித்துள்ளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 23.5 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : மாணிக்கவாசகர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

## சிறப்புப்பாயிரம்

நேரிசை வெண்பா.

"தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
யல்லலறுத் தானந்த மாக்கியதே-யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்."

திருச்சிற்றம்பலம்.

முடிவு :

"சடையானே தழலாடீ தயங்கு மூவிலைச் சூலப்
படையானே பரஞ்சோதீ பசுபதீ மழவெள்ளை
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையா
யடியேனுன்
உடையானே யுனையல்லா துறுதுணைமற் றறியேனே." -எ

குறிப்பு :

எட்டாந்திருமுறை எனப் பேசப்படும் இந்நூலில் சில செய்யுட்களே உள்ளன. இந்நூலின் இறுதிப் பக்கத்தில், கடவுளின் எண் குணங்கள் கூறப்பட்டுள்ளன. இதனையடுத்து அந்தாதிப் பதிகம் ஒன்றில் 3-ம் செய்யுள் முதல் 10-ம் செய்யுள் முடிய உள்ளன.

---

வரிசை எண் : **1252** சுவடி எண் : **803 (c)**

## திருமுருகாற்றுப்படை

ஏடுகள் : 17. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யறித்துள்ளது. பக்கத்திற்கு : 5-7 வரிகள். அளவு : 23 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : நக்கீரர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்

முடிவு :

சேணின் றிழுமென விழிதரு மருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

ஆறுவது பழமுதிர்சோலை திருமுருகாற்றுப்படை முற்றிற்று.
வேணும் சிவகிருபை.

குறிப்பு :

இந்நூல் பத்துப்பாட்டுக்களில் முதலாவது. இதை இயற்றிய ஆசிரியர் நக்கீரனுர். இந்நூல் முழுவதும் ஆசிரியப்பாவினுல் ஆனது. 317 அடிகளைக் கொண்டது. முருகக்கடவுள் தோத்திர நூல்களில் ஒன்றுகும். கடைசி ஏட்டில் பழமுதிர்ச்சோலை வெண்பாவும், சிறப்புப் பாயிரக் கலித்துறையும் காணப்படுகின்றன.

---

வரிசை எண் : **1253** சுவடி எண் : **803 (d)**

## திருப்புகழ் (தொகுப்பு)

ஏடுகள் : 8. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 6-8 வரிகள். அளவு : 23 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அருணகிரிநாதர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே.
யீசனுடன் ஞானமொழி பேசுமுக மொன்றே.
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே.
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே.

முடிவு :

திறத்தனுற்பல சமணரை யெதிரெ திற்கழு களேற்றிய
பதுமையை யினிதோடு திருத்தமாய்ப் புகழ்
மதுரையி லுரைதரு மறுமுகப் பெருமாளே."

குறிப்பு :

இந்நூலில் திருவண்ணுமலைத் திருப்புகழ், பஞ்சரத்தினத்திருப்புகழ், திருவாலவாய்த் திருப்புகழ் முதலியன காணப்படுகின்றன. இவர் இயற்றிய திருப்புகழில் சிலவே ஈண்டு இடம் பெற்றுள்ளன. திருவண்ணுமலையில் எழுந்தருளியிருந்தவர் அருணகிரிநாதர். முருகனருளால் கவிபாடும் திறம் பெற்றவர்.

வரிசை எண் : **1254** சுவடி எண் : **803 (e)**

# சிவராத்திரிப் புராணம்

ஏடுகள் : 24. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யரித்துள்ளது. பக்கத்திற்கு : 5-6 வரிகள். அளவு : 23 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 260. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

"சீருறையுங் குருபதமும் ஞான வாழ்வுந்
திருநீறு மஞ்செழுத்துந் திரமா யோங்கப்
பேருறையுந் திருப்பதிக ளெங்கும் வாழ்க
பேருன திருச்சிற்றம் பலமும் போற்றி
காருறையும் புனல்வேடன் வேட்டை யேகிக்
கருதுசிவ ராத்திரியின் புராணஞ் செப்பத்
தாருறையுந் திண்புயத்து வேலர் முன்னோன்
றாளிணையே சரணந் தானே" -க

**முடிவு :**

"போனநமன் றன்பதியிற் புகுந்தி ருந்து
புண்ணியமே செய்தவர்க டம்மை விட்டே
ஈனமுட னரும்பாவஞ் செய்தார் தம்மை
யிட்டநாண் முடிந்தளவிற் பிடித்து வந்து
வூனமுட னெழுநரகு தன்னிற் றள்ளி
யுழலவிட்டுக் கூத்தாட்டந் தானுங் கண்டே
ஆனவரன் கொடுத்தலதி காரங் கொண்டு
அப்படியே யாக்கினைசெய் தவனி ருந்தான்." -சயஎ

**குறிப்பு :**

இது சிவராத்திரியின் மகிமையினைக் கூறுவது. இதன் பின்னர் வசிட்டர் இராமசாமிக்கு உபதேசம் சொல்வது என்று எழுதப்பட்ட பகுதி பாதி ஏட்டில் இருக்கிறது.

வரிசை எண் : **1255** சுவடி எண் : **803 (f)**

## **பாகவதம்**—ருக்மாங்கதப் படலம்

ஏடுகள் : 1½. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 23 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 30. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

“இருணியா யிடந்தும் குறளனு யளந்தும்
இலங்கிய வனந்தனுய்ச் சுமந்தும்
அருணனு ணயனச்சத்திய பாமை யாகி
யங்கர சினிற்பி றந்தும்
தரணிமின் றனைத்தன் னுறத்தினி லணைத்தோன்
றுளிணைத் தொழுதுவா மனதே.”

**மு.டி.வு :**

புத்திரியாகிய பூமி தேவியை மார்பிலணைத்த ஸ்ரீமன் நாராயணருடைய பாதத்தைந் தொழு மனதே. இரணியாட்சதன் வேதங்களைப் பறித்துக் கொண்டும் பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டும் பாதாள உலகத்தில் சென்று ஒழிந்து கொண்டான். அதற்குப்பன்றியவதாரம் ஆனார்கள். ஸ்ரீமன் நாராயணமூர்த்தி துணை.

**குறிப்பு :**

ருக்குமாங்கதப்படலம் என்ற தலைப்புடன் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இந்நூலின் இறுதியில் காசிக்கண்டம் 1½ ஏடும், பாகவதம் 1 ஏடும் காணப்படுகின்றன.

---

வரிசை எண் : **1256** சுவடி எண் : **803(g)**

## **விநாயகர் அகவல்**

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 23 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : ஔவையார். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

மூஷிக வாஹன மோதக ஹஸ்த
சாமர கர்ண விலம்பித சூத்திர
வாமன ரூப மஹேஸ்வர புத்ர
விக்ந விநாயக பாத நமஸ்தே.

சித்தி விநாயகர் துணை.

*　*　*　*　*

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலவிசை பாட

முடிவு :

" அஞ்சக் கரத்தி னரும்பொரு டன்னை
நெஞ்சக் கரத்தி னிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே."

குறிப்பு :-

இந்நூல் விநாயகர் தோத்திரப் பாக்களில் ஒன்றாகும். இந்நூல் அச்சிடப்பட்டு உள்ளது. இதன்பின் தனி ஏடு ஒன்று காணப் படுகின்றது.

---

வரிசை எண் : **1257**. சுவடி எண் : **803 (h)**

## விநாயகர் பூசை

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 23 × 3 செ. மீ. , எழுத்து : தமிழ் கி.எண்ணிக்கை : 40. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

சுக்லாம் பரதரம் விஷ்ணும்
சசிவர்ணம் சதுர்புஜம்
பிரஸந்ந வதனம் தியாயேத்
ஸர்வ விக்கினோப சாந்தயே.

கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

முடிவு :

தேவலோகத்திலும், பூவுலகத்திலும் அடியேனுடைய உள்ளினும், வெளியினும், பிரகாசிக்கின்ற சுயஞ்சோதியே சமஸ்த உருவங்களாகவும் வியாபித்திருக்கின்ற பொருள் எவை அக்கடவுளின் பாதங்களை சதா காலமும் துதி செய்வாம்.

குறிப்பு :

இந்நூல் விநாயகர் தோத்திர நூல்களில் ஒன்று. இந்தப் பிரதியில் முழுவதுமில்லை.

---

வரிசை எண் : **1258** சுவடி எண் : **803 (i)**

## கடவுளின் எண்குணங்கள்

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 23 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 40. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

க—வது தன்வயத்தனுதல்.
உ—வது தூய வுடம்பினனுதல்.
ங—வது இயற்கையுணர்தல்.

முடிவு :

சு—வது பொருளுடைமை.
எ—வது முடிவிலாற்றலுடைமை.
அ—வது வரம்பிலின்பமுடைமை—ஆக குணம் யெட்டு கடவுளுக்கு.

குறிப்பு :

இந்நூல் கடவுளின் எண்குணங்கள் இன்னவென்று கூறுகின்றது. No. 803 (b) நூலின் ஈற்றிலும் கடவுளின் எண் குணங்கள் கூறப்பட்டுள்ளன. இது திருக்குறள், கடவுள் வாழ்த்தின், 'கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத்தலை' என்னும் குறளில் உள்ள எண்குணத்தானுக்குப் பரிமேலழகர் கூறும் உரையெனக் கூற இடமுள்ளது.

வரிசை எண் : **1259** சுவடி எண் : **803 (j)**

## கும்பகோணம் மகாமகத் தீர்த்த மகிமை

கங்கையின் திருநாமம்.

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 23 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 40. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

நிரிபதகை தேவி சீமதி சாநவி வீட்டுமமாதா. உலோக மாதா சுவாத்துநீ - மேரு சம்பவை திரிலோசந.........ற பூதை - சத்ததாராசு பாவகைளன்பதி நோன்ரும்.

**முடிவு :**

கலாவதி காமதை காமப்பிரிய வரப்பிரதை
காளி காமப்பிரதை காலதாயி நிகமடா
கலைகன்னிகை எனப் பதிஞென்ரும் பயோட்டி–
ஸரியின்றிரு நாமம். பாபகாரினி பாலகை
பரிமோதிநி, பூரணை, பூரணுவதி மோகை, மோகாவதி.

**குறிப்பு :**

தஞ்சையை அடுத்துள்ள கும்பகோணத்தில் பனிரண்டு ஆண்டு கட்கொருமுறை மாசி மகத்தன்று மகாமக விழா நிகழும். மகாமகக் குளமென்ரெரு குளமுண்டு. அதில் கங்கை முதலான எல்லா புண்ணிய தீர்த்தங்களும் நிறைந்திருக்கும். 12 ஆண்டுகட்கொரு முறை எல்லாத் தேவர்களும் வந்து நீராடுவர் என்பது வரலாறு. அன்று எல்லோரும் நீராடினுல் முத்தி பெறுவர் என்பது பேசப்பட்டு வருவதொன்ருகும். அதில் எழுந்தருளும் கங்கையின் பல்வேறு நாம முரைக்கும் ஏடுகளிவை.

---

வரிசை எண் : **1260** சுவடி எண் : **803 (k)**

## திருக்குறள்

ஏடுகள் : 7. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு ;

23 × 3 செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 80. ஆசிரியர்: திருவள்ளுவர். முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம்:

"காலத்தினுற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது."

கருத்து: காலத்தினுல் ஒரு முடிலவாகு...... அளவிலே செய்த நன்றி பூமியிலு மிகவும் பெரிது.

முடிவு:

"மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னேற்றான் கொல்லென்னுஞ் சொல்."

எ-வது அதி. புதல்வரைப் பெறுதல் முற்றும் எழுதி இருக்கின்றது. வேணும் சிவகிருபை.

குறிப்பு.

இந்நூலின் இறுதி ஏடு மிகவும் சிதைந்துள்ளது. இந்நூல் இந்தப் பிரதியில் முழுதும் இல்லை. இந்நூலின் முழு விபரங்களை Valume I & III கேட்டலாக்குகளில் தெரிந்து கொள்ளலாம்.

---

வரிசை எண்: **1261** சுவடி எண்: **803 (1)**

## இராமாயணம்

ஏடுகள்: 6. ஏட்டின் நிலைமை: சிறிது பூச்சி யரித்துள்ளது. பக்கத்திற்கு: 6 வரிகள். அளவு: 23 × 3 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 70. ஆசிரியர்: கம்பர். முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம்:

"வண்டுள ரலங்கலாய வஞ்சர் வான்முகம்
கண்டதோர் பொழுதினிற் றெரியுங்கை......
உண்டெனி னெளிதவர் கொளிக்க வெண்ணுமோ
விண்டவர் பலபகன் மருவி வீழ்வரோ."

முடிவு :

தேவர்க்குந் தானவர்க் குந்திசை
முகனே முதலாய தேவ தேவா
மூவர்க்கு முடிப்பறிய காரி யத்தை
முற்று விப்பான் மூண்டு நின்றார்
ஆபத்தில் வந்த பயமென் றனைய
யிர்த்தகல் விடுது மென்றால்
கூபத்தின் சிறுபுனலை கடலயிர்த்து
குலாவ வாதோ கொற்ற வேந்தே.

குறிப்பு :

இந்நூலில் தொடக்கமும், முடிவும் இல்லை. இந்தப் பிரதியில் முழுவதும் இல்லை. இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது. கம்பராமா யணத்தின் ஒரு பகுதியாகுமிது.

---

வரிசை எண் : **1262** சுவடி எண் : **803 (m)**

## பாரதம்

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 23 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 30. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

**துரியோதனன் மடிந்தபோது ஐந்து விரல்களையும் மடக்கிக்கொண்ட விபரம்.**

"விதுரன் வில்லிறுத்தான் மெய்மைமெய்
முனிமகன் காவாதால்
கதிர்மக னிருக்கால் பாம்பைக்
கைவிடா திருக்கையாலு
முதிர்மகன் நீர்த்தம் பத்தால்
முதற்களப் பலியீயாதால்
இதுவைந்துந் தவிர்க்கை யாலே
இவ்விரல் மடங்கிற்றன்றே."

முடிவு :

துரியோதனன் மடிந்தபோது ஐந்து விரலையும் மடக்கிக் கொண்ட விபரம் ஸ்ரீ கிருஷ்ண சுவாமி சொல்லுதல். ஸ்ரீ கிருஷ்ண சுவாமி சொல்

குறிப்பு :

இந்நூலில் கூறப்பட்டுள்ள செய்யுட்களால் வில்லிப்புத்தூராழ்வார் பாரதம் என எண்ணப்படுகின்றது. இந்தப் பிரதியில் முழுவதும் இல்லை. ஆனால் இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

இதன் பின்னர் " திருவிளையாடற் புராணம், நாற்பதாவது, வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய படலம் திருச்சிற்றம்பலம் " என்று தலைப்பு எழுதிய ஏடு ஒன்று காணப்படுகின்றது.

---

வரிசை எண் : **1263** சுவடி எண் : **803 (ம)**

## திருமுகப் பாசுரம்

ஏடுகள் : 1. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு: $23 \times 3.5$ செ.மீ- எழுத்து : தமிழ். ஆசிரியர் : இறையனார். முழுமை : முழுவதும் இருக்கிறது.

தொடக்கம் :

கடவுள் துணை.

மேற்படி சரித்திரனுட்பட்ட பாட்டுகள் சொக்கநாதர் தருமியென்னும் பிராமணனுக்கு அருளிச் செய்த திருமுகம். பாசுரம். அகவல்.

"கொங்குதேர் வாழ்க்கை யைஞ்சிறத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலிய
செறியெயிற் றருவை கூந்தலி னறியவு
முளவோ நீயறியும் பூவே."

திருச்சிற்றம்பலம்.

முடிவு :

அசரீரி

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க-விருக்க

வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோ சொல்.

வேணும் சிவகிருபை.

குறிப்பு :

ஒரு ஏட்டின் இரண்டு பிரதிகள் காணப்படுகின்றன. இதன் இறுதியில் 5 சில்லரை ஏடுகள் காணப்படுகின்றன.

**

## சைவத் தோத்திரங்கள்

வரிசை எண் : **1264** சுவடி எண் : **866 (a)**

# இடும்பன் கவசம்

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 23.5 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. ஏண்ணிக்கை : 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" ஓம் சவ்வும் யிடும்பா சாயி நமா
அகஷ்த்திய சீஷா அறுமுக தூதா
அடியென் வல்வினை அகற்றிட வருவாய்
செகத்தினி லேவிகுஞ் சிறந்து நின்றவனைத்
தகத கன சாரினீ வருவாய்."

முடிவு :

" நேசா சறணம் நிமலா சறணம்
பழனியில் வாசா சறணம்
சண்முக தூதா சறணம் சறணம்
யீசா சறணம் சரணமென் றேனே."

திருச்சிற்றம்பலம்.

குறிப்பு :

கந்த சஷ்டி கவசம் போல இடும்பன் கவசமாகுமிது. பிழைகள் அதிகம். தேவராயன் என்பவரால் இயற்றப்பட்டிருக்கக் கூடுமென ஊகிக்கப்படுகிறது. இதற்கு முன் ஒரு ஏட்டில் வேட்டு மருந்து

கணக்கு—நெரை ய. கந்தகம் நெரை—க. வெடியுப்பு நெறை—எஇ கரி நெறை—கஇ. என்றும், அதன் பின்பக்கம்;

"வெள்ளி சனிதிங்கள் விருந்துண்ணு நல்லாபுதன்
கள்ள வியாழம் கசப்பிக்கும்ந் தீருபகை விழையும்
செவ்வாயி னுக்கிடராம் வாராப் பணகயும் வரும்" என்றும் உள்ளது.

---

வரிசை எண் : **1265** சுவடி எண் : **866(b)**

## சுப்பிரமணியர்பேரில் அகவல்

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

தந்திமுகவர்க் கிளையா கந்தா சறணம்
சரவணபவனே சரணம். முருகா சறணம்.
சத்துறு சங்காரா சறணம்.
சித்த மிலங்கும் சிவசிவா சரணம்.

**முடிவு :**

வியாளக் கிளமையில் வெளியே வரவேணும்
வெள்ளிமா னீன்ற புள்ளிமான்ங் கனனே.

வெள்ளிக்கிளமையில் வெளிய வறவெனும். சனிக்கிளமையில் வாறும் சறவணத்துறையே.

**குறிப்பு :**

இது முருகன் வழிபாட்டு நூல். பிழைகள் மலிந்து காணப்படுகின்றன. முதல் ஏடு மற்றொன்று உளது. ஆக ஏடுகள் நான்கு.

---

வரிசை எண் : **1266.** சுவடி எண் : **866 (c)**

## பழனியாண்டவன் சஷ்டி கவசம்

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 9 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : பாலன்தேவராயன். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

" சவுந்தரி நல்ல சிதம்பரி தாத
குருவான சிவகிரி மலையில்
தாமரை பொய்கையில் நேயமாய் வளத்தும்
சோமனந் தரித்து சொக்கரி டத்தில் நான்
தளர்ந்து விளாமல் வறந்தற வேணும்,

* * * * *

நூல்

ஓம் சஷ்ட்டியெ ஞேக்கச் சறவண பவனும்
சிஷ்டறுக் கொத்விய செங்கதிர் வேலோன்
பாதமு ரண்டு பணிமணிச் சதங்கை
கீதம் பாடக் கிங்கிணி யாட

**முடிவு :**

பொல்லா தவரை பொடிபொடி யாக்கும்
நல்லாற் நினவில் நடனம் புரியும்
சத்துறு சங்காற வேலே!

பழனியாண்டவர் துணை.

**குறிப்பு :**

இது கந்தர் சஷ்டி கவசம். முருகப் பெருமான் நூல்களுள் ஒன்று. பாலன் தேவராயன் என்பவரால் இயற்றப்பட்டது போலும். இவர் இயற்றிய வேறு கவசங்களும் இருப்பதாகத் தெரிகின்றது. இது அச்சாகியுள்ளது.

வரிசை எண். **1267** சுவடி எண் : **866 (d)**

## மதுரை மீனாட்சி அம்மன் பேரில் அகவல்

ஏடுகள் : 8. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 250. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுதும் உளது.

**குறிப்பு :**

இது முன் 831-b பிரதி போன்றது. பாடவேறுபாடுகள் உள்ளன. நல்ல பாடமாக உளது.

---

வரிசை எண் : **1268** சுவடி எண் : **866(e)**

## பெரியநாயகியம்மன் பேரில் விருத்தம்

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை: 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

“ அரிபிற மாரி தேடுதற் கரிய
அன்ன பூறணி சதா நந்தி
அந்தரி கெவுரி சுந்தரி கோரி
அம்பரி துரந்தரி மாரி.

**முடிவு :**

வண்டனிக் குளமேல வரநதிசூள
வாழ்ந்திடும் வாலி மாநகரில்
வாலி பூசித்த வாலிநா யகரை
மறுவிய பெரியநாயகியே ”.

**குறிப்பு :**

வாலி மாநகரில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள பெரிய நாயகியம்மன்பேரில் இயற்றப்பட்ட பதினான்கு சீர் கழிநெடிலாசிரிய

விருத்தம். ஒன்பது செய்யுட்களே காணப்படுகின்றன. பிழைகள் அதிகம்.

---

வரிசை எண் : **1269** சுவடி எண் : **866 (f)**

## அருணாசலேசுவரர் பாடல்

ஏடுகள் ; 3. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உளது.

குறிப்பு :

இது முன் அருணாசலேசுவரர் பேரில் தெரிசினை என்ற M 831-c போன்றது. 11 செய்யுட்கள் உள்ளன.

---

வரிசை எண் : **1270** சுவடி எண் : **866(g)**

## உத்திராட்சப் பாடல்

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" திரிபுர அரசுனுட வாதை யாலே
தேவர்களும் முனிவோறு மதிமயங்கி வாடி
சரியா யிறவறுசம் தவமே செயிது
சத்தியமெ தறுமாகில் தயவா னின்று
பரிவுடனே திறுனடந் தாலேதிறும்
பாக வெளுந்த முந்தின உத்திரஷ்சமாகும்
கருணையினல் யிப்படிவந் தென்னை ஆள்வா
கனகசபா பதியெனும் கருத்துளத்தேனே ".

முடிவு :

" பதிமூன்று முகமுள்ள மணியுற் வெல்லு
படிசுவுமாது வணிந்தால் பாக்கிய முண்டாம்
சதிருன அஷ்ட்டமா சத்தியுண்டாம் தந்தையெக்
கொன்ற பாவந் தீரும்
யிதும்பிறகே அந்தாமணி அல்லாங் கோர்த்து
யெடுத்து தனைந்து யென்னுழாவில் யெல்லாங்
கண்டென்
கதிறம் பொன்னே செம்பொன்னே கன்னே
கனகாசாபா பதியெனும் கறுத்துளத் தேனே".

குறிப்பு :

இது உருத்திராக்கத்தின் பெருமையையும் மகிமையையும் கூறுவது. 8 பாடல்கள் எண்சீர் விருத்தமாக உள்ளன. பிழைகள் மலிந்து கிடக்கின்றன.

---

வரிசை எண் : 1271. சுவடி எண் : 866(h)

## சோடசவுபசாரம்

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 9 வரிகள். அளவு : 23 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 60. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" கறுத்து தன்னில்... ... ... ...
... ... ... கந்த உற்றசிவசத்தி
உறுவரி நின்றங் குத்தருள வாலைக்கு
திருநீ றிதுவே சேர்த்துகொள் ளம்மனே ".

முடிவு :

" ஆலந் தரித்த அதிசய சங்கரி
ஞாலந் தன்னில் நின்றுநடம் புரிநாறணி
கோலங் குரிக்குமங் குலமகள் வாலைக்குள்
பாலமு திதுவே பறிந்துகொள் ளம்மனே ".

குறிப்பு :

பதினாறு வகையான உபசாரங்களைக் குறிக்கும் நூலிது. அம்பிகையினை உபசரித்து வணங்கும் பதினாறு செய்யுட்களைக் கொண்டது. பிழைகள் அதிகம். இதன் பின்னர் வயித்திய மந்திரம் எழுதிய 2 ஏடுகள் உள்ளன.

வரிசை எண் : **1272** சுவடி எண் : **866 (i)**

## திருமூலவேடம்

ஏடுகள் : 2 ஏட்டின் நிலைமை: பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 24×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 30. ஆசிரியர் : திருமூலர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" முண்டச் சடைமுடி தெண்... ...பொடி
... ... ... மேவியதூளிதங்
கண்டகோ டாலி கையிதை அங்குஷ்ட்டம்
உண்டென்று மூவற் குரைசெய்தா னந்தியே. -க

முடிவு :

" பாதகெச்சை சிலம்பு மாவடிகாது பொற்குண்டலங்
கைய்யொடு கப்பரை
வீதியுட பிச்சையும் மெய்யில் வெண்ணீறும்
ஆதி திருமூல ரடியார் திருவேடமே ". -ரு

குறிப்பு :

திருமூலர் பாடலாகுமிது. 5 பாடல்களையுடையது. இந்நூலின் பின்பகுதியில் நேத்திர மந்திரம் எழுதப்பட்டு உள்ளது. முதல் ஏட்டின் பின்பகுதியில் தொடங்குகின்றது. அடுத்த 2-வது ஏட்டின் பின் பகுதியில், இதன் அடுத்த தலைப்பாகிய (அணியாபரணமாலை) தொடங்குகிறது.

வரிசை எண் : 1273 சுவடி எண் : 866 (j)

## அணியாபரணமாலை

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது.
பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ.
எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 15. ஆசிரியர்:
அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

அணியாபரணமாலை

“ சிவமுக மாகுந் தெளிவுகுறு வாகும்
சிவனுட ரூபந் தெரிசனை லிங்கம்
சிவனிட மனதும் சத்திவடி வாகுஞ்
சிவனுரு விளைந்தது திருநீறு தானே ”. -க

**முடிவு :**

“ கணபதி தானே கருமுடிச் சங்கு
குணவிய வேதங் கோளிய கயரும்
வினவிட யதுவே விஷ்ட்ணு வுருபம்
தினமோசை ஞதம் சிவசத்தி தானே ”. யகூ

அணியாபரண மாலை முற்றும்.

**குறிப்பு :-**

இந்நூல் திருமூலர் திருமந்திரம் போல் காணப்படுகின்றது. அணிகலன்களைப்பற்றிக் கூறுகின்றது. பிழைகள் அதிகம்.

வரிசை எண் : 1274 சுவடி எண் : 866 (k)

## எழுவகைத்தோற்றம்

ஏடுகள் : 2½. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது.
பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ.
எழுத்து ; தமிழ். கி. எண்ணிக்கை : 25. ஆசிரியர் :
அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

### தேவாதியள் மனுஷருய்ப் பிறந்தால் குணம்

" கூறவே கலைமெஞ் ஞானங் குருவருள் லிங்க பூசை
மீறவே நீற ணிந்து மிக்கதோர் மணியுஞ் சாத்தி
ஆறவே அன்ன சொற்னம் அருசுவை யளித்தோ
றன்பால்
வீரதாய் விண்ணோ ராவர் விளம்பினேம் விரும்பிக்
கொள்ளே ".

முடிவு :

நீதியுள்ள வேதியன் கொடியிலோர் சென்மம்
நீங்காமல்ப் பிரமத்தைத் தெரிசிப்பாரே. ௬

குறிப்பு :

இதுவும் திருமூலர் திருமந்திரம்போல் காணப்படுகிறது. ஆறும் நான்கும் ஆகப் பத்து செய்யுட்கள் இருக்கின்றன. இடையில் 'வேறு' என்று எழுதப்பட்டுளது. இதில் தேவாதிகள் மனிதராய்ப் பிறந்தால் குணம், மனிதர் மனிதராய் பிறந்தால் குணம், மிருகம் மனிதராய்ப் பிறந்தால் குணம், பறவை சாதி மனிதராய்ப் பிறந்தால் குணம், ஊர்ப்பட்டசாதி மனிதராய்ப் பிறந்தால் குணம் ஆகிய ஐந்துக்கும் செய்யுட்கள் கூறப்பட்டுள்ளன. 6-வது செய்யுள் பொதுச் செய்யுளாக உளது. மற்ற நான்கு செய்யுட்கள் போலிகளைக் கண்டித்துக் கூறுகின்றன.

வரிசை எண் : **1275.** சுவடி எண் : **866 (1)**

## அருணஞான விளக்கம்

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : .50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" சிறியவர்கள் பெரியோர்க்கு நிந்தை செப்பச்
சிறியவர்க்கு பெரியோர்கள் சிறிய ராமோ

ஆரியில்ல ரயண்மா ல்ரியாக்கோஞ் சுடரை
அனுபவித் தருளுடையார் தம்மை நோக்கி

முடிவு :

இறுமிதிந்தி வுடல்தெனது கிண்மை தன்னி
விரிலாப்பர மடைவாரி யல்பின்னின்ப
மறுமைகண்டு மீளவருந் தவங்க ளெல்லாம்
வந்திலென்ன வருந்தாமல் மயங்கிலென்னே ". -எ

குறிப்பு :

நீதிகளைப் போதிக்கும் இந்நூல் ஏழு செய்யுட்களைக்கொண்டது ஆகும். பிழைகள் அதிகம். இது சன்மார்க்கத்தை வற்புறுத்துகின்றது.

---

வரிசை எண் : **1276** சுவடி எண் : **866 (m)**

## அகத்தியமுனி வேதாந்தம்

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 24 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 40. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" ...........கொண்டு அரிவாலே நின்று பாரு
சேமப்பா திரோதாயி ஆறென் ருக்கால்
சிகமெல்லாம் பெண்ணுன மாலி ஓசை

முடிவு :

தேடையிலே சதாநித்தியம் வேதாந்தம் பாறு
சேந்துநின்று பேசையிலே தெளியச் சொல்வார்
நாடையிலே என்னேறம் மவுனத்தில் ஞடு
நாட்டமாம் வாசினை தான் நன்ருய்க் கேளே." -ய்சு

குறிப்பு :

தத்துவங்களைக் கூறும் இந்நூல் நிறைந்த பிழைகளைக் கொண்டுளது.

வரிசை எண் : 1277. சுவடி எண் : 866(n)

## மோட்சதீபத்துப் பாட்டு

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 24×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 25. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

" ... ... செம்பொற் சீர்பத மழிக்கு ஞானத்திகள்
கயிலாசம் வந்துபெற பெருசவுத மோங்குமென்ற
சொலப்பெறுக்கக் கூறிநீயினி வந்தசேதி
நிலமையா யுரைசெய் யாரே ". -சு

**முடிவு :**

" பாறகத் தோற்கள் வாள்கப்
பரமனின் னடியார் வாள்கச்
சீர்பெறு மன்ன சுற்றந்
திகழவே வாழ்க வாழ்க
கூற்மளு வெந்துங் கையான்
குளிர்மலர்ப் பாதம் வாள்க
வீர சைவத் தோர்வாள்க
விண்ணவர் வாழ்கத் தானே ".

திருச்சித்தம்பலம்.

**குறிப்பு :**

இறந்தாருயிர் இறைவனடி சேர்தற் பொருட்டு நந்தா விளக்குகள் வைப்பது தொல்லோர் வழக்கம். அப்படி ஏற்றிவைத்துப்பாடும் பாடலாகுமிது. வீரசைவநூல் 10 பாடல்களே உள்ளன. பிழைகள் அதிகம். இந்நூலின் இறுதியில் வேறு பாடல்கள் எழுதிய 4 ஏடுகள் உள்ளன. ஒரு பகுதியில் (இந்தப்பேறு பெற்றவர்க்குப் பிறவியும் உண்டென்றெண்ணலாமே) என்ற ஈற்றடியினைக் கொண்ட செய்யுட்கள் ஆறு காணப்படுகின்றன.

வரிசை எண் : **1332** சுவடி எண் : **856 (d)**

## பழனியாண்டவர் அகவல்

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : சற்றே பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 35 × 3.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

"தந்திமுக வற்கிளைய கந்தா சரணம்
சரவணபவனே சரணம் முருகா சரணம்
சித்த மிங்குஞ் சிவசிவா சரணம்
சத்துரு சங்காரா சரணம்

**முடிவு :**

சிந்தையில் வந்து சிவபதம் தானும்
தஞ்சமே யென்று உன்னைச் சாமியின்
நாதா போற்றினேன் யென்நெஞ் சுக்கு
மேல்நின் ருடுங் குமரு சரணம்."

முற்றும் சம்பூர்ணம்.

**குறிப்பு :**

முருகன் துதி நூல்களுள் ஒன்றாகுமிது. பிழைகள் அதிகம் காணப்படுகின்றன.

---

வரிசை எண். **1333** சுவடி எண் : **856 (e)**

## திருமூர்த்தி பேரில் தேவாரம்

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 35 × 3.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 60. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" உன்னடிசெந் தாமரையின் மலர் தூவிக் கரங்குவித்துள்
ளுருகி வாழ்த்தி
நின்னடிமை யான்வணங்கப் பழவினையெல் லாம்தீர்ப்பாய்
நிசமே அய்யா
மின்னிடையா ளிடப்பாக அஷ்டாங்க நெஷ்ட்டைபுரி
விமலா குண்டா
தென்னடிகை மலையில்வளர் அமணலிங்கா மெஞ்ஞானத்
தேவர் தேவே." -க

முடிவு :

" அடிகைமலை அமணலிங்கம் யென்றுரைத்தார் பாவம்போ
யாமே புண்ணியம்
அடிகைமலை அமணலிங்க மென்றுரைத்தால் வித்தைபுத்தி
யதிக மாகும்
அடிகமலை அமணலிங்க மென்றுரைத்தா லிமதூத
ரண்டா தோடும்
அடிகமலை அமணலிங்க மென்றுரைத் தால்ப்போ
லருளுண் டாமே" -ம௨

முற்றும்.

அமணீசுபரர் சுவாமி துணை செய்வார்.

குறிப்பு :

அழகைமலையில் விளங்கும் அமணலிங்கத்தின்மீது இயற்றப்பட்ட தாகுமிது. ஆனால் திருமூர்த்தி தேவாரம் என்றுளது. தேவாரமாகு இல்லை. பதிகமாக உளது.

---

வரிசை எண் : 1334 சுவடி எண் : 856 (f)

## அருணாசலர் பேரில் கலித்துறை

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 35 × 3.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"முடியாச் செனனம் யெடுத்தென்ன பெற்றென்ன
முத்தியில்லா
விடியாப் பொழுதினில் விழிகண்ட தில்லையிம்
மேதினியில்
அடியாற் கடியான் திருவடி யான்தருற்ற வந்தாஒரு
படியாய்ப் பிறந்தில னேதிரு வண்ணு மலைதனிலே."

முடிவு

" சனியான பாவி இளமை யிலேவந்து தான்தொடுத்தால்
இனியா கிலுஞ்சற் றிரங்கிலை யோயெனை யாள்முருகா
அனிதான தொண்டரு சென்றிடு முற்றிடும் பாதையிலே (ஒரு)
கனியாய்ப் பிறந்தில னேதிருவண் ணுமலைக்
காவுக்குள்ளே" -எ

அருணசல ஈசுபரர் துணை செய்வார்.
சுப்பிரமணியக் கடவுள்பாதமே துணை.

குறிப்பு :

ஏழு பாடல்களே உள்ளன. இதன் இடையில் முருகன் துதியும் வருகின்றது. ஆழ்வார் பாசுரம், முதாயிரம், "ஊனேறு செல்வத்து" எனத்தொடங்கும் குலசேகரப் பெருமாள் பாசுரம்; திருவேங்கட மலையில் பிறத்தலை அவாவுதல் போல, இது திருவண்ணுமலையில் பிறத்தலை அவாவுகின்றது. சைவப்பாசுரமிது. இந்நூலின் இறுதியில் 2 ஏடுகளில் சில மந்திரங்கள் எழுதப்பட்டுள்ளன.

வரிசை எண் : 1335 சுவடி எண் : 810 (உ)

## விநாயகர் அனுபூதி

ஏடுகள் : 28. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துள்ளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 25 × 4 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 200. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"செந்தா மரையிற் றிகழுமா முகனே
யெந்தாய்க் கயிலைக் கிறையோ னுதவும்
மைந்தா வெனநின் வளர்சீர் புகலத்
தந்தாண் முருகன் றனிசேர் தரனே."

முடிவு :

"முத்தி தரும்மும் மதனே சரணஞ்
சித்தி தருசெங் களிறே சரணம்
புத்தி தருபொற் பதனே சரணம்
அத்திக் குருவே யடியேன் சரணம்." -டுக

முற்றிற்று.

குறிப்பு :

இந்நூல் விநாயகர் தோத்திரப் பாடல்களில் ஒன்றாகும். இந்தப் பிரதியில் முழுதும் உள்ளது. எழுத்துக்கள் தெளிவாகவும் பெரிதாகவும் உள்ளன. 51 செய்யுட்கள் உள்ளன. தொடக்கத்தில் "தண்ட பாணிதாசன் ஆகிய எஸ். நாகலிங்கம்பிள்ளை சுவடி. நீடூழி வாழ்க. வேலு மயிலுந்துணை" என்றுளது.

---

வரிசை எண் : **1336** சுவடி எண் : **810 (b)**

## பஞ்சாட்சரமாலை

ஏடுகள் : 18. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6-8 வரிகள். அளவு : 25 × 4 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 400. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" ஆதியென்ற பரமபரனைப் போற்றி செய்து
அம்மையவள் உலகத்தோர் பிழைக்க வென்று
நீதியாம் மந்திரங்கள் சக்கரங் கள்மூலி
நிசமாக உண்டென்று அரனைக் கேழ்க்க

சோதியாம் உமையவளே நீகேளென்று
சொல்லுகிறேன்பஞ் சாட்சரத்தின் சொரூபந் தன்னை
வாதியாம் பெரியோர்க்கும் புத்தி யுள்ள
மன்னவர்க்கும் யிதுவாகும் வகைவே றில்லை." -க

முடிவு :

"கரையான அதனத்துக் கிதுவே யாதி
கண்டகண்ட மந்திரங்கள் விரும்ப வேண்டாம்
பரையான உமையவளைப் பணிந்து போற்றி
பார்தனிலே யித்தொழிலை ஆடிப் பாரு
வரையெட்டுக் குள்ளிருப்போர் உனக்கு ஈடோ
மாந்திரீகர் உனைக்கண்டும் மகிழ்வா ரப்பா
உரையான அன்பதுக்குள் முறைதா னப்பா
உலகத்தில் துயர்நீங்கி உகந்து வாழே." -சுக

தேவிசகாயம். சிவமயம் முற்றிற்று. மவுன குருவே நம.

குறிப்பு :

இது பஞ்சாட்சரமாகிய நமசிவய என்ற ஐந்தெழுத்தின் மகிமை யுரைப்பது. பரமசிவன் பார்வதி தேவிக்கு உபதேசித்ததாகக் கூறப் படுவது. இறுதியில் மௌனகுரு வணக்கம் கூறியுள்ளதால் அவர்தம் சீடர் இதனை எழுதியிருக்கலாம் என்று எண்ண இடமிருக்கின்றது.

---

வரிசை எண் : 1337 சுவடி எண் : 810(c)

## ஆறுமுகவன் விஞ்சை

ஏடுகள் : 6. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 25 × 4 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"சீர்மேவும் வாலைஅபி ராமி சூலி
திரிபுரசம் மாரிகங்காளி மாரி வாழி

தார்மேவும் மகிடசங் காரி துர்க்கை
சாமுண்டி கங்காளி தந்த மைந்தன்
கார்மேவும் தந்திமுகன் ஒத்தைக் கொம்பன்
கருணைதிரு அயன்திருமால் கமலம் போற்றி
பார்மீதில் அறுமுகவன் குருமு னிக்குப்
பகரும்விஞ்சை பட்சணிக்கும் காப்புத் தானே."

முடிவு :

அருளுகின்ற விஞ்சைகள்தான் ஆருக் கென்றால்
அரண்மாலை பணிந்துதம்மை அறிவுள் ளோர்க்கும்
குருவுவிசு வாசம்நன்றி மறவா தார்க்கும்
குணமிகுந்த பெரியோர்க்கும் கூற லாகும்
அருளுடைய மனத்துமிகும் நெஞ்ச வஞ்சர்
மாதர்கள்மே லாசைவைத்து மயங்கி னோர்கள்
பொருளிலிச்சித் துயிர்வதைகள் செய்நெஞ் சோர்க்கும்
பொன்கோடி யீந்தாலும் புகலொண் ணாதே."

முற்றிற்று. திருச்சிற்றம்பலம்.

காலம் :-

சிதம்பரம் தாலுக்காவைச் சேர்ந்த சிதம்பரநாதன் பேட்டையிலிருக்கும் பிச்சாண்டி குமாரன் சிவசிதம்பரம் கை எழுத்து. விஞ்சை முற்றிற்று. மன்மதவருடம் தை மாதம் 22ந் தேதி திங்கட்கிழமை எழுதி நிறைவேறிற்றது.

குறிப்பு :

இது குருமுனியாகிய அகத்தியருக்கு முருகன் அருளியது. வித்தைகளைக் கூறுவது. இந்தப் பிரதி முழுவதும் உள்ளது.

---

வரிசை எண் : 1338. சுவடி எண் : 932 (a)

## விநாயகர் கவசம்

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை
பக்கத்திற்கு : 9 வரிகள். அளவு : 17.5 × 3.5 செ.மீ.
எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100.

ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"சீர்தரு மூலஞ் செளுஞ்சுடற் விழக்கே
கார்நிற மேனிக் கற்பகக் கன்றே
அல்லல் வினையும் அருந்திடும் ஞானம்
வல்லவைத் தன்னை மறுவியம் புலனே."

முடிவு :

நான்குனா ருயிரத்தி நானூத்தி நாற்பத்தி
யெட்டு ணேவு மெல்லார் விலைகள்
மேரையருத்து ஆசு சாமவேதம் அருள் திருநீற்றப்
பஞ்சாட்சர நிலைப்படிப் புறத்தே வைத்தே.

குறிப்பு :

விநாயகர் துதியாக அமைந்துள்ளது. எழுத்துக்கள் புரியுமாறு இல்லை.

---

வரிசை எண் : **1339** சுவடி எண் : **932(b)**

## கந்தர் சஷ்டிகவசம்

ஏடுகள்: 4. ஏட்டின் நிலைமை: நல்ல நிலை சிறிது ஒடிந்து உள்ளது. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 17.5 × 3.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"ஓம்
சஷ்ட்டி யையனேக் கசர அனபவனுற்
சிஷ்ட்டிக் குதவிய செங்கதிர் வேலோன்
பாத மிரண்டும் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட

முடிவு :

உயர்கிரி வேலா சடைக்கோ ரரசே
மயில்நட மிடுவார் மலரடி சரணம்

குருவே துணை. இதுக்கு மூல மந்திரம் அரியவும். ஐயுங் கிலியும் சவ்வும் அரி ஆம் ஊம் ஓம். சர அனபவா. பூசைக்கி பால், பழந் தேங்காய், இலை, பாக்கு, சூடம், சாம்பிருணி வைத்துக்கொள்ள வேண்டியது. இதுக்குச் சக்கரம் எதுக்குஞ் சாபநிமிற்தி மூலமந்திரம். ரீயும், ரீயும் எச்சாபமும் நசி நசி உரு-௲அ.

(இங்கு சக்கரம் உள்ளது.)

குறிப்பு :-

இது முருகன் துதியாகும். இது அச்சாகியுள்ளது. எழுத்துக்கள் தெளிவில்லை. பிழைகள் அதிகம்.

---

வரிசை எண் : **1340** சுவடி. எண் : **932 (c)**

## ஈசன் கவசம்

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 17.5 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை. 150 ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

ஓம்நமோ பகவதே ஆதிமூலமே ஆதிமூலமே ஆதிலச்சிமி
அனுதிலச்சிமி ஆதாரம் ஆதாரத்தின்மேல் மகாபருவதம்
மகாபருபத்தின் மேல்ச் சதுரகிரி சதுரகிரியின்மேல்
அஷ்ட.குலபருவதம். அஷ்டகுலபருபத்தின்மேல் அஷ்ட்ட
மானுகம்.

முடிவு :

அய்யுங்கிலியும் ரியும் கிலியும் ஆயிநமஐயும்கிலியும்
அவ்வும் உவ்வும் பட்டு சிவாகா அகாரா அகார உகார
உ.கார பகடுபகடுவாக துவாந்துமாருமாருல செகாண்டி
அரே திகுமக்குமாரு. குருவே துணை.

(இதன்பின் சக்கரம் உள்ளது.)

குறிப்பு :

இது ஈசன் துதியாகும். எழுத்துக்கள் புரியவில்லை. பிழைகள் மலிந்து காணப்படுகின்றன.

---

வரிசை எண் : 1341 சுவடி எண் : 932 (d)

## நவக்கிரக சக்கிரம்

ஏடுகள் : 100. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 9 வரிகள். அளவு : 17.5 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2000. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" ஆதியென்ற மூலமந்திரம் அரியென் ஜோதி
அறிந்தபின்பு நவக்கிரக சக்கி சத்தை
நீதியுடன் சற்குருவாய் விழங்க வேண
நிலையரிது கொங்கணரும் உமையை போற்றி
ஓதியதோற் மந்திரகலைக் கியான மான
உண்மைஎன்ற வேதாந்த ஞானந் தன்னில்
சோதியென்ற ஆதார மூல மாகித்
துலங்கிநின்ற கணபதிதாள் துணைக்கொண்
டோமே. "

முடிவு :

இதுக்கு மந்திரம் நசிமசியென்று ளஅ உருச்செவிக் கவும். பூசைக்கி வஸ்து முட்டை பழங்கடலை வைத்துச் செய்யவும்.

குறிப்பு :

இது நவக்கிரகத்தின் நிலையினை அறிவது. மந்திரசாத்திரத்தினைச் சாரும். எழுத்துக்கள் தெளிவில்லை. இதில் பல மந்திரங்கள், பல சக்கரங்கள் முதலியன காணப்படுகின்றன. எழுத்துக்கள் தெளிவு இன்மையாலும், ஏடுகளின் எண்கள் சரியின்மையானும், தலைதடு மாற்றம் ஏற்பட்டுள்ளன. இச்சுவடி முழுவதுமே இந்த நிலையில் உள்ளது.

வரிசை எண் : 1342 சுவடி. எண் : 932 (e)

## வயிரவன் கேடிகாரம்

ஏடுகள் : 1½. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 17.5×3.5 செ. மீ, எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 30. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

அரிஓம் அங்அங் சிங்டங் சங்கார வயிரவா வடபத்திரசூாழி மகனே. ஆங்கார ஓங்கார புத்திரு தெச்சனுமுத்துரந்தி ரீர்.

**முடிவு :**

இந்த யெழுதியபடி செய்செய் உச்சாடு. ஆகிருசானே ஆகிருசனே. இது மூலமந்திரம். ஓம் ஸ்ரீயும்தம்தம் சிங் மதுமாங்கிச ருத்திரசத்தி மாதாவே நசிமசி உரு-ளஅ.

(இதன்பின் ஒரு சக்கரம் இருக்கிறது.)

**குறிப்பு :-**

இது மாந்திரீக நூல்களுள் ஒன்று. வயிரவனைக் குறித்து மந்திர எழுத்துக்களால் பூசித்து நலம் பெறுவது. விளக்கம் தெளிவில்லை.

---

வரிசை எண் : 1343 சுவடி எண் : 932(f)

## காளி கேடிகாரம்

ஏடுகள் : 10. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 17.5×3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை. 200. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

அரிஓம் காழிகாழி ஸ்ரீரியும் அம்மாதாயே ஆங்கார வயிரவி சத்தி வயிரவி சாமுண்டி சண்டி பத்திரகாளி சூலி கபாலி நீலி நீல கண்டிவாவா.

முடிவு :

ஒன்னைசுற்பிரயோகம் செய்து ஒன் வலது காலை முறித்துவிடுவேன். ஆனந்தால் ஆக்கிரயித்துக் கண்ணாலே பார்த்து சத்திராதிரிய நசிமசி உச்சாடு உச்சாடு மாடா! யென்னை நினையாதே. யென்பேர் சொல்லாதே. மூல மந்திரம். சம் ரிங் றிங் சிங் உங் ருத்திரமாடா நசிமசி உரு-ளஅ.

(இதன் பின் ஒரு சக்கரம் இருக்கிறது.)

குறிப்பு :

இது சக்தியைக் குறித்துச் செய்யும் மந்திரமாகும். மாந்திரீக நூலைச் சார்ந்தது. ஏடுகள் தலைதடுமாற்றமானதால் தொடர்ச்சி இல்லை. எழுத்துக்கள் தெளிவில்லை.

---

வரிசை எண் : **1344** சுவடி எண் : **932(ஜ)**

## மாடன் கடிகாரம்

ஏடுகள் : $1\frac{1}{2}$. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 17.5×3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"அரிலிம நமசிவய புத்திருருத்திரு மாடா வாவா கங்கிரீயுமயிலு மயிரியுமரி ணிருவாணிமதுமாங்கிசப் பட்சினி.

முடிவு :

விரசு விரசு ஒன்னைப் பெற்றவளாணை காழிஆனை தாக்கு ஆகிர்சர்யா சுவாகா இதுக்கு சக்கரம் மூல மந்திரம் முலும் மடங்சிங் விரு நசிமசி உரு-ளஅ.

(இதன் பின் ஒரு சக்கரம் உள்ளது.)

குறிப்பு :

இது மாடன் என்னும் தேவதையினைக் குறித்துச் செய்யும் மாந்திரீகமாகும். மந்திர சாத்திரத்தினைச்சாரும். எழுத்துக்கள் தெளிவில்லை.

வரிசை எண் : 1345 சுவடி எண் : 932(h)

## மதுரைவீரன் கூடிகாரம்

ஏடுகள் : 39½. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 17.5 × 3.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 600. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

அரிஓம் வீருதிவீரு வேத்திப்பீரு பரமாலா சாலா உப்புலியா சக்கிலியா மாடகுப் பிரதானி மகா அரக்கு மடங்காவீரு ஒ ன் னை நான் அழைக்கிரபோது ஓன்காரி வாகனமேரி வரப் பேய் பூதங்களெல்லாம் வாய்மூடி கை கட்டி நிற்கும்.

முடிவு

அறுமுகம் பன்னிரு தோளும்
சக்தி வடிவேலுடன் அடியேன்முன் வரவரச்சுவா.
இது சுப்பிரமணியர் அழைப்பு.

குறிப்பு :

இது மந்திர சாத்திரத்தினைச் சாரும். இதில் பல மந்திரங்களும் தியானங்களும், சக்கரங்களும் உள்ளன. ஏட்டின் எண் தெரியாமையானும், எழுத்துக்கள் தெளிவின்மையானும் இவைகள் தனித்தனியே இடம் பெறவில்லை. பொதுவாக இச்சுவடி முழுவதுமே இந்நிலையில் உள்ளது.

வரிசை எண் : 1346 சுவடி எண் : 841

## விநாயகர் பெயர்வரிசை

ஏடுகள் : 61. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்து உள்ளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 14 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

குறிப்பு :

இந்நூலில் விநாயகர் அகவல், விநாயகர் பூசை, வதிஸ்டர் ஸ்ரீராம சுவாமிக்கி உபதேசம் முதலியன எழுதிய ஏடுகள் இணைக்கப் பட்டுள்ளன.

---

சைவக்கட்டளைகள்

வரிசை எண் : 1347 சுவடி எண் : 944 (a)

## தத்துவக் கண்ணாடி

ஏடுகள் : 13. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 8-9 வரிகள். அளவு : 38 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

**பராபர வஸ்துவை யறியவேண்டியதுக்கு பார்க்கிர தத்துவக் கண்ணாடி**

இந்த தத்துவக் கண்ணாடியைப் படித்து யிதனுடைய அர்த்தத்தைக் கண்டிருக்கிறவர்க்கு சத்தியவேதத்தினுடைய பரமரகசியங்களையும் மத்தனுலு வேதத்தினுடைய காரியமும் அற்(ர்)த்தமும் ௰அ-புராணமும் கூ௰சு கலைக்கியானமும் உ௰அ ஆகமமும் கூ௰சு தத்துவமும் ஆறு சாஸ்த்திரமும் சித் தின்பத்தினுடைய காரியமும், பேரின்பத்தினுடைய காரணமும் வெளக்கெடுத்தாப்போலே தெரியவரும்.

முடிவு :

சஞ்சாரம் பண்ணுகுறது ஒரு ராசாவானவன் ஒரு கோட்டைக்குள்ளேயிருந்து ராச்சியபாரம் பண்ணுகுற காலத்திலே அவன் சாரி சாறனம் போறபோதும் மத்தச் சமையத்திலேயும் யெத்தேசக் காலத்திலேயும் அவனுக்கு அனேகம் ஊழியக்காரரும், ராணுவுபபேராம் யெக்காள மடம் மானம் பேரிகை சங்கீத மேளம்யிதுகள் செயிது கொண்டுயிருப்பார்கள். அப்படிப் போல் ஆற்ம்மாவென்னப்பட்ட ராசா சரீர மென்னப்படகோட்டைக்குள்ளே.

குறிப்பு :

இது வேதாந்த நூலைச்சாரும். தத்துவங்களை உபமானத்துடன் விளக்குவது.

வரிசை எண் : 1348. சுவடி எண் : 944 (b)

## அத்துவா

ஏடுகள் : 7. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 9-10 வரிகள். அளவு : 38 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

இனி அன்னத்தில் ரசந் தோன்றி ரசத்திலுதிரந் தோன்றி உதிரத்தில் மாங்கிஷந்தோன்றி மாங்கிஷத்தில் மேதைதோன்றி மேதையிலத்திதோன்றி அத்தியில் மச்சை தோன்றி மச்சையில் சுக்கிலந்தோன்றி சுக்கிலத்தில் சுரோணி தந்தோன்றித்து.

முடிவு :

யிந்த முறைமை அரியாதவன் குருபுத்திரனல்லவென்று திருக்குருந்தீசுரர் ஆதி திருவள்ளுவநயினூர் சாச்சியாத் திருமூலருக்கு அருளிச்செய்தவாரு. அண்டத்திற்கண்ட பொருள்

பிண்டத்திற்காண வேணும். பிண்டத்திற்கண்ட பொரு ளண்டத்திற்காண வேணும்.

அத்துவா. தெரிசின முற்றும்.

குறிப்பு :

இது வேதாந்த விஷயமானது. அத்துவா என்பது ஆன்மாக்களைப் பரகதியடைவிக்கை காரணமாகிய வழி. அது மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்துவா, கலாத் துவா, என ஆறுவகைப்படும். இதனைச் சார்ந்து அத்துவா சைவம் என்ற ஒரு சைவம் உண்டு. அது சத்திநிபாதம் கைவரப்பெற்ற சைவன் சிவனை வழிபடும் நெறியினைக் கூறுகின்றது.

---

வரிசை எண் : **1349** சுவடி எண் : **944 (c)**

## தத்துவக்கட்டளை

ஏடுகள் : 11. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 9-10 வரிகள். அளவு : 38 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

ஆதிவள்ளுவநயினர் சாட்சியாகத் திருநந்திதேவர் திருமூலருக்கு உபதேசம் பண்ணின தத்துவம் யிந்தசரீரம் எண்ஞ்சாண் நீளமும், நாற்சாண்பருமமும், தன்விரலால்த் தொண்ணூத்தாறு விரற்பிரமானம். இப்படி கொத்தசரீ ரத்தில் தத்துவந் தொண்ணூத்தாருண்டு.

முடிவு :

பூலோகத்திலே பரத்திலே அன்புவைத்து தேடின பெரி யோர்களுக்குத் திருமந்திர சாச்சியாக அருளிச்செய்தவாறு யிந்த முறைமை அரிந்து நின்றவனே குருபுத்திரன் என்றும் பரமகுருனுதன் பாதமடைந்து பரகெதியிலே வாழ்வா றென்றவாறு.

குமரகுருபரன் துணை.

குறிப்பு :

இதுவும் வேதாந்த விஷயமானது. தத்துவங்கள் தொண்ணூற்றுரையும் விளக்கமாகக் கூறுவது அச்சாகியுள்ளது.

---

வைணவநூல்

வரிசை எண் : 1350 சுவடி எண் : 959

## இயற்பா

ஏடுகள் : 72. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பூச்சியரித்துள்ளது. பக்கத்திற்கு : 8-9 வரிகள். அளவு : 40 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300. ஆசிரியர் : பொய்கையாழ்வார் முதலானோர். முழுமை : முழுவதும் இல்லை.

குறிப்பு :

இந்நூல் அச்சாகியுளது. இருப்பினும் பாடபேதங்கள் மிகுதியும் காணப்படுகின்றன.

---

சில்பம்

வரிசை எண் : 1351 சுவடி எண் : 913(a)

## குமாரசாமியம் — மயனூல்

ஏடுகள் : 10. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 8—9 வரிகள். அளவு : 23 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 230. ஆசிரியர் : மயன். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

" ஆதித்தனே சசியே சரணம் அங்கா
ரகனே புதனே சரணம் சரணம்

சாதிக் குருவே சரணம் பிருகுபாற்
கரனே சனிபக வானே சரணம்
வாதித் திடும்நோய் தீர்த்தான் டருளும்
வாள ராவே சரணம் சரணம்
கேதுச் சுவாமி யானவனே சரணங்
கிளருங் கிளிகா சரணஞ் சரணம்.

நூல்

சிறந்ததோர் ரிசிகள் சொன்ன
சாத்திர மபத்த மாகும்
தெரிந்தவர் புவியோர் மெய்க்கத்
திரம்புகற் குபதே சித்தல்
அறிந்தவன் மயன்முன் மூடன்
ஆலைய மனைதான் கூபம்
பிரிந்ததோர் சாத்தி ரங்கள்
புரிமயன் விளம்ப லுற்றேன்." -க

முடிவு :

" வரும்பகல் பூறுவ பக்கம்
வரிசையுத் திராய ணத்தில்
தரும்பில மதிக்கு நற்கோள்
தயவுடன் பாவி ருகு
பெரும்பில அமர பக்கம்
பெரியதெட் சணுய னத்தில்
அருள்மயன் சரித்தி ரத்தை
யறிந்தவ னுரைசெய் வாயே."

குமாரசுவாமியம் — மயனூல் சாத்திரம் முற்றும்.

குறிப்பு :

இது மனையடி சாத்திரமாகும். மயனென்பார் தேவத்தச்சன், இதில் கோயில், வீடு கட்டுதல், கிணறு வெட்டுதல் முதலான செய்திகள் பேசப்படுகின்றன. சிறந்த நூலாகத் தெரிவிக்கின்றது.

வரிசை எண்: 1352 சுவடி எண்: 913 (b)

## சருவார்த்த சிந்தாமணி (உரையுடன்)

ஏடுகள்: 319. ஏட்டின் நிலைமை: நல்ல நிலை. பக்கத்திற்கு: 8–9 வரிகள். அளவு: 23 × 3 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 9000. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம்:

" சீரெனும் லக்க நேசன் மித்திராங்கிசன் தன்னில் சேர
சார்பதாய்ச் சுபக்கோள் பாற்கில்ச் சவிக்கியம் லெக்க நேசன்
ஆரவே பெலத்துக் கேந்திர கோணரி லமைய நல்லோர்
பாருவை பெற்று லாயுள் பாக்கிய முள்ள தாமே. "

என்றது லக்கினுதிபதி சோடச மித்திராங்கிஷமேற சுபக்கிரகம் பாற்க லக்கினுதிபதி பிலமாக இருக்க கேந்திர திரிகோணத்திலிருந்து சுபர் பாற்க பாவியள் பாருதிருக்க தேக சவுக்கியமென்பது.

முடிவு:

விரிந்தகேந் திரத்தில்ச் சோமன் மேவப்பொன் வெள்ளி பார்க்க
பரிந்திடில் ருச யோகம் ஒன்பதில்ப் பரிதி னல்லால்
செரிந்தமந் திரியி னேடே சேர்ந்துமே உச்சமேற
அரிந்திடில் அர்சற யோக மாகுமென் றரிந்தோர் நூலோர்.

குறிப்பு:

இது சோதிட நூல்களுள் ஒன்று. பாவகபலன் போன்றது. பிழைகள் மலிந்து காணப்படுகின்றன.

வரிசை எண்: 1353 சுவடி எண்: 739

## சில்பசாத்திரம்

ஏடுகள்: 33. ஏட்டின் நிலைமை: பூச்சியரித்தும், சிதைந்தும் உள்ளன. பக்கத்திற்கு: 6—8 வரிகள்.

அளவு : 37.5 × 3.5 செ. மீ. எழுத்து : தமிழ்.
கி. எண்ணிக்கை : 1000. ஆசிரியர் : அறியக்கூடவில்லை.
முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" வாக்குண்டாம் நல்ல மனமுண்டா மாமலராள்
நோக்குண்டா மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு. "

" வேத முகங்க ளாக
விளங்குமும் மூற்தி யாக
பூதலம் விளங்க வந்த
புண்ணியநன் முகப் போற்றி
தீதில்லா மாயன் சொன்ன
சில்ப்பசாத் திரத்தி நூலை
நீதியாய்த் தமிழி னாலே
நெறியுடன் விளங்க லுத்தேன். "

முடிவு :

நட்செத்திரம் அவிட்டம் வாரம்ஞயர் ஆங்குசம்மேகம். சாதி சூத்திரன். திதி அமரபட்சம். திசமிருசி ரிஷபம். வயது ௯௰௬௫௫.

குறிப்பு :-

இதன் இறுதி ஏட்டில் ஒரு தனிப்பாடல் காணப்படுகிறது. இடையில் எழுத்துக்கள் தெரியாவண்ணம் மிகச் சிதிலமாக உள்ளது. மாயவன் வடமொழியிற் செய்த நூலைத் தமிழில் கூறுவது. மனை சாத்திரம் கூறுகின்றது. இன்னின்ன சாதியாருக்கு இன்னின்ன வகையில் வீடு அமைக்கப்படவேண்டும் என்றும், இன்னின்ன சாதியாருக்கு இன்னின்ன மரங்களால் பொருள்கள் செய்யப்பட வேண்டும் எனவும் கூறுகின்றது. மற்றும் பல செய்திகளைக்கூறும் இந்நூல் மிகவும் பயனுடையது.

(M. No. 740 ஜாதகங்கள்)

வரிசை எண் : 1354 சுவடி எண் : 742

## சில்பசாத்திரம்

ஏடுகள் : 63. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்த நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 30×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

குறிப்பு :

இச்சுவடி 739-ம் எண் சுவடியைப் போன்றது. ஆயினும் வேறு பாடுகள் காணப்படுகின்றன.

(எண். 743, 744, 745 ஆகிய சுவடிகள் ஜாதகங்கள்)

---

வரிசை எண் : 1355 சுவடி எண் : 888

## நட்சத்திர நிகண்டு

ஏடுகள் : 207. ஏட்டின் நிலை : சிறிது பூச்சி அரித்தநிலை. பக்கத்திற்கு : 4—8 வரிகள். அளவு : 24×3 செ.மீ. எழுத்து : மணிப்பிரவாளம். கி. எண்ணிக்கை : 3500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : இல்லை.

குறிப்பு :

கிரந்தமும், தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் உளது. இத்தொகுப்பில் 1) பரிசேஷன மந்திரம், 2) நட்சத்திர நிகண்டு, 3) ராசி நிகண்டு, 4) தேவி ஆலய லட்சணம், 5) மகாவிசுவகர்ம ஆயாதி, (இதனுள் சில சோதிடச் செய்திகள் காணப்படுகின்றன) 6) குறுக்குவழி ஆயாதி, (இதனுள்ளும் சில சோதிடச் செய்திகள் காணப்படுகின்றன) 7) பஞ்சசரம் பார்க்க வழி, 8) ஆயாதி விருத்த சுலோகங்கள், 9) நாம நட்சத்திரம், 10) காச்யபசித்தாந்தம், 11) பிராசாதலட்சணம், 12) விசுவகர்ம ஆயாதி முதலியன, 13) நட்சத்திரதேவதை, 14) இராசி சத்துரு மித்துரு, 15) இடபத் தானம் (சில்பம்) 16) சல்லியசிந்து (ஆருடம் - சோதிடம்) 17) பூமி சல்லியசக்கரம் முதலியன (மனையடி சாத்திரம் சம்பந்தப்பட்டவைகள்)

18 நட்சத்திரக்குறிப்புகள் ஆகியவை உள்ளன. சோதிடமும் சிற்பமும் கலந்த நூலாகுமிது. சக்கர பலாபலன்கள். கிணறுவெட்ட நிலை வைக்க முதலான செய்திகளும் கூறப்பட்டுள்ளன.

---

வரிசை எண்: 1356 சுவடி எண்: 878(a)

## சில்பசாத்திரம்

ஏடுகள்: 8. ஏட்டின் நிலைமை: பூச்சியரித்துளது. பக்கத்திற்கு: 5—6 வரிகள். அளவு: 17 × 2.5 செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 150. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

**தொடக்கம்:**

வேதநான் மறைகளாகி விழங்குமும் மூர்த்தி யாகிப்
பூதலந் தனைய டைத்த புண்ணியன் ருளைப் போற்றி
தீதிலா மயனுற் சொன்ன சிற்பசாத் திறமா நூலை
நீதியாய்த் தமிழி ஞலே நிலைபட வுரைக்க லுற்றேன்."

**முடிவு:**

முளந்தாள் மய்யம் சேலைகட்டு சேலைகட்டுக்குங் கீழ்முகத்தில்
அய்ந்து பங்கில் யொருபங்கு கரைகட்டுங்குங்கிள்
அந்து பங்காக்கி மூணுபங்கில் பாதமுளி நாலாபங்கி
அந்தப் பங்கிலு பாதமினுக்குங் கணம்.

**குறிப்பு:**

இதில் மனையில் நிற்கும்போது சகுணங்கள் முதலியன கூறப் பட்டுள்ளன. இடையில் ஒரு ஏட்டில் இறந்த குறிப்பு ஒன்று காணப் படுகிறது. 8-வது ஏட்டின் பின்னர் வைத்தியம் எழுதப்பட்டுளது.

---

வரிசை எண்: 1357 சுவடி எண்: 878(b)

## மருந்து விபரங்கள்

ஏடுகள்: 4. ஏட்டின் நிலைமை: சற்றே பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு: 6—7 வரிகள். அளவு:

17 × 2.5 செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 80. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

" வல்லாரை நெய். வல்லாரைச் சமூலமும்ந்துவைத்து சாராயிடிச்சி தேவிச்செங்கழுநீர்ச்சார் படி க, கரிப்பாலைச் சார் படி க, பசுவின் பால் படி க, இளநீர் படி உ, பசுவின் நெய் படி உ, யிவெல்லாம் ஒன்ருய்க்கலந்து இதுக்குக் கறகமண்திஷ்ட்டி மதுரங்கு விளப்பத்திரி சந்திட்டவாசம் பச்சைப்பூரம் கோரோசினந்தான் தந்திட்டி வகைக்கு நாலு களஞ்சி பால்விட்டரைத்தே. "

**முடிவு :**

அதையெடுத்து காயப்போட்டு யிடித்து தூள்ச்செய்து தேனில் கொள்ளவும். அந்திசந்திரண்டு நேரமும் சாப்பிடவும். தீரும். பத்தியமில்லை.

**குறிப்பு :**

இது மருத்துவ நூலாகும். இதில் மலசலமடைப்புக்குக் குளிகை, இந்திரகோபப்பூச்சி உண்டாக்க. முட்டை காணுமையாக, காசி(ச) நோவுக்கு மருந்து ஆகியவை காணப்படுகின்றன.

---

வரிசை எண் : **1358** சுவடி எண் : **878(c)**

## மூலிகைப்பெயர் விவரங்கள்

ஏடுகள் : 5. ஏட்டின் நிலைமை: சிறிது பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு: 5—7 வரிகள். அளவு: 17 × 2.5 செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 100. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுமையில்லை.

**தொடக்கம் :**

அட்டியும் மிரட்டியு மென்பது அதிமதுரம்
சுண்டி வேங்கக்கொம்பு யென்பது சுருமீனும்
டமரி கினமிலங் கென்பது பெருங்காயம்

முடிவு :

## கல்லடைப்புக்கு

பூலாந்துளிர் கொண்டுவந்து பசுவின் பாலுவிட்டு அரைத்து நெயி யிளநீர்விட்டு பணவிடை வெங்காயம் பொரித்து நன்ருய்க் குளப்பிக் குடுக்கக் கல்லுத் தெரித்து விழும். பசுவின்பால் தேச்சுத் தலைமுழுகவும். தனதந்தன தந்தின தந்திநாதி.

குறிப்பு :

இதன் 2-வது ஏட்டில் அகராதி கொக்கோகம் என்று குறிக்கப் பட்டுளது. ஆயினும் மூலிகைப்பட்டியலே காணப்படுகின்றது. மருத்துவ நூல்.

---

வரிசை எண் : 1359 சுவடி எண் : 878(d)

## மரணகாலக்குறிகள்

ஏடுகள் : 5. ஏட்டின் நிலைமை : சற்றே பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 17 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

### பூலோகத்தில் மனிதர் மரணமடையுங் காலத்தில் காணப்படுகின்ற அபசகுனங்க(ள்) சொல்லிய விபரம்

மனிதர் நடக்கும்போது அவர்கள் நிழல் அவர்களுக்குத் தெரியாமலிருந்தால் ஒரு வருசத்தில் மரணமடைவார்.

முடிவு :

கருத்த சரீரத்தொடு தலையை விரித்துக்கொண்டு ஒரு ஸ்திரியானவள் வந்து தன் பிடரிலேரிக் குத்தினல்போல வுங் கண்டால் அவள் ஒரு நாளையில் மரணமடைவாள். இப்படிக்குறிகள் யாதொரு துயறம், ஆசை, அன்புகளை

நீக்கி ஸ்ரீமனுராயணமூர்த்தியை தியானம் செய்துகொண்டால் முத்தி பெறலாம்.

குறிப்பு:

இது சோதிட வகையைச் சார்ந்தது. கணுநூல் போன்றது. சுருக்கமாக உள்ளது.

வரிசை எண்: 1360 சுவடி எண்: 878(e)

## கிஷ்ணசாமி தோத்திரம்

ஏடுகள்: 4. ஏட்டின் நிலைமை: சிறிது பூச்சியரித்துளது. பக்கத்திற்கு: 5-4 வரிகள். அளவு: 17 × 2.5 செ.மீ எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 100. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம்:

தேவாதி தேவா புருஷோத்தமா புண்டரீகாக்ஷ
ஆபத்பாந்தவா அனுதரக்ஷகா கோவிந்தா கோபாலா.

முடிவு:

பட்டினத்துப்பிள்ளை பாடல்

யின்னுறெ யின்னபடி செய்வோமெண்டு யென்னினுல்
முன்னுளில் யெழுதினவன் மோடனே — மன்னுகேள்
சுளிச்சு யெளிதினுனென்றும் சோம்பியிருந் தாக்கால்
அளித்து யெரித்துவானே அயன்.

குறிப்பு:

2-3வது ஏடுகளில் விநாயகர் தோத்திரமும் அர்ச்சினையும் உள்ளன. ஒரு வெற்றேடு இடையில் காணப்படுகின்றது.

வரிசை எண்: 1361 சுவடி எண்: 878 (f)

## ஔவையார் சரித்திரம்

ஏடுகள்: 9. ஏட்டின் நிலைமை: பூச்சியரித்துளது. பக்கத்திற்கு: 6-7 வரிகள். அளவு: 17 × 2.5 செ. மீ.

எழுத்து: தமிழ். கி.எண்ணிக்கை: 200. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் உள்ளது.

தொடக்கம்:

"பாண்டியர் அரசாட்சி செய்துகொண்டுவந்த மதுரை மாநகரில் கடைச்சங்கமிருந்த காலத்தில் ஒளவையார் சோழ தேசத்தில் உரையூரென்னும் ஓர் சாவடியில் ஆதியென்பவளுக்கும் பகவனென்பவருக்கும் முதற்புத்திரியாக பிறந்து.

முடிவு:

"மதுர மொழிநல்லுமையாள் புதல்வன் மலர்ப் பதத்தை
முதிர நினையவெல் லார்க்குமுண் டோமுகில் போன்முழங்கி
அதிர நடந்திடும் யானையுந்தேரு மதன்பின்வருங்
குதிரையுங் காதங் குலமன்னனே."

குறிப்பு:

ஒளவையின் வரலாறு வெவ்வேறுகப் பேசப்படுகின்றது. அவற்றுள் இது ஒன்று. இதில் பிழைகள் மலிந்து காணப்படுகின்றன.

---

வரிசை எண்: 1362 சுவடி எண்: 878 (g)

## வாக்குண்டாம்—உரையுடன்

ஏடுகள்: 42. ஏட்டின் நிலைமை: சிறிது பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு: 6-7 வரிகள். அளவு: 17 × 2.5 செ.மீ. எழுத்து: தமிழ். கி.எண்ணிக்கை: 800. ஆசிரியர்: ஒளவையார். முழுமை: முழுவதும் உளது.

குறிப்பு:

இது அச்சாகியுளது. பிழைகள் அதிகம்.

---

வரிசை எண்: 1363 சுவடி எண்: 878 (h)

## விடுகதை

ஏடுகள்: 7. ஏட்டின் நிலைமை: பூச்சியரித்தும், முறிந்தும் உளது. பக்கத்திற்கு: 6 வரிகள்.

அளவு : 17 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை ; முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"சித்திரமாய் முடிப்பாய் தாசி யல்ல
செந்தூரப் பொட்டிடுவார் பார்ப்பா ரல்லர்
பத்திரத்தி லேநடப்பாய் சூலி யல்ல
பாங்கான கூந்தலில்லா கொண்டைக் காரி
யெத்தலத்தி லெங்குமுண்டு விலையு மாகும்
இரும்படைக்கி முளிங்கிருவாள் இப்போ ரல்லோ
புத்திமதி தான்கொடுப்பார் பேச மாட்டார்
பூதலத்தி லிக்கதையைப் புகலு வீரே."

முடிவு :

தோட்டத்துக்.........அரிசிபடி.........கிறு.........
புணுகுபூனை திண்ணமத்துட்டு. கண்ணம்மயிற்
கோதி ரெண்டுக்கு அரிசியும்...............
.........கறணம...........கு...............

குறிப்பு :

விடுகவி என வேறொரு பெயரும் இதற்குண்டு. அறிவுக்கு வேலை தரும் விளையாட்டாகுமிது.

வரிசை எண் : 1364 சுவடி எண் : 878(i)

## சீதாச்சக்கரம்

ஏடுகள் : 16. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும், முறிந்துமுளது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு: 17 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 200. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"செந்தமிளதனுலிசன் சீதைநூல்...............
...........விந்தையால் நிலமெளுகி.........நெ.........
...........ப...........வத்து
கந்தநார்முன்பு சென்ற கணபதியடி வணங்கி வருவதை வகுத்துச்சொல்வாம்.

முடிவு :

......அம்மன், வயிரவர், கந்தசுவாமி பெண்தேவதை யிந்த தெய்வஞ் செய்ய நன்று. மனையுண்டு. பயிர்வாடாது செட்டு லாபமுண்டு. அவிள்தங்கொள்ள நன்று. வளக்கு வெல்லும். நினைத்த காரியம் கைகூடும் உத்தமம்.

கணபதிமுன்னிற்கச் சிவமயம்.
சீதாசக்கரம் முற்றும்.
(சக்கரம் இருக்கின்றது)

குறிப்பு :

இது சோதிட நூல்களுள் ஒன்று. 30 செய்யுட்கள் உரையுடனுள்ளன. பின்னர் 2 ஏடுகள் சில்லரைப்பாடல்கள் எழுதப்பெற்றவை.

---

வரிசை எண் : **1365** சுவடி எண் : **886 (a)**

## மயனூல்

ஏடுகள் : 53. ஏட்டின் நிலைமை : சிறுபூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 7-8 வரிகள். அளவு: 25 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1300. ஆசிரியர் : பெருமாள் மைந்தன் பிச்சன். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"உத்ததோர் வள்ளி நாடன்
உயர்தரு மாந்தை வேந்தன்
கத்ததோர் சில்ப நூலைக்
கலைகளும் பலவுங் காணப்

பெத்ததோர் பெருமாள் மைந்தன்
பிச்சன்சொற் தமிழைப் பேசு
சுத்ததோ' ரறிவிப் பார்தன்
கழலிணை தலைமேற் கொள்வாம்.

முடிவு :

" ஊனமில் மனையில் வந்து
முழந்தனை யளந்து கொண்டு
மானிடர் தமக்கு வாசல்
மையத்தி லிடத்தே யாகும்.''

குறிப்பு :-

இது மனையடி சாத்திரமாகும். வீடுகட்டும் முறைகள் முதலியன கூறப்பட்டுள்ளன. இதில் இராசி நட்சத்திரசக்கரம் காணப்படுகின்றது. சிறந்த நூலாகக் காணப்படுகின்றது. தொடக்கத்தில் 3 சோதிட ஏடுகள் உள்ளன.

---

வரிசை எண் : 1366 சுவடி எண் : 886(b)

## சில்பசார சுருக்கச் சிந்தாமணி சாத்திரம்

ஏடுகள் : 27. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 7-8 வரிகள். அளவு : 25 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

" பூமேவு பற்பல சீவரு மின்ம்பம் பொருந்துதற்கு
பாமேவு சிறச்சிற்ப சாற சுருக்கம் பகர்ந்திடவே
நாமேவு விக்கினமே யிதாதினிய நலம்தருமால்
மாமேவு மூல விஞயக மூர்த்தி மலரடியே.''

சில்பசார சுருக்க சிந்தாமணி சாஸ்த்திரம்.

நூல்

பொத்ததுகை

“ மலர்தரு கெர்ப்பம்நல் லாயம்வி யந்திதி வாரமுடு
நிலவுறு யோனி யிலக்கின மங்கிச நேர்வமிசம்
பொலிகண நேத்திரஞ் சூத்திரம் யோகம் புகல்வயசு
தலமகிழ் தாரையோ டீரெண் பொருத்தமுஞ்
சாற்றுவனே.”

முடிவு :

“ வரும்பெருஞ் செல்வம் கல்வி மென்மேலும்
வளர்தரு மனைவி மக்களும்சீர்
கருடல பலவாந் தானிய முதலாய்ச்
சார்த்திடு மெண்வகைச் செல்வம்
பெரும்புகழ் மேன்மை சோபனம் சுபங்கள்
பெருகிய வாயுளும் வளரும்
அரும்பிள நகையாய் சிற்பநூற் புலவோர்
ஆய்ந்துறை திருத்தும் பலனிதுவே.”

குறிப்பு :

இதுவும் மனையடி சாத்திரமாகும். மிகச்சிறந்த நூலாகக் காணப் படுகின்றது. எளிய நடையில் கூறப்பட்டுளது.

---

வரிசை எண். 1367 சுவடி எண் : 886 (c)

## மயனூர் நூல்

ஏடுகள் : 40. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யரித்துளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 25 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 600. ஆசிரியர் : மயன். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

குளக்குத்தல்

“ செய்திடு மனைக்கி முன்னே
தென்ம்பிறம் குளமே யாகில்

துய்யநீற் நன்மை செய்யும்
சொல்லிய பின்னே யாகில்
வெய்யதோற் வியாதி பீடை
வேதினை செய்யு மென்று
பொய்யல்ல மயனுற் சொன்னுற்
பூங்கமழ் கோதை மாதே."

முடிவு :

## ஆதாயபலன்

"சொன்னே நெங்கள் விரைய பலங்களும்
சொல்லும் விருத்தியும் சன்பத்தும் ஆயுசும்
பொன்னினும் புத்தர சன்பத்தும் மேஜெயம்
பொருளும் தானியமந் தானே மிகுந்திடும்
யென்றும் நல்ல கொறவில்லா சன்பத்தும்
யெயிதிடும் மெலெட் சுமிகி டாக்ஷயமும்
வண்ண நங்கள் விமரேற் பாதத்தை
வாள்த்தி றஞ்சியே யோனியும் பார்த்திடே."

குறிப்பு :

இதுவும் மனை சாத்திரமாகும். சிறந்த நூலாகவே காணப்படுகின்றது, எல்லாம் ஒரே நூலாக இருக்கலாம் என்றும் கருத இடமிருக்கின்றது.

வரிசை எண் : **1368** சுவடி எண் : **796**

## மனையலங்காரம்

ஏடுகள் : *15.* ஏட்டின் நிலைமை: பூச்சியரித்துஉளது. பக்கத்திற்கு : *4* வரிகள். அளவு : *28 × 2*செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *100.* ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" சத்தியுடன் சிவன்கரந்தாள் சகலமனை யலங்காரம்
யித்தலத்தில் சண்முகனு ரெனக்குறைத்தார்-நித்தநித்தம்

பத்திபத்தி வித்தைதரு பால்முர்தம் பசியாஞ்
சித்திஒத்தைக் கொம்பன்சிர் பாதங் காப்பாமே. "

முடிவு :

தங்குமெய்ப் பொருளும் தரணியை ஆளுவான்
தானியத்தில் தினமும் ஆள்வானும்
மங்கையும் மனமும் மாகமுடி தரித்து
மைந்தருண் டாகி வாழ்வான்." -உஅ

குறிப்பு :

இந்நூல் வீடு கட்டுபவர்கள் பார்க்கவேண்டிய பொருத்தங்களையும், அவற்றின் பலன்களையும் கூறுவது. இந்தப்பிரதி முழுவதும் இல்லை. 28 செய்யுட்களே உள்ளன. இறுதியில் கைரேகை சாத்திரம் எழுதிய ஏடு ஒன்று கோர்க்கப்பட்டுள்ளது.

---

வரிசை எண் : **1369** சுவடி எண் : **887**

## மூர்த்தி தியானம்

ஏடுகள் : 137. ஏட்டின் நிலை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 7—8 வரிகள். அளவு ; 29 × 3 செ.மி. எழுத்து : கிரந்தம். கி. எண்ணிக்கை : 3000. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" ரக்தவர்ண யெளவநம்ச
சிர்ஷம் சவர்த்துளம்
கர்ணஸ்வர்ண குண்டலம்ச
ஹஸ்தயுக்ம பங்கஜம்.

முடிவு

ஆதலால் அவர்களுடைய விசாரத்தினாலே பிராணிகள் மோக்ஷத்தைக் கொடுப்பார்களென்று சொல்லிக் கிரியைகளைச் செய்து முடிப்பார்கள் ! யென்றவாறு. சுபமஸ்து. மாநோபகர்ணம் முற்றியது.

தேவி சகாயம். சுபமஸ்து.

காலம் : (Colophon)

இலுப்பைக்குடியைச் சேர்ந்த காட்டுக்குடியிருப்பு வையாபுரி ஆசாரி குமாரன் வடமலை ஆசாரி புத்தகம்.

சுபமஸ்து.

குறிப்பு :

இது சிற்ப நூலைச்சார்ந்தது. இதில் மூர்த்திகளின் இலக்கணங் களும் அவைகளை வணங்கும் முறைகளும் கூறப்பட்டுள்ளன. இந்நூல் முழுவதும் கிரந்த எழுத்துக்களால் ஆனது. தொடக்கமும், முடிவும் தமிழில் மொழிபெயர்த்து எழுதப்பட்டுள்ளது. மூர்த்திகள் அமைக் கும் முறையும் கூறப்பட்டுள்ளது.

## இதில் காணப்படும் தியானங்கள்

1. நவக்கிரக தியானம்
2. பத்திரகாளி தியானம்
3. சரசுவதி தியானம்
4. வீரன் தியானம்
5. கருப்பண்ணசுவாமி தியானம்
6. வர்ழ்முனி தியானம்
7. காட்டேரி தியானம்
8. மகாரதத் தியானம்
9. முஷ்டி பைரவத்தியானம்
10. முஷ்டி லட்சுமி தியானம்
11. சனக, சனந்தன, சநாதன, சனத்குமாரத் தியானம்
12. யோகசக்தி தியானம்
13. போக சக்தி தியானம்
14. ஹரசக்தி தியானம்

மற்றும்பல மூர்த்திகளின் தியானங்கள் காணப்படு கின்றன.

காமநூல்

வரிசை எண் : 1370 சுவடி எண் : 753

## சம்பராரிப் புராணம்

ஏடுகள் : 42. ஏட்டின் நிலைமை : மிகமிகச் சிதிலமாக உள்ளது. பக்கத்திற்கு : 6-9 வரிகள். அளவு : 21 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 500. ஆசிரியர் : வரதுங்கபாண்டியன். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

முதலாவது சாதிநிலை

"பதுமினி சித்தினி பகர்ந்த..........னும் நால்வருள்
முதல்வழுத்தமி மற்றை மூவரிலை திகமற்றவர்..............
விற்ருள்வரே." -ரு

முடிவு :

.........டத்திட்தெய்த்து வனிதை மார் நலந்துய்த்திடும்
முதனூர் சோதிவாள்குறதைத் திருங்கு தெந்த
.........டாமபொரா.........வாலிங்களப்
புணர்ப்பி.........னவைகுவார். -சு

குறிப்பு :

இது மதனநூல். வடமொழி நூலின் மொழிபெயர்ப்பாகும். கொக்கோகம் என்றும் இதற்குப் பெயர் உண்டு. இதில் கூறப்பட்டு உள்ள பாடல்கள் அனைத்தும் ஆடவர் பெண்டிர்களின் சாதி, பருவம், குணம் முதலியவை பற்றியேயாகும். தமிழில் நைஷதம் பாடிய அதிவீரராம பாண்டியரின் சகோதரரான வரதுங்கபாண்டியர் என்பவரே இதனைத் தமிழில் மொழி பெயர்த்தவராவர். இவரது காலம் 16-ஆம் நூற்றூண்டாகும்.

வரிசை எண் : 1371 சுவடி எண் : 842

## மதனநூல்

ஏடுகள் : 32. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துள்ளது. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 22×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 400. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

வேழமுகத்து விநாயகனைத்தொ(ழ—வாழ்வுமிகுத்)துவரும்
அத்திமுகத்துற்றம... ... ... ... ...
... ... ... ... ... தமே."

மதநூல்த்துவக்கமறியும்படி

வடமொழி மதனூல் தன்னி... ... வகுத்துச் சொன்ன
தடமுடன் வ ... ...ானு கதுகரா சாரியாரை ய......
...முடன் முனிவர் பாதம் இருகையால்த் தொழுது போற்றி
முடிவுடை மதன னூலுந் தமிழினால் வகுக்க லுற்றாம்."

முடிவு :

யிசனாள்......அழற்கும் கதுப்புமூலையும் நஞ்சு யருனாள் பெருவிரல் தோள் அழுத்தம். கையினாவியிநஞ்சு யிப்படி யிடு-க்கு இலக்கணம் பாத்துக்கொள்ளவும்.

காலம் : (Colophon)

ஆவணி மாதம், புரட்டாசி மாதம் ௩ந்தேதி பூச நட்செத்திரமு மத்துவம் எழுதி நிறைந்தது. முல்லைசக்தி மகமாயி துணை. குருபாதமே கெதி. கணபதி செயலுண்டாகும். காமாட்சி அம்மன் துணை. மீனங்குளத்தம்மந் துணை. காச்சங்குரிச்சி பெருமாள் துணை.

குறிப்பு :

இது மதநூல் என்றும் குறிப்பிடப்பட்டுளது. சோதிட நூல் வகையைச் சார்ந்தது. எளியநடை. பிழையதிகம்.

## மருத்துவம்

வரிசை எண் : 1372 சுவடி எண் : 884

### தட்சிணாமூர்த்தி 6 காண்டத்தில்

ஏடுகள் : 50. ஏட்டின் நிலைமை : மிகவும் பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 8—9 வரிகள். அளவு : 17 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 800. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

" அவனியிலெ யுத்திபுத்திக் கருவி ஞலே
அனேகவிதம் பாத்தெல்லாம் செய்தா ரப்பா
கவுணிகட்கு விதிவருமோ யல்லா லில்லை
கைய்கண்ட சித்தியடா மருது வித்தை

**முடிவு :**

செப்பவெ விரியனுக்கேழுனுள் கொள்ளவும். செய மாகும் பெயுமேற்...வுலகினில் ஆதிபிறமனுஷர்களுக்குயிது ஆமென்று அறிவுள்ளோர றிவாரே ".

**குறிப்பு :-**

இந்நூல் வைத்தியப் பகுதியைச் சாரும். ஆறு காண்டத்தில் ஒரு பகுதியாகும். விஷக்கடியினைக் குணப்படுத்தும்முறை கூறப்பட்டு உள்ளது. இந்நூலின் இறுதியில் இரண்டு சில்லரை ஏடுகள் கோக்கப்பட்டுள்ளன.

## மந்திரங்கள்

வரிசை எண் : 1373 சுவடி எண் : 853

### அகத்தியர் மந்திரம்

ஏடுகள் : 18. ஏட்டின் நிலைமை : முழுதும் பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 28 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300. ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

பத்தியுடன் பார்வதியை பூசை செய்து
பரிவான குருமுனிதான் பாரி லோற்கு
சத்தியமாம் முறைப்பாடு யேவல் பில்லி
சைத்தானும் தெய்வகுத்தம் சாரும் துன்பம்

முடிவு :

வரையோட்டுக் குள்ளிருப்போர் உனக்கீ டாமோ
மாந்திரீகம் உனக்குடுமை மகிழ்வா ரப்பா
முரையான அன்பதுடன் முரைதப் பாமல்
உரையான உலகத்தோற் துயரம் னீங்கி- -ருய
உகந்துவாளே.
அகத்தீஸ்பரசுவாமி துணை.

குறிப்பு :

இது மாந்திரீக நூல்களுள் ஒன்று. சிறந்ததாகக் காணப்படுகின்றது. ஐம்பது செய்யுட்களே இருக்கின்றன. பிழையதிகம். சக்கரங்களும் காணப்படுகின்றன.

வரிசை எண் : 1374 சுவடி எண் : 897

## கெருடகவசம்

ஏடுகள் : 23. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 8-9 வரிகள். அளவு : 26.5 × 3.5 செ.மீ. எழுத்து : தமிழ். மொழி : வடமொழி. கி. எண்ணிக்கை : 700. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுதுமுளது.

தொடக்கம் :

பாதாழ பரிச பாதாக்கிரம பெற்மாண்டங் கதமெள்ளலி நம
நீலேந்து நாசிகா வத்திரம் திரியக்ஷம சாருகுண்டலம்

முடிவு :

அல்லி அல்லி பில்லி பில்லி புச்சந்தி புச்சந்தி
குகய குகய குருபிரசாதம் ஹம் ஹம்
பட்டுச்சுவாகா.

**குறிப்பு :**

இது மாந்திரீக நூலாகும். கருடமந்திரம் உச்சரிப்பின் பாம்பு பயம் இல்லை. இது வடமொழி சுலோகங்கள், தமிழ் எழுத்துக்களால் எழுதப்பெற்றது. இதில் கருடோபநிஷத், கெருட பஞ்சாட்சரம், கெருட அஷ்டோத்தரம், சக்தி பஞ்சாட்சரம், மகாகணபதி மந்திரம், அமிர்த பஞ்சாட்சரம் முதலியன உள்ளன.

---

வரிசை எண். **1375** சுவடி எண் : **826 (a)**

## சக்கரவிதி உரை

ஏடுகள் : 15. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 27 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

திரித்தொரு வட்டத்தினுள்ளே யொரு வட்டஞ் சேர்த்தி என்றது
ஒரு வட்ட மிட்டதற்குள்ளேயும் ஒரு வட்டமிட்டு அதிற் சரித்திடு வாயுவின் விசமுஞ் சத்தியுந் தானெழுதி என்றது உள் வட்டத்துக்குள்ளே வாயு விசம்-ய. என்றெழுதி சத்தி வீசம் ஹ்ரீம் என்ற யகரத்தின் மேலே எழுதுவது.

**முடிவு :**

சேவிப்பதற்குமுன் தேவியை யுற்று வாவத்தாற் பாவையை யிறுதையக் கமலத்தே யாவற்குந் தோன்ரு வியந்திர ராசன்றனை நீ வைத்துச் சேவி. பின்னினைந்ததெல் லாந்தரும். " ஸ்ரீம்ஹ்ரீம். ஸ்ரீம் புவனாதிபதியே நம" என்று செபிக்கவும். திருச்சிற்றம்பலம்.

**பஞ்சபாணமாவன :—**

ஹ்ரீம் சந்தீவனாஸ்தராய நம :
ஹ்ரீம் மோகனாஸ்த்ராய நம :

ஹ்ரீம் சந்தராவஞஸ்த்ராய நம:
ஹ்ரீம் சோஷஞஸ்த்ராய நம:
ஹ்ரீம் உன்மதனுஸ்த்ராய நம:

குறிப்பு:

தங்கம், வெள்ளி, செம்பு, ஈயம் முதலான தகடுகளில் மந்திராட்சரம், பீஜாட்சரம் எனப்படும் ஒலி எழுத்துக்களை எழுதிப்பூசிப்பதும் அதனை ஆலய விக்கிரகங்களின் அடியில் வைத்துப் பிரதிட்டை செய்வதும் வழக்கம். இப்படிப்பட்ட வகையைச் சார்ந்ததாகும், இந்நூல். பிழைகள் அதிகம்.

---

வரிசை எண்: **1376** சுவடி எண்: **826 (b)**

## மந்திரவிதி

ஏடுகள்: 2½. ஏட்டின் நிலைமை: சிறிது பூச்சி அரித்துள்ளது. பக்கத்திற்கு: 5 வரிகள். அளவு: 27 × 3 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 50. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் உள்ளது.

தொடக்கம்:

“ இருக்கு முதலவைக் கெட்டா வுருவொன் றிதுதனிலே
குருக்குங் குடிகலையும் நாதமும் விந்துவுங் கூறும்விந்துத்
தரிக்குங் கலைகள் புவனங் களத்துவஞ் சாற்றுவதே
துரைக்கும் பொழுது புவனை வடிவமென் ரேதுவரே” -க

முடிவு

“ இரவியி லத்த மிரவியிற் சத்தமி யெய்தியநா
ளொருமுறை மூவா யிரமுரு வோதி யுலகந்தந்த
தெரியிழை பாதங் குறித்திடிற் குட்டந் தெறுசுரம்போய்
மருவிய குன்ம மிவைபோம் பிணிமுற்று மாய்ந்திடுமே ”

மந்திரவிதி முற்றும்.

குறிப்பு :

இது மந்திர சாத்திரத்தினைக் கூறும் நூலேயாயினும் நோய் நீக்கம் முதலானவைகளைப் பற்றிக்கூறும் மருத்துவ நூலாகவும் விளங்குகின்றது. சிறந்த நூலாகக் காணப்படுகிறது. 8 செய்யுட்களே உள்ளன.

---

வரிசை எண் : **1377** சுவடி எண் : **826 (c)**

## சிவாட்சணி, எட்சணி.

ஏடுகள் : $1\frac{1}{2}$. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துள்ளது. பக்கத்திற்கு : 5 வரிகள். அளவு : 27 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 20. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

ஓம், ஐம், ஹ்ரீம், க்லீம், சாமுண்டாயை, ஸ்வாகா. இது செபித்துப் படுத்துக்கொள்ளச் சொற்பனத்திலே சுபாசுபங்களைச் சொல்லும். ஓமத்திலேயும், தர்ப்பனத்தி லேயும், அக்கினி காரியத்திலேயும் சுவாகாந்தமாக உட்சரிக் கவும். யாதொரு மூல மந்திரங்களுக்கும் இப்படியே உச்சரிக்கவும்.

முடிவு :

பின்பு இராத்திரி சுசியாயிருந்து கொண்டு செபிக்க அர்த்தராத்திரியிலே தேவிவந்து இருபத்துஅஞ்சு வராகன் கொடுப்பள். இப்படி நித்தியமுஞ் செய்ய நித்தியமுங் கொடுப்பள்.

குறிப்பு :

இது மாந்திரீக நூல். பிழைகள் அதிகமாயினும் மாந்திரீகர் களுக்கு நல்ல நூலாக விளங்குகின்றது.

வரிசை எண் : 1378 சுவடி எண் : 826(d)

## நவக்கிரக விஞ்சை (சக்கரத்துடன்)

ஏடுகள் : 5. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துள்ளது. பக்கத்திற்கு : 3-5 வரிகள். அளவு : 27 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 60. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

### சூரியன்விஞ்சை

அம்றீயும் யென்று லட்சமுருச் சேவிக்க சூரிய தோஷந் தீரும். யிதுக்குப் பூசை யீசுரன் பூசைபோலே செய்யவும்.

யிதுக்குச் சக்கரம் இருக்கிறது.

சூரிய பூசைக்கிப் பால்பழம். மற்றபூசையெல்லாம் மது மாமிசம் வைத்துப் பூசை செய்யவும்.

முடிவு :

அங்கிச நசி யென்று லட்சமுருச் செவிக்க சத்துருவைக் கொல்லும். மோட்சத்தைக்கொடுக்கும். கேது தோசந் தீரும். யிதுக்குப்பூசை தேவி ஆருதனை போலே செய்யவும்.

யிதுக்குச் சக்கரம் இருக்கிறது.

குறிப்பு :

சூரியன் முதலான ஒன்பது கோள்களையும் பூசிக்கும் மந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றை முறைப்படி சொல்லிப் பூசித்தால் இன்னின்ன பலன்கள் கிடைக்குமென்பது கூறப்பட்டுள்ளது.

---

வரிசை எண் : 1379 சுவடி எண் : 824(a)

## சருவபட்சணி

ஏடுகள் : 11. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 20.5 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 120.

ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

நூல்

"சீர்மேவும் வாலை யபிராமி சூலி
திரிபுரை சங்காரி கௌமாரி வாமி
தார்மேவு மயிடசங் காரி துற்கை
சாமுண்டி கங்காழி தந்த மைந்தன்

முடிவு :

அருளுகின்ற வித்தைகள்தா னுருக்கானுல்
அரண்மாலைப் பணிந்துதன்மை யறிவுள்ளோர்க்குக்
குருவிசுவா சமுநன்றி மறவாதாற்குங்
குணமிகுந்த பெரியோற்குங் கூறலாகும்
மருளுடைய மனத்துநெஞ்சர் வஞ்சலோபர்
மாதர்மே லாசைவைத்து மயங்கினோர்கள்
பொருளிலிச்சை சித்துயிர்வதைகள் செய்நெஞ்சோர்க்கும்
பொன்கோடி யீய்ந்தாலும் புகலொண்ணுதே." -உக

சண்முககுருபரசரணம்.

(சக்கரம் இருக்கிறது)

குறிப்பு :

அகத்தியருக்கு ஆறுமுகவேள் உபதேசித்த மாந்திரீக நூல். மாந்திரீக நூல்களுள் இது சிறந்த நூலாகக் காணப்படுகிறது. 21 செய்யுட்களைக் கொண்டது.

வரிசை எண் : 1380 சுவடி எண் : 824(b)

## பேயோட்ட மந்திரம் (சக்கரத்துடன்)

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 5-6 வரிகள். அளவு : 20.5×3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 30. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

ஓம் சரவணபவா எந்தனுட திரிசூலி என்றும் அஞ்செழுத்தை தியானித்து திருமைலே துட்ட தேவாதி கழல்லாம் மிரண்டோட விதட்டி அதட்டி விலக்கணி விண்டனுக்கு கச்சி பொரிந்து கலையக் காமகந்து கசமுனி மொச்சமுனும் சொல்லும் சுக்குல சுரோணிதம்.

முடிவு :

கோளிமுட்டை, நீர்க்குளி, மனகலப்பைக்கிழங்கு, மஞ்சள் சுண்ணும்பு.

(இதன்பின் சக்கரங்கள் உள்ளன.)

குறிப்பு :

இதுவும் மாந்திரீக நூல்களுள் ஒன்று. இது சக்கரங்களுடன் இருக்கிறது.

வரிசை எண் : 1381 சுவடி எண் : 933

## ஜாலத்திரட்டு

ஏடுகள் : 91. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 19×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி· எண்ணிக்கை : 1000. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

ஓம் நமசிவய நம. ஈங-ஈங-நமசிவய நம. நீலமேகம் போலத் திருமேனியும் வீர உத்தண்ட முகமும் சாத்தியருட் டரீக்மும் ஆகுமாலையும், ஒரு கையில் பிடித்த வீரவாளும், ஒரு கையில் பிடித்த வீரத்தடியும், காலிலே போட்ட காடு தாங்கி வில்லைச் செருப்பு மாகா குரட்டு கோலுங் கொண்டு வருக கருப்பண்ணே.

முடிவு :

தென்திசையாடிய தென்மொழியாளே நெஞ்சுலே வஞ்சமற்றவளே. மகாகற்பிகதிரியே. கொண்ட முத்திக்கு

நீய கொண்ட துவாய் ஒழிய வேறு ஒருவர் மாத்திர மத்தறி காவ அவ்வுள் ஓம் மவ்வுள் ஓம் போகவசியம். தேகவசியம்.

குறிப்பு :

மந்திர சாத்திரத்தைச் சார்ந்ததாகுமிது. இந்நூலில் பலவகை மந்திர, ஜால, வசிய ஏடுகள் காணப்படுகின்றன. இறுதியில் சக்கரங்கள் மட்டும் எழுதிய ஏடுகள் காணப்படுகின்றன.

---

வரிசை எண் : **1382** சுவடி எண் : **851**

## சிதம்பர அட்சரகர்மம்

ஏடுகள் : *13.* ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : *8-9* வரிகள். அளவு : *27.5 × 3.5* செ. மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : *400.* ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"காணப்பா நகாரமுதலஞ் செளுத்தை மாரில்
கைக்கண்ட தம்பனமாம் காணுங் காணும்
பூணப்பா மகாரமுதலஞ் செளுத்தை மாரில்
புகளான மோகனமாம் பூலோ கத்தில்
தோணப்பா சிகாரமுதலஞ் செளுத்தை மாரில்
சொலப்பெரிய மாரணமாஞ் சொல்லக் கேளு
பூணப்பா வகாரமுதலஞ் செளுத்தை மாரி
யுச்சாட னக்கிரிகை யோடும் பாரே."

முடிவு :

மனவேக பஞ்சாட்சரம். நினைத்தவிடத்திலே நிற்கும் கிலியும் அங் அங்சிவாய. ஓம்பட்டு நம இந்திரனை அளைப்பிக்கலாம். பிறங் பிறங் சிவாய ஓம். நமசுவாக. செத்தவரை எழுப்பலாம்.

குறிப்பு :-

நமசிவய என்ற ஐந்தெழுத்தின் மகிமை உரைப்பது இந்த நூல். மாந்திரீக சாத்திரங்களுள் ஒன்ருகுமிது. இந்த நூலில் இறுதியில் இரண்டு வைத்திய ஏடுகள் கோக்கப்பட்டுள்ளன.

---

வரிசை எண் : 1383 சுவடி எண் : 861

## சில்லரை மந்திரங்கள் (சக்கரத்துடன்)

ஏடுகள் : 23. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்தது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 19×2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"கள்ள பிள்ளை கணபதியே
வெள்ளி(க்) கொ(ம்பு) விஞயகனே
பூமி யானை பூசக்கிரு தன்ஞணை
சிங்கார மான சின(ம்) வந்து

முடிவு :

அங்கிரிஷி சென்னிமலை யாளைய் மறுங்கன்
சென்னிமலை பரசமயம் பொடிபத்திக்கு கவலு
நஞ்சுண்டா லுரம்பொடி யாக்கி."

குறிப்பு :

இது மந்திர நூல்களுள் ஒன்று. இந்நூலில் செவிமந்திரம், திருஷ்டி மந்திரம், மற்றும் பலவகையான மந்திரங்கள் கூறப் பட்டுள்ளன.

---

வரிசை எண் : 1384 சுவடி எண் : 885

## சுப்பிரமணியர் விஞ்சை

ஏடுகள் : 7. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் மிகவும் சிதைந்துள்ளன. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு :

22 × 3.5 செ.மீ. எழுத்து: தமிழ். கி.எண்ணிக்கை: 400. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

இந்நூல் No. 881 சுவடியைப் போன்றது.

வரிசை எண்: 1385 சுவடி எண்: 881

## சுப்பிரமணியர் விஞ்சை - 21

ஏடுகள்: 10. ஏட்டின் நிலை; சிதைந்தும் முறிந்தும் உள்ளது. பக்கத்திற்கு: 4-5 வரிகள். அளவு: 36 × 3 செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 150. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

குறிப்பு:

இது 824 (a) சுவடி சருவ பட்சிணி போன்றது. 876-ம் சுவடியும் ஒக்கும். இறுதியில் சில்லரை மந்திரங்கள் எழுதப்பட்ட 5 ஏடுகள் காணப்படுகின்றன.

வரிசை எண்: 1386 சுவடி எண்: 872(a)

## தலைசுரிஷ்டி

ஏடுகள்: 3. ஏட்டின் நிலைமை: நன்றாக உள்ளது. பக்கத்திற்கு: 7—8 வரிகள். அளவு: 14 × 2.5 செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 40. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம்:

“ பெரிய கிலுப்பைக்கி ஆதித்தவாரம்ங் காப்புக்கட்டி
மந்திரம் சடாய தும்தும்—யென பிடிங்கிப் பொடி
பண்ணி மிருகங்களுக்கு காத்து வாக்கில்
தூத்தவும். மிருகங்களோடிப்போகும்.

முடிவு :

ஓம் வச்சிர சுரூபி சூரி மகாவீரி சுவாகா வென்று பிடிங்கி வாயிலடக்கிக்கொண்டு கல்லைக் கடிக்க கல்லு ஞெரிங்கிப்போகும்.

குறிப்பு :

இது மந்திர சாத்திரங்களுள் ஒன்று. வசியம் செய்தல் முதலானவை இதில் கூறப்பட்டுள்ளது. இதன் பின்னர் 'கண்ணுக்கு செகப்புக்கு' என்ற வைத்திய ஏடு ஒன்று காணப்படுகின்றது. 5, 6 எண்ணுள்ள ஏடுகளில் ஒன்றும் எழுதப்படவில்லை.

---

வரிசை எண் : **1387** சுவடி எண் : **872(b)**

## மந்திரங்கள் வைத்தியம்

ஏடுகள் : *31.* ஏட்டின் நிலைமை : நன்றாக உளது. பக்கத்திற்கு : 7—8 வரிகள். அளவு : 14 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" ஏதேவியார் செங்களிநீரை ஓம் சி லட்சுமிதேவி ராச வசீகர குரு குரு மூலி யென்று யிந்த மந்திரஞ்சொல்லி வேரெ ருமல் வெட்டிப் பிடிங்கி தாமரைநூலில்த் திரி திரிச்சு கமலைப்பசு நெய்யில் மை பற்றவைத்து திலதமிட ராச வசீகரம்.

முடிவு :

ஆங் உங் எங் ஓங் கிலியும் அய்யுங் கிறியும் பாகரு முருங் யநமசிவா ராரா மணித்தல்லிச் சகாதேவி ராரா நமோ தெண்டாயுதபாணி துணை.

குறிப்பு :

இது மாந்திரீக நூலாகும். வசியம் செய்யும் முறைமை கூறப் பட்டுள்ளதோடு வைத்தியமும் பேசப்படுகின்றது. மோகனம்,

யிளந்தலை வாரிகுரு தொக்கும்
ராசரால் குரூே(த) முண்டாஞ்
சலம்படு தலைனேய்ப் பித்தம்
வாயுவாய்க் களருந் தானே."

**குறிப்பு :**

இதுவும் சோதிட நூல்களுள் ஒன்று. திசைகளின் பலனைக் கூறுவது.

---

வரிசை எண் : **1436** சுவடி எண் : **850(c)**

## நட்சத்திர சூடாமணி

ஏடுகள் : 33. ஏட்டின் நிலைமை : முழுதும் பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 11-12 வரிகள். அளவு : 33.5 × 4 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை: 1000. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

நட்செத்திர சூடாமணி நவக்கிரக துதியேநம.
நாறம்பூ அய்யா பாதமே துணை.

" எண்ணுங் கருமங்க ளெல்லா முடித்தெனக்கு
நண்ணுங் கலையனைத்து நல்குவாய்-கண்ணுதலின்
முண்டத்தா னண்டத்தான் மூலத்தான் ஆலஞ்சேர்
கண்டத்தான் பெற்ற களிறு."

**முடிவு :**

முதல்க்கால் நல்லது. 2-ம்கால், மாமனுக்குத் தோசம். 3-ம்கால் பிதாவுக்குத் தோசம். 4-ம்கால் குணம். இதற்கும் மயேசுரர் பூசை பிராமணர் போசனம் செய்விப்பது.

ரேவதி நாள் முற்றும்.

**குறிப்பு :**

சோதிட நூல்களில் ஒன்று, நட்சத்திர பலனைக் கூறுவது.

வரிசை எண் : **1437** சுவடி எண் : **850 (d)**

## சாதக பாரிசாதம்

ஏடுகள் : *44.* ஏட்டின் நிலைமை : முழுதும் பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : *11-12* வரிகள். அளவு: *33.5 × 4* செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : *1000.* ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

" சாதக பாரி சாதந் தமிளிலு லுரைக்க நாயேன்
பூதல மெங்கும் வாழ்த்திப் புகழும்நா மகளைப் போற்றி
ஆதபன் முதற்கோ ளாக ஒன்பதும் அடவாய்ச் சொல்ல
ஏதமில் முருகன் முன்னெ னியற்கண பதிகாப் பாமே."

**முடிவு :**

யிராறு சாதகற்கு மிரணிய னிருந்திட லக்கனத்தி
விருந்திட வேளில்ச் சுங்கன்
தீரணமாய்க் கன்னி வீட்டில்ச் செய்புதன்
சென்ம லெக்கினந் தரணியில்
வீராகயியல தானுமே ஷாங்கிஷ மரணமாஞ்
சாதகற்கு வாய்த்திடும் பரம மோட்சம்

பன்னிரண்டாம் பாவகப் பலன் முகிந்தது முற்றும்.
கணபதியே நம. நன்ருக. சிவன்செயல். சரசுப்தி கிடாட்ச
முண்டாக வேண்டியது.

**குறிப்பு :**

பாவகப்பலன் என்று கூறப்படும், சோதிட நூலாகுமிது. லக்கின பாவகம் என்று முதலில் எழுதப்பட்டுளது. பிழைகள் மிகுந்து காணப்படுகின்றன. செய்யுட்களும் நல்ல அமைப்பிலில்லை.

வரிசை எண் : **1438** சுவடி எண் : **850(e)**

## இடைக்காட்டார் சாத்திரம்

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை : முழுதும் பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 11 – 12 வரிகள். அளவு : 33.5 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 200. ஆசிரியர் : இடைக்காடர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" ஆதிபிற பவத்தி லம்புவியின் மானிடற்குச்
சோதனையாய்ச் சாவுதுன்பந் தோன்றுமே — நீதி
தருபசுக்கள் மெற்றத் தரணிமழை யுண்டாகும்
பருத்தியுப் பாமணக்குப் பாழ் ".

முடிவு :

அரியவர் முதலைந்தும் வல்லூராகும். யாத்திரையோ டாறுமே. யாந்தையாகும் கருதிய உத்திரத்தோடையந்துங் காக்கை கதிர்காரு மனுச முதலய்ந்து கோளி. மருவு திருவோண முதலாறு மஞ்ஞை மாநிலத்தில்.

குறிப்பு :

இதுவும் சோதிட நூலாகும். பிழைகள் அதிகம். இந்நூலின் இறுதி ஏட்டின் பின்புறம் தமிழ் வருடங்கள் பிரபவ முதல் அட்சய வரை 60ம் எழுதப்பட்டுள்ளன.

வரிசை எண் : **1439** சுவடி எண் : **850(f)**

## சறுவார்த்த சிந்தாமணி

ஏடுகள் : 42. ஏட்டின் நிலைமை : முழுதும் பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 11 - 12 வரிகள். அளவு : 33.5 × 4 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை :

**2000.** ஆசிரியர் : வேங்கடேசனர். முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

“ முன்னுள்ளோர் புகழும் வேத வாரியில் மொண்டு கொண்டு
வன்னமுன் காக மாடு மடவதாய்த் தமிழை யாய்ந்து
பன்னிரு கிரகங் கோளின் குனபலன் றனையே கூற
கன்னலும் பழமுந் துய்க்குங் கற்பகக் கன்று காப்பாம் ”.

**முடிவு :**

அமரபட்சத்துச் சந்திரன் கேந்திரத்திலிருக்க நாலாம் இடமாக வியாளம் பார்த்திருக்க கேமசரியோ கமென்பது.

12 மாதப்பலன் முற்றும்,
குருசிதம்பர முன்னிற்க. செயம்.

**காலம் : (Colophon)**

“ ௲௨௰௵ புரட்டாசி மாதம் ௨௰௭ வியாளக்கிளமையன்று மிருகசீரிஷ நட்செத்திரத்தில் முற்றிற்று. முடித்தானெந்தலில்ப்பிளையவர்கள். இப்பள்ளிக்கூடத்தில்ப் பள்ளி ஓதிவிக்கிறபோது இந்தச்சுவடி எழுதினேன். சிதம்பரம் வாத்தியார் புத்திரன் தம்பாபிள்ளை பெருமாபிள்ளை மகன் பிச்சப்பிள்ளைக்கு பெரியநாயமார் திருத்திப் படிக்க வேண்டியது.

**குறிப்பு :**

இறுதிப் பாட்டால் இது வெங்கடேசன் என்பவராற் செய்யப் பட்டிருத்தல் வேண்டும் எனத் தெரிகின்றது. பிழைகள் அதிகம். சோதிட நூலைச்சார்ந்தது. தமிழலங்காரம் என்ற சொல் தலைப்பில் காணப்படுகின்றது.

வரிசை எண் : **1440** சுவடி எண் : **850 (g)**

## உள்ளமுடையான்

ஏடுகள் : 92. ஏட்டின் நிலைமை : முழுதும் பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 11 - 12 வரிகள். அளவு : 33.5 × 4 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

குறிப்பு :

இது 850-a போன்றது.

வரிசை எண் : **1441** சுவடி எண் : **850 (h)**

## குளிகன் பலன்

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை : முழுதும் பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு : 9 - 11 வரிகள். அளவு : 33.5 × 4 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை, முழுமை ; முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" ஜென்மமதில்க் குழிகன்வரச் சேரும் யோகி
திருந்தியபா வரிணங்கிச் சேர்ந்த போது
வன்மமில்லா வஞ்சனையாங் காமி யாவான்
வாராது ஆசாரம் வாக்கில் வந்தால்.

முடிவு:

நாள் உயச ஆயிலியங்கேட்டை ரேபதி புதன் திசை வருசம் எ-டு நாளிகைக்கு மீ ரு நாள் ௰உ யிப்படியே சென்ற நாளிகை ஒன்றுக்கு சீ கண்டு தள்ளவும்.

குறிப்பு :

இராகு கேது என்ற கிரகங்களில் கேதுவின் பலன் குறித்துக் கூறும் சோதிட நூலாகுமிது.

வரிசை எண் : 1442 சுவடி எண் : 918

## உள்ளமுடையான்

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 11 × 3 வரிகள்.
எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 60. ஆசிரியர் :
அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

நட்செத்திரம் உள்ளமுடையான் குருவே துணை.
குமரகுருபதன் துணை.

இந்த ஏடு பார்க்கிறபோது யிருபத்தேழு நட்செத்திரத்தில் ஒரு நட்செத்திரம் சொல்லச் சொல்லி சொன்ன நட்செத்திரத்தைப் பார்த்துச் சொல்லவும்.

முடிவு :

சங்குரு எசக்கரமுருளச் சூல முருளச் சுடுகாடுருள ரெளியுருளச் சிவா. இதுகுலை அடித்து மந்திரிக்கவும். நிற்க்கும்.

குறிப்பு :

இது சோதிட நூல்களுள் ஒன்று. இடையில் 3 பாடல்களில் இருபத்தேழு நட்சத்திரங்களின் பெயரும் அதற்குண்டான பலனும் கூறப்பட்டுள்ளன. சூடாமணி உள்ளமுடையானினும் வேருயது. இறுதிப்பகுதி மாந்திரீகமாகக் காணப்படுகின்றது.

வரிசை எண்.: 1443 சுவடி எண்.: 923

## உள்ளமுடையான்

ஏடுகள்: 31. ஏட்டின் நிலைமை: நல்ல நிலைமை பக்கத்திற்கு: 6 வரிகள். அளவு: 15×3 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 500. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் உள்ளது.

தொடக்கம்:

நூல்

கார்முகில் வண்ணன்தன்னைக் கண்டால்க் காரியம் மிகவும் நன்று. பொன்னொடு பொருளும் உண்டாம். வேறொரு வினையுமல்லை. வேண்டிய பொருளுங் கைகூடும். மால்தன்னை கண்டபோதே வரும்பிணி அகன்று தீரும்.

உத்தமம்

முடிவு:

விரிவுடன் செல்வ முண்டாம் விடுதான் செல்வமாகும்
பரிவுடன் மழையும் பெய்யும் பாரினில் போனோர்மீள்வார்
கருதிய கருமம் கைகூடும் கவலையும் பயமு மில்லை
சரசுபதி தன்னைக் கண்டால் தாழ்வில்லாச் செல்வமுண்டாம்

இது நன்று உத்தமம்

| | | |
|---|---|---|
| வாணயன் | — | நித்திருதேவி |
| கண்ணுடி | — | ராசன் |
| அந்தகன் | — | கெருடன் |
| பிள்ளையாப்பு | — | நிருதி |
| போய் | — | ருமசாமி |
| மூதேவி | — | பிணம் |
| பெருமாள் | — | மங்களவாள் |
| ராச்சதன் | | |
| பூரணகும்ப | | |

குறிப்பு:

இது சோதிட நூலைச்சார்ந்தது. கயிறு இட்டுப் பார்க்கும் நூலைப் போன்றது.

வரிசை எண்.: 1444 சுவடி எண்.: 773

## உள்ளமுடையான் பலதிரட்டு

ஏடுகள்: 100. ஏட்டின் நிலைமை: நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு: 12 வரிகள். அளவு: 11.5 × 3.5 செ. மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 1700. ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் உள்ளது.

தொடக்கம்:

நூல்

"விசைகொள் புற்ருளி புற்றேள் மெய்ப்பனை யனுடப் பெயரா
மசைவில் வல்லாரை யாளி துலாங்கோளி செட்டை யாகுந்
திசையொடு குருகு கொக்குத் தேள்க்கடை யாளி மூலம்
வசையுடக் குளமே பொய்கை வாவிபூ ராட மானே."

முடிவு:

"நாவது முக்கால் நயந்து காணங்கையால்
ஆவியுந் தன்னையு மன்ன சேட்டிடும்
நாவுடல் வறண்டிடும் நடுக்குமே லெல்லாம்
சாவது ஏழுநாள் தடுக்கலுண் ணுதே". -உடு

சண்முகவேலு துணை.

முற்றும்.

குறிப்பு:

இதில் 6-ம் பாட்டிலிருந்து தொடங்கப்பட்டுள்ளது. 1 முதல் 5 பாட்டுக்கள் இல்லை. இந்நூலின் இறுதியில் வேறு சோதிட ஏடுகள் 4 கோக்கப்பட்டுள்ளன. இது சோதிட நூல்களில் ஒன்று. இந்நூலில் திதி, வார முதலானவைகளின் சோதிடம் கூறப்பட்டு உள்ளது. இடையிடையே ஏடுகள் இல்லை.

வரிசை எண் ; 1445 சுவடி எண் : 793

## ஓராசாத்திரம்

ஏடுகள் : 120. ஏட்டின் நிலைமை : மிகச் சிதிலமாக உள்ளது. பக்கத்திற்கு : 8—9 வரிகள். அளவு : 42×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 5000. ஆசிரியர் : அவனிலிங்கன். முழுமை : முழுவதும் இல்லை.

குறிப்பு :

இது எமது மகாலில் அச்சாகியுள்ளது.

---

வரிசை எண். : 1446 சுவடி எண். : 741 (a)

## கெவுளி காதல்

ஏடுகள் : 14½. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்து உள்ளன. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 22×2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : தெரியவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

ஞயத்துக்கிழமை கெவுளி பலன்

நாயத்துக்கிழமை கெவுளி ரு௬. பிரம்ம, சாதி. பொன்னிரமாய் இருக்கும். முதுகிலே வெகுசீத்தாயிருக்கும். ஸ்ரீயுந்தானும் கிழக்கு முகமாயிருந்து ஆசாரங்கொண்டிருக்கும்.

முடிவு :

சனி பலன்

க. சுபம் உ. உத்தமம் ௩. அமுற்தம் ௪. கலகம் ரு. சுபம் ௬. தனம் எ. சுபம் அ. லாபம்.

## ருத்திரி காலபலன்

க. அமுர்தம் உ. ரோகம் ௩. லாபம்
ச. லாபம் ரு. சுபம் சு. உத்தமம்
எ. கலகம் அ. போசனம்

அருக்கன் கூய. அருந்திங்கள் கூய. திருக்கன் செவ்வாய் சய செய்ய புதன் ருய. பெருத்த வியாழம் எய. பேருன வெள்ளி அய. கருத்த சனி ௩ய. ஆகு வாரம் எ-க்கு ஞழிகை சாஉய.

கெவுளி முத்தும்.

குறிப்பு :

இதில் பல்லிகளின் இருப்பிடமும், இருப்பிடத்தில் உள்ளவர் களையும், சொல்லுக்குப் பலனையும் கூறும் நூல். ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சற்று சிதிலம். இன்னின்ன கிழமைகளில் பல்லி சொன்னுல் இன்ன பலன் என்று கூறும். மற்ருெரு பகுதியும் இதில் இருக்கின்றது. பகலில் மட்டுமல்லாது இரவிலும் இன்னின்ன நேரத்தில் சொன்னுல் இன்னின்ன பலன் என்பதும் கூறப்பட்டுளது.

வரிசை எண் : 1447 சுவடி எண் : 741(b)

## காக்கை சாத்திரம்

ஏடுகள் : ½. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்து உள்ளன. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 22×2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 10. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுதும் இல்லை.

தொடக்கம் :

கருமுகில் மொழிந்தபோது
　　கடுகியே அடியளந்து
அயனுடன் பன்னிரண்டு
　　அடவுடன் கூட்டிக்கொண்டு

முடிவு :

கதித்திடும் ஏழையாகில்

குறிப்பு :

இப்பகுதியில் ஒரேஒரு செய்யுள்தான் உள்ளது. இத்தனை தடவை கத்தினால் இன்ன பலன் எனக்கூறுவது. முழுதும் இல்லை. முற்றும் கிடைக்குமாயின் நல்ல பலன் தரும்.

---

வரிசை எண் : **1448** சுவடி எண் : **741(c)**

## ஆந்தை சிறல்

ஏடுகள் : *1.* ஏட்டின் நிலைமை : மிகவும் பூச்சி அரித்த நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : மொத்தம் *13* வரிகள். அளவு : *22×2* செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : *15.* ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

ஓரோரை உரைக்கு மாகில்
ஒண்ணது சாவுஞ் சொல்லும்
யீரோரை உரைக்கு மாகில்
யினியதோர் நன்மை யாகும்
மூவுரை உரைக்கு மாகில்
முகலென மங்கை சார்வாள்
ஞாலோரை உரைக்கு மாகில்
ஞளுக்குளுள் கலகஞ் சொல்லும்
அஞ்சோரை உரைக்கு மாகில்
அங்கொரு விருந்து முண்டு
ஆறோரை உரைக்கு மாகில்
யெழுந்திரு அவடம் விட்டு
யெட்டோரை உரைக்கு மாகி(ல்)
திட்டென்று சாவுஞ் சொல்லும்
ஒன்பதும் பத்து மாகில்
ஊடியோ டோடி வாழ்வர்.

பலனறியவும்.

முடிவு :

அருக்கன் சுமய அருந்திங்கள் கமய. திருக்கன் செவ்வாய் சமய. செய்ய புதன் டுமய. பெருத்த வியாழம் எமய. பேருன வெள்ளி அமய. கருத்த சனி ஙமய. ஆக வாரம் எ-க்கு நாளிகை சாஉமய.

குறிப்பு :

இத்தனை தடவை அலறினுல் இன்ன பலன் எனக் கூறுவது. முழுவதும் இல்லை.

வரிசை எண் : **1449** சுவடி எண் : **741 (d)**

## பல்லி விழும் பலன்

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை : மிகவும் பூச்சி அரித்த நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 22×2செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை. 50. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

பூரணையில் பல்லி உச்சியில் விழுகில் சிறசு போம். முடிமேல் விழுகில் மனையாள் மறணம். நெத்தியில் விழுகில் செல்வமுண்டாம். வலது புருவத்தில் விழுகில் ருசாங்க லாபம்.

முடிவு :

பல்லி தோஷம் தீற்குறத்துக்கு மாவினுலே பல்லி ரூபம் செய்து, மாவினுலே எட்டு விளக்கு நெய்யிலிட்டு யேத்தி வினயகபூசை செய்து காணிக்கையுடனே தூபதீப நெயிவேத்தியத்துடனே செய்து கழிப்பு செய்து காஞ்சி புரத்து காமாட்சியம்மனை தொழுது தோஷந்தீரும்.

**குறிப்பு :**

மனிதர்மேல் பல்லி விழுந்தால் பலன் கூறுவது. இன்ன இடத்தில் விழுந்தால் இன்ன பலன் எனச்சற்று விரிவாகக் கூறுகிறது. பஞ்சாங்கத்தில் இருப்பதை விடச்சற்று விரிவாக உள்ளது. இதன் இறுதியில் பல்லி தோஷத்திற்கு வழி சொல்லப்பட்டிருக்கின்றது.

வரிசை எண். **1450** சுவடி எண் : **741 (e)**

## துடி நூல்

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : பூச்சி அரித்த நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 22×2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 40. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுதும் இல்லை.

**தொடக்கம் :**

உச்சி துடிக்கில் துயரமுண்டாகும். நெத்தி துடிக்கில் நன்மையுண்டாகும். வலது புருவந்துடிக்கில் துயரம் உண்டாகும். யிடது புருவந்துடிக்கில் அறம்பமாம். வலது கீழ்ப்புருவந்துடிக்கில் நன்மையுண்டாம். இடது கீழ்ப் புருவந்துடிக்கில் பிறத்தி செனம் வரவு.

**முடிவு :**

வலது கெண்டைக்கால் துடிக்கில் நல்லகினுவு காணும், இடது கெண்டைக்கால் துடிக்கில் முகத்தில் வங்கு வரும்.

**குறிப்பு :**

மனித உறுப்புக்களில் இன்னின்னது துடித்தால் இன்னின்ன பலன் எனக் கூறுவது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

வரிசை எண் : **1451** சுவடி எண் : **800**

## கெளளி காதல்

ஏடுகள் : 87 ஏட்டின் நிலைமை : மிகமிகச்சிதிலம். பக்கத்திற்கு : 4—7 வரிகள். அளவு : 32 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 300. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

கௌளி பொன்னிறம் — கிளக்சேதலை கீளாநிற்குங். தெற்கே அக்கசத்தைப் பார்த்திருக்கு. இதன் பலன் கிளக்கு ராச வார்த்தை. ராசலாபம். தேன்கிளரப் பொல்லாது வியாதி விசார வெகுவிசனம் தெற்குப் பொருள் வார்த்தை.

**முடிவு :**

பூரட்டாதியில் பிணி 10 நாளையில் தீரும். உத்திரட்டாதியில் பிணி 16 நாளையில் தீரும். ரேவதியில்ப்பிணி 7½ நாளையில் தீரும். இந்தப்படி 27 நட்சத்திரமும் பார்த்துக் கொள்ளவும்,

**காலம்:**

விய வருடம் மார்கழிமீ 9-ம்தேதி வெள்ளிக்கிழமை விடிய காலம் ரு நாழிகைக்கு பிறந்தது.

அருணாசலயீசுபரர் துணை.

வியஞு மார்கழி மாதம் 4-ம் தேதி செலத்தில் யிருந்து யெழுதினது. சகல சாஷ்திரமும் பார்த்து சொல்லுவது. யிதெ செவடி.

வேலு மயிலுந்துணை

**குறிப்பு :-**

இந்நூல் கெவுளி ஆருடம் பார்ப்பது. இன்ன திசையிலிருந்து கெவுளி சொன்னால் அச்சொல்லுக்கு இன்ன பலன் என்பதைக் கூறுகிறது. 'பல்லி சொல்லுக்குப் பலன் என்ற சோதிட நூலைப் போன்றது.

வரிசை எண் : 1452 சுவடி எண் : 792 (a)

## கௌசிக சிந்தாமணி

ஏடுகள் : 5. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்த நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 40 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை: 150. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"கௌசிகசிந் தாமணியைக் கற்றவரும் கேட்டவருங் கௌசிகரைப் போலவே காதலித்துக்—கௌசிகராய் மண் மீதில் வாழ்ந்திருப்பார் மாவரச யோகமுருங் கண்மீ திருப் பவராங் காண்"

முடிவு :

வந்திடு முப்பான் பீடை வகுத்திட்டோ மப்பாற் பீடை
விந்தையா யருபா னெட்டில் விளம்பிய சிங்க மாதம்
பந்தமா யமர பக்கம் பாலனுந் துதிகை தன்னில்
சுந்தரன் புத்தூர் சேர்ந்தான் சொல்லினேம்
சைவனுவன் -கூய

குறிப்பு :

இது சோதிட நூல்களுள் சிறந்தது. ஆசிரியர் கௌசிகர் எனத் தெரிகின்றது. பிழைகள் அதிகம் காணப்படுகின்றன. சுருக்கமாகச் சோதிடத்தை உரைக்கின்றது.

வரிசை எண் : 1453 சுவடி எண் : 792 (b)

## வசிட்டர் சோதிடம்

ஏடுகள் : 64. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்த நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 5-7 வரிகள். அளவு : 40 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை :

1700. ஆசிரியர் : வசிட்டர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"கருணைசேர் ஆதி முதலாக் கடவுளை அடிபணிந்து வரமருள
பெருகத் தேவர் வழங்கிய வதிஷ்டர் சொன்ன
தருவகிர் விசுவாமித்திரர் தவத்துளோக் கருளிச் செய்த
குருகவு காதன் னூலைக் கூரிடக் கிணேசன் காப்பாம்." -க

முடிவு

சகோதரத் தானதி பன்னின்ற ராசிக்கும் செவ்வாய் நின்ற ராசிக்கும் மத்தியில் நின்ற கிரகத்தைக் கொண்டு சகோதரம் சொல்லவும்.

குறிப்பு :

இந்நூலின் இறுதியில் 5 ஏடுகளில் பிற சோதிடங்கள் கூறப் பட்டுள்ளன. இது விசுவாமித்திரர் முதலாயினருக்கு வசிட்டர் அருளிச் செய்ததெனத் தெரிகின்றது. சோதிடர் நூல்களுள் வசிட்டர் அருளியது மிகச் சிலவே. அவற்றுள் இது ஒன்றாகும்.

வரிசை எண் : 1454 சுவடி எண் : 883

## கௌசிக சிந்தாமணி

ஏடுகள் : 15. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 4-5 வரிகள். அளவு : 30×3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 200. ஆசிரியர் : மயன். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" சந்திரன் சனியே யெட்டில்
சார்ந்திட குருவே பார்க்க
புந்திதான் கூடி னின்றால்
பிறந்தவன் வீதி சொல்வேன்

வந்திப்பு வடக்கு வீதி
வகையுடன் மேற்கு வாசல்
சந்திப்புக் கிழக்கு கோவி
சாற்றினாற் மயன னூரே."

முடிவு :

"அறிந்துதான் மூன்றுடையோன்க் கேந்தற கோணம்
அவர்களும் தனதுவீ டாகவி யாக
தெறுந்துதான்ச் சேதறத்திற் சனிசே பாம்பு
செப்பமுட னிறுந்தக்கால் மாத்துறவுக்கு
பறிந்துமே ஆண்டிலொன்று கெற்ப வாய்க்கம்
வையகத்தில் மாத்துறவு மறண மென்றும்
பறுந்துமே யிப்பலனை மாதே கேளும்
பாறுலகில் அற்பமென்றே பகறலாமே."

குறிப்பு :

இது சோதிட நூல்களுள் ஒன்று. கிரகங்களின் நிலையும், பலனும் கூறுகின்றது. முதலிலும், இறுதியிலும் சில வெற்றேடுகள் காணப் படுகின்றன.

---

வரிசை எண் : **1455** சுவடி எண் : **840**

## சகாதேவ நூல்

ஏடுகள் : 106. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி யரித்துளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 14 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300. ஆசிரியர் : சகாதேவர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"தர்மருடன் வீமன் தனஞ்செயனுஞ் சாதேவா
நன்மை நலன் நயந் திவர்கள்—யிம்மையினில்
பொய்யா மொழிகளும் பொருந்தி நலத்துடனே
மெய்யாகச் சென்று விளம்பு."

தேவிசகாயம்

முடிவு :

வாய்க்கால் வெட்ட முதலாளி படுவான்.
மணியத்தா லாப முண்டு நன்று
காதுக் குகந்த உடமை கொஞ்சம்
தண்டில் வாணிபஞ் செய்ய நன்று.

குறிப்பு :

இது சோதிட நூல்களுள் ஒன்று. பாண்டவர்களில் ஒருவரான சகாதேவர் என்பது முதற்பாட்டினுல் தெரிகின்றது. இது கயறு போட்டுப் பார்க்கும் சோதிட நூல் வகையைச் சேர்ந்தது.

****

வரிசை எண் : **1456** சுவடி எண் : **890**

## சகாதேவ நூல்

ஏடுகள் : 167. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை. பக்கத்திற்கு : 6 வரிகள். அளவு : 21 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1700. ஆசிரியர் : சகாதேவர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

காப்பு

" ஆவத்தைத் தவிர்த்தாளுங் கிணேசனை
நீபத்திகொண்டு நெஞ்சி லிருத்தியே
மாபத்தி யுடன் மனதில் நினைத்திடுஞ்
சோபத்தை யறச்சொல்லுஞ் சூடாமணி ".

நூல்

" எண்ணிய கரும மெல்லா மியல்புடன் நன்றே யாகும்
புண்ணிய மூர்த்தி தந்த போத முகவன் றன்னை
நண்ணிசோ மத்தை யெற்றி நாடியே நிமித்தஞ்சொல்லி
பண்ணிய மொளியாய் கேளாய் பார்தனி லுண்மை
கண்டாய். "

முடிவு :

" ஆடுகொள்ளப் பெருங்காத்திலே வற்திக்கும்
இந்த மருந்தினல் வியாதி நெடுநாள் நிற்கும்
இவனுக்குப் பேர்குடுக்க போருக்குமிகவும் நன்று
இந்த நாடு யிவனுக்குமுட்டச் செல்லும் ".

காலம் : (Colophon)

பிரமாதி ஹூ ஆனி மீ˝ உயடுஉ வெள்ளிக்கிழமை தினம் யெளுதி முகிந்தது.

முற்றும்.

யெதுறக்கோட்டை ரூமானுஷய்யங்காற் குமாறன் அப்பையங்காற் சகாதேவ நூல் சாக்ஷத்திரம்.

யிது எழுதினது ஆனேக்கூட்டம் நாட்டாண்மை அ. முத்துக்கறுப்பபிள்ளை மகன் கஞ்சபிள்ளை.

வேணும்.

மீனும்பிகை துணை.

முதல் ஏட்டில்,

" யிது முன்னேடு. யெதுறக்கோட்டை கிராமத்தில் இருக்கும் ரூமானுஷயங்கார். குமாறன் அப்பையங்கார் சகாதேவனூல் சாஸ்த்திரம்,

ஆனேக்கூட்டத்திலிருக்கும் அ. முத்துக்கறுப்ப பிள்ளை மகன் கஞ்சரூச பிள்ளை எழுதினது " என்றுளது.

குறிப்பு :

இது சோதிட நூல்களுள் ஒன்று. தொடுகுறி சாத்திரம்போல கயறுபோட்டுப் பார்க்கும் பகுதியுமுளது.

வரிசை எண் : 1457 சுவடி எண் : 905

## சகாதேவ நூல்

ஏடுகள் : 109. ஏட்டின் நிலைமை : நல்ல நிலைமை. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 17 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 600. ஆசிரியர் : சகாதேவர். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

" சகாதேவனூல்ச் சொல்லும்வகை யிந்தயேடு யாதாமொருவர் பார்க்க வேணுமானல் நாயிற்றுக்கிளமை யன்றைக்கித் தரை மெழுகிப் பிள்ளையார் வைத்துப் புஷ்பஞ் சாற்றித் தேங்காய் பாக்கிலை பழம் வைத்து நூத்தெட்டுக் குள்ளாக மூன்றுபேரை லக்கங்கேட்டு மூன்று லக்கத்தையுங் கேட்டு மொத்தஞ் சேர்த்து யெட்டில்க் களித்து லக்கஞ் சரியிட்டுயிருந்தால் முதலேடு முதல் வரியும் பார்க்கவும்.

முடிவு :

" யிந்தவீடு மச்சிட அல்லப்படுவான் அலச்சல் வருந்தீது
யிந்தராசாவின் பேரிலேதனம் வருதுஉத்தமம் நன்று
வாய்க்கால் வெட்ட அனேகம் பலனுண்டு நன்று
யிந்தமணியத்தால்ப் பலவகையாலும் லாபமுண்டு நன்று.

" சகாதேவ நூல் முற்றுப்பெற்றது "

குறிப்பு :

இது எமது 890-ம் சுவடி போன்றது.

---

வரிசை எண் : 1458 சுவடி எண் : 720

## சர நூல்

ஏடுகள் : 51. பக்கத்திற்கு : 5-8 வரிகள். அளவு : 33 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை :

950. ஆசிரியர்: தெரியவில்லை. (சங்கரனார்) முழுமை: முழுவதும் இல்லை.

தொடக்கம்:

" உமைமாதுக் கீச னுரைத்தசர நூலின்
னமையாப் பொருளை யறியச் — சமையாப்
புவிமடந்தை பூமடந்தை பொன்மடந்தை யஞ்சொற்
கவிமடந்தை யிக்கதைக்கோர் காப்பு ".

நூல்

சந்திரன் பானில்க் கரணமுங் கொளும்
தயங்கியபக் கங்கரணம் யோகம் வாரம்
வந்துசொல்லுஞ் சோதிடத்தை யறியா தார்க்கு
மனநினவாம் வகையுமையாள் வணங்கிக் கேட்ப

முடிவு:

சற்குரு முகாந்திரற்றினாலே அறிந்து தெளிந்து சர னூலின் ஒழுங்காலே நடக்கவல்ல குருபுத்திரனை சிவயோகி யானவனே, தேவமுற்ற சீவமுற்றனாகிய சாயுட்சியும்பெற வல்ல வல்லவநென்பது. அதுவன்றியிலே இந்த சரநூலின் உண்மையை விசாரியாத நிற்மோடனாக இருக்கப்பட்டவன் பின்பிறப்பிற் சொன்ன கேதுவிலே பிறந்து பிறந்து.........

காலம்: (Colophon)

விளங்கிய சகாத்த மாயிரத்தஞ் நூற்றுமே
லெண்பத்தேழு விசுவாவசு வருஷந் தன்னில்க்
களங்கமில்லா வடமொழியைத் தெளிந்து தேற்ந்து
காசினியிற் செந்தமிழாற் சர நூ லென்ன
வளங்குலவும் புகழ்பருவூர் கீர னூற்வாழ்
வள்ளல்சே வடினுதன் வரமாய் வந்தோ
னுளங்களி கூர்ந்தருள் ஞானயோக நடராச
னுரைத்தனனிப் பொருளுணர்ந்தோர் உண்மை
தானே.

(இது முதல் ஏட்டிலேயே கொடுக்கப்பட்டுள்ளது.)

குறிப்பு :

இது சிவபெருமான் பார்வதி தேவியாருக்கு உரைத்தருளியது. இதில் இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்னும் மூன்று நாடிகள் நடக்கும்விதமும் அவற்றைக் கிரமப்படி வசப்படுத்தி யோகமனுட்டிக்கும் வழியும், இன்னின்ன நாடி இன்னின்ன காலத்தில் மாறுபட்டால் இன்னின்னது நடக்குமென்றும் இன்னின்ன நாடி நடக்குங்கால் இன்னின்ன காரியங்கள் செய்யலாமென்றும் கூறப்பட்டுள்ளது. 49 செய்யுட்கள் உரையுடனிருக்கின்றன. ஐம்பதாவது செய்யுளின் உரை முற்றுப்பெறவில்லை. இறுதி ஏடு இல்லை.

வரிசை எண் : 1459 சுவடி எண் : 834(a)

## சரநூல்

ஏடுகள் : 6. ஏட்டின் நிலைமை நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 5—6 வரிகள். அளவு : 21 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : (சங்கரனுர்) தெரியவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

உமையவளுக்கு சங்கரனுர் திருவுள மகிழ்ந்து அருளிச் செய்தது.

காப்பு

நேரிசை வெண்பா

" வாழ்த்துவா முள்ளம் வருவிப்பா நெஞ்சமின்ம்பின்
சூழ்ந்துவர மேன்மேற் றுதிசெய்வார் — தாழ்ந்த
பர நூலை முற்றுமறப் பாலித் தருள்கூட்டுஞ்
சர நூலை யோதமுன் னேன்ருள்.

முடிவு :

சித்திராசனம் அல்லது இர்த்தனக்கம்பழம் தன்மை இவைகளில் நன்மையாக விளங்கும்படியான ஆசனத்

திலிருந்து சரம் பார்க்க வேண்டும் மற்றுஞ் சொல்
கிறேன் கேள் மயில் போலு மழகிய பெண்ணே ". (எ-று)
-ந-

குறிப்பு :

இது சோதிட நூலைச் சேர்ந்ததாகும். இப்பிரதியில் முழுதும் இல்லை. 3 செய்யுட்கள் உரையுடன் காணப்படுகின்றன. பிழைகள் அதிகமிருப்பினும் உரை நல்லதாகக் காணப்படுகிறது. இதனைப் பார்வதிக்குப் பரமசிவனார் கூறியதாகும்.

வரிசை எண் : 1460 சுவடி எண் : 834(b)

## நந்தி நூல்

ஏடுகள் : 25. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 5—6 வரிகள். அளவு : 21×3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 400. ஆசிரியர் : நந்தி. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

காப்பு

" பேறுபெரு நந்திநூலை பிரபலமங் கனியுரைக்க
கார்பெறு கும்பகம்பக் கணபதி யருளிநாலே
தேர்பெறு சிவகுமாரன் சிவசுப்பிர மன்னியனை
ஆர்பெறு அந்திவண்ணன் அய்ங்கரன் காப்புத்தானே ".

நூல்

" செப்புவேன் நடத்தை கண்டு திரமுட னகுகளெல்லாம்
கப்பிய கரிமு கன்றன் கனமுட னடியை வாழ்த்தி
உற்பன மாகு வேதன் முறையெல்லா யினியா ராய்ந்து
மற்பிய குறிக ளெல்லாம் வளமுட னுரைப்பேன் மன்னே"

முடிவு :

பொனவரையி லிருக்குவரை யோகங் கேளிர்
பேசியதோர் வடபுரத்தில்க் குரிசி நின்றால்
ரெணவரையே வடவநென்றும் உரைக்க லாகும்
நடுவரைநே ரய்வரையென் றெண்ணும் (போது)
தென்புறத்தில் குறுக்கிச்ச ரப்பால் நின்றால்
செல்வவரை யிதுவெனவே திரமாய்ச் சொல்லும்
அங்குலத்தில் அன்னமதில் குறுக்கே வீள்ந்தா(ல்)
அவ்வரையே பஞ்சையென்னும் அரிந்து கொள்ளே "

குறிப்பு :

இந்நூல் சோதிடம் போன்றது. இப்பிரதியில் முழுதும் இல்லை. விருத்தப் பாக்களாலாயது. இது நந்தி உபதேசித்தது எனவும் அதனால் இது நந்திநூல் எனப்பெயர் பெற்றது எனவும் கூறுவர். சுப்பிரமணியர் கூறியது என்பர் ஒரு சாரார்.

வரிசை எண் : 1461 சுவடி எண் : 836

## சரநூல்—உரையுடன்

ஏடுகள் : 51. ஏட்டின் நிலைமை : ஓரங்களில் எலி கடித்துள்ளது. பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 23 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 800. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

காலம் : (Colophon)

வியஞூ தைமீ௨ உய ௴தேதி புதன் வார நாளன்றைக்கு இராமநாத முதலியார் குமாரன் சாமி முதலியார் சரனூல் எழுதி முடிந்தது

முற்றும்.
சொக்கர் துணை.
கதித்தசலம் துணை.
வெங்கிடாசலபதி லட்சிக்கவும்.

குறிப்பு :

இது எமது 720-ம் எண் போன்றது. ஸ்வரசாத்திரமென்றொரு நூல் வடமொழியிலுண்டு. அதனைச் சார்ந்ததாகுமிது. சரம் என்பது காற்று, சுவாசம் மூக்கில் காற்று உள்ளிழுக்கப்பட்டு வெளித்தள்ளும் போது ஏற்படும் மாறுதல்களைக் கொண்டு உரைக்கப்படும் சோதிட நூலாகுமிது. முற்றுமிருப்பினும் இடையிடையில் வெற்றிடங்கள் காணப்படுகின்றன.



வரிசை எண் : **1462** சுவடி எண் : **797 (a)**

## சரவணபவன் சோதிட சாத்திரம்

ஏடுகள் : 14. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 9-11 வரிகள். அளவு : 25 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 650. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

"அண்டரண்ட மனைத்தும் வடிவ தாக
கொண்டு யிர்க்குயி ராயருள் குஞ்சரந்
தொண்டனேன் சொல்லு சோதிட நூலதிற்
கண்டி ருந்து கனியக் கனியுமே."

முடிவு :

எல்லியிற் கனக வாழ்வும், கல்வி, செல்வம், உற்றூர் உறவு மக்கள் சுற்ற மன்னர் வரிசை சத்துரு வெற்றி. மகிழவும்.

குறிப்பு :

இது சோதிட நூல்களுள் ஒன்று. மிகவும் சிறிய எழுத்துக்களால் எழுதப்பட்டுள்ளது. தொடர்ச்சியாக இல்லை. ஆசிரியர் சரவணபவன் போலும்

வரிசை எண் : **1463** சுவடி எண் : **797 (b)**

## அலகுநூல்

ஏடுகள் : 33. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு : 25 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 750. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

நூல்

"திருந்திய சொன்னம் வெள்ளி சிறந்த வொன்பான் மணியும்
பொருந்திய சுவடி மாலை புதுவிதை மகிழ வித்துப்
பரிந்து நூற் றெட்டுக் கொண்டு பால்தனிற் சுத்தி பண்ணி
வருந்தியே சரசு வதியை மனதினிற் தியானம் பண்ணே."

**முடிவு :**

யின்னம் ஒரு சூத்திரம் கார்த்திகை முதல் மூணுளு பொன்னுளென்று அதின் பின்பு அப்போ உதித்தனுள் புகுனு ளாகில் அசித்த பேறில் உறுதியா நன்று

முற்றிற்று.

குருகிடாக்ஷம்

**காலம் : ( Colophon )**

சவுமிய வருடம் சித்திரை மாதம் 11-ந் தேதி மங்கள வாரம் உதிச்சு பனிரெண்டு நாளிகையளவில் எழுதி முடிந் தது. வைத்தியலிங்கம் எழுதினது.

**குறிப்பு :-**

இந்நூல் சோதிடத்தைச் சேர்ந்தது. இந்தப் பிரதியில் இந்நூல் முழுவதும் உள்ளது. நூலாசிரியர் விபரம் ஒன்றும் தெரியவில்லை.

வரிசை எண் : 1464 சுவடி எண் : 797 (c)

**சர நூல்**—சரவணபவன் உரையுடன்

ஏடுகள் : 34 ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6-8 வரிகள். அளவு : 25 × 2.5 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 1200. ஆசிரியர் : அறியக்கூடவில்லை (கயிலாசபதியார்) முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

(720-ம் எண் சுவடி போன்றது)

**முடிவு :**

வேத முடிமேற் போத நாத ஞானனந்த வடிவாய்
நிறைந்து விளையாடு
மாத ரரசா யுலகெலா மீன்றினி தளிக்குந் திருவருட்
செல்வப் பெண்ணி னல்ல பெருந்தகை மின்பமாரந்
தங்கருணை வடிவாமுமை யென்றவாறு -டுக

உமைமாதுக் கீசனுரைத்த சர நூற் கவனுண்ணின் றுணர்த்த அவன தருட்பாத முடிமேற் கொண்டு சரவணேற்பவ னெழுதிய உரை முற்றும்.

நீடூழி வாழ்க, ஸ்ரீ தேவிசகாயம்.
செந்திலாதிபன் துணை. ஸ்ரீ பரமகுரு முன்னிற்க.

**குறிப்பு :**

இச்சோதிடம் பார்வதிக்குப் பரமசிவன் உபதேசித்தது. அந் நூலுக்குச் சரவணபவன் என்பார் உரை வகுத்துள்ளார். இது முற்றிலும் உள்ளது. எண். 720 போன்றது.

வரிசை எண் : **1465** சுவடி எண் : **797 (d)**

## பல்லி நூல்

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 9-11 வரிகள். அளவு : 25 × 2.5 செ. மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 60. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

"அருக்க னறுபது அருந்திங்கள்த் தொண்ணூறு
திருக்கினர் செவ்வாய் நாற்பது செய்யபுதன் எண்பது
பெருத்த வியாழ மெழுபது பேருன வெள்ளி யெண்பது
கருத்தார் சனிமுப் பதாக காணுங் கடிகை யிதுவாமே."

**முடிவு :**

"கோட்டுப் பல்லி சொல்லொன்றுங் கூறு மிரண்டுந்
தனமாகு
மேட்டு மேழு மாகாது யிசைக்கு நான்கு நன்றாகும்
வட்ட மைந்துக் காநிதியம் வரவெ சொல்லு மோராறு
சட்டப் பட்டுவெ யொருமூன்று சாவார் பல்லி தப்பாதே."

**குறிப்பு :**

முதல் ஏட்டில் 1 முதல் 5 பாடல்கள் உள்ளன. 2-வது ஏட்டில் ஒன்று முதல் தொடங்கி 3 வது ஏட்டின் இறுதியில் 7-வது செய்யுள் முடிய உரையுடனும் 8-வது செய்யுள் உரையின்றியும் இருக்கின்றன.

---

வரிசை எண் : **1466** சுவடி எண் : **797(e)**

## பட்சி நூல்

ஏடுகள் : 14. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 8-10 வரிகள். அளவு : 25 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை :

600. ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

" கற்பகப் பொற்பட்சி யென்னும் பழமறையின்
குருமொழியைக் கண்டு தேர்ந்த
அற்புதனும் வேதியன் தன்னு மதியாற் பட்சித்த
நூலாய்ந்து பார்த்தே
இப்புவியி லமரர்க ளெயுமக் காக யாமுரைப்போ
மினிதா முன்ன
முப்புவி யெத்திரை வனையு முருகனையு முளத்திருத்தி
மொழிகு வோமே."

**முடிவு :**

சுண்டுவிரல் வல்லூறு சொல்மோதிர மாந்தை
கண்டாய் நடுவி ரற்பின் காகமாந்
தொண்டரையே தூண்டு விரற்கோ ழிபெருஞ்
சென்னவிர லெங்கள் செந்திலாண்டவன்
மாமஞ்ஞையறி. -உஉ

**குறிப்பு :**

முதலேட்டில் "அம்பிகையோர் பாகன்" எனத் தொடங்கும் காப்புச் செய்யுளும் "இன்னமும் பட்சிக்கு நிறங்கள்.................... அறியலாம்" என்ற செய்யுளும் உள்ளன. இது அகத்திய மாமுனி யருளிய பட்சிநூல். இதில் பூர்வ பட்சம், வாரஉண்பட்சி, முற்பக்கத்தி ராத்திரி, உரவு, அமரபட்சம் நிறமுதலானது, ஐந்தோமிவுபட்சி, மூலி, பொதுவியல், பலன், பொருள், ஆரூடம் ஆகியவை உள்ளன.

---

வரிசை எண் : **1467** சுவடி எண் : **797 (f)**

## அலகு நூல்

ஏடுகள் : 14. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6-7 வரிகள். அளவு: 25 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 200. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

குறிப்பு :

இது நெ. 797 (b) நூல் போன்றது.

வரிசை எண் : **1468** சுவடி எண் : **797 (g)**

## நட்சத்திர அம்சம்

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 25 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 30. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை

தொடக்கம் :

" கடுகென நடக்க வல்லான் கன்றிய மனத்த னுகுஞ்
சடக்கென வார்த்தை சொல்லுந் தந்தைதாய் தன்னைப் பேணும்
வடுப்படப் பேச வல்லான் வளம்பெறப் பேச் வல்லா
னடுத்தவர்க் கன்ப னுகு மாயி லியத்தி னுனே ".

முடிவு :

" வலுவுடை மனத்த னுகும் வஞ்சக மொன்றுஞ் சொல்லான்
பலமன துடைய னுகும் பழிதனை நீக்கி வாழும்
பலகலை வித்தை கற்கும் பாக்கிய முடைய னுகுஞ்
சிலபல கோபி யாகுஞ் செயசிங்கந் தோன்றி ஞனே ".

குறிப்பு :

இந்நூல் சோதிடம். முதல் ஏட்டில் இரண்டு செய்யுட்களும் 2-வது ஏட்டில், இராசியாமிசம் என்ற தலைப்பில் 2 செய்யுட்களும் காணப்படுகின்றன.

வரிசை எண் : 1469 சுவடி எண் : 797 (h)

## மெய்நூல் - பாயிரம்

ஏடுகள் : 4. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 5—7 வரிகள். அளவு : 25 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

" இரவியை மதியைச் சேயை யேழின்மிகு புதனைத் தேவர்
பரவிய குருவை ஞானப் பளிங்குமே னியனைக் காகப்
புரவிவா கனனை மாறிப் புகுங்கதி யுளவி ரண்டு
அரவினைத் தொழுது நாளு மருவினை யகற்று வோமே ".

**முடிவு :**

உத்திருடம் சங்காலில் ஞ யடு-ம். திருவோணம் முதற்பாதத்தில் ஞ ச-ம் கடிகை ச-ம் ஆ ஞ யசு-ம் விகடிகை ச-ம் அபிசித்துவின் காலம் பார்த்தெழுத

**குறிப்பு :**

மனைசாத்திரத்தினைப் பற்றிக்கூறுவது. முழுதுமில்லை.

வரிசை எண் : 1470 சுவடி எண் : 797 (i)

## காலச் சக்கரம்

ஏடுகள் : 82. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6—10 வரிகள். அளவு : 25 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1500. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" காலிரண்டு கிடப்பவன் வரைமேற் பயிலவ காருண
வருக்க மெரிப்பிந் திரதிசை பூமிக் கோள
முற்கொண்ட யோன்மதி யோன்மூலன் காப்பி னேர
பார்வைவர வாறுதிங்கள் வயதைம்பான் கதிரமுப்
பானே ".

முடிவு :

கோசாரபலம் - சரவாஷக முடிவுலக்கன - அஷ்டகங்களும் விரையத்தான் நட்சத்திர சென்ம நட்சத்திரங்களும் ஒத்து வருங்காலங்கள் பார்த்து முடிவுகள்கூற மார்க முற்றும். இனி களத்திர புத்திரபாக்கிய லாபமாதியுரைத்தில் அவ் வறு லக்கினங்களுக்கு லக்கினமாதிகாரிய வரத்து லாபமும் பெலங்களும் வகரரதிசாபுத்திப் பெலமுந்தெரிந்துதகும் பலன்களுரைக்கப் பெருஞ் செல்வானுவாம்.

முற்றும்.
ஸ்ரீ செந்திலாதிபன் துணை.

குறிப்பு :

இந்நூல் இறுதியில், உள்ள முடைச்சூடாமணி, துளசிசரிதை, அலகு நூல், இராகு, குளிகன், இராசியாங்கம், சமயம் முதலிய எழுதிய 11 ஏடுகள் காணப்படுகின்றன, எமது மகால் சுவடி எண்கள் 671, 672 உள்ள சுவடிகள் எமதுமகாலில் அச்சாகியுள்ளன. அதற்கும் இதற்கும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. பக்க எண்கள் தொடர்ச்சியாக இல்லை.

வரிசை எண் : 1471 சுவடி எண் : 797 (j)

## அகத்தியர் ஞானம் 100

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : சிதைந்துள்ளன. பக்கத்திற்கு : 10—11 வரிகள். அளவு : 25 × 3 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

" பூரணமா மும்மூர்த்தி வந்த வாறும்
பூமியென்றும் நிதி (வாரம்) படைத்த வாறுங்
காரணமாய்த் தேவியெங்கு நிறைந்த வாறுங்
கர்ப்பமுண்டெ ரிஷிகள்சித்தர் சாகா வாறும்
வாரணமாய்ப் பரவையொடு நாற்காற் சன்மம்
மானிடர்க ளுருகின்ற குலத்தின் வாறும்
பாரதமாய் விருட்சமாய்ப் புல்ல தாகிப்
பாதாள சாகரமும் படைத்த வாறே ".

முடிவு :

ஊணப்பா யிப்படியே சிவத்தின் மார்க்கமுற்றுப்
பாரொன்று மில்லை வெளியாய்ப் போச்சு
ஆணப்பா வைந்தெழுத்தால் மூவ ராச்சு
அதினால் நெட்டெழுத்துங் கூடிப் போச்சு
நீணப்பா வோரெழுத்து நடுவ தாச்சு
நிச்சயமாய் அங்கென்று றீங்கார ந்தோன்றி
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ...

குறிப்பு :

இந்நூல் சைவசித்தாந்த ரீதியான தத்துவங்களைப் பற்றிய நூறு பாடல்களாலாகியது. இதன் ஆசிரியர் அகத்தியர். இந்தப் பிரதியில் இந்நூல் முழுவதும் இல்லை. இதன்பின் ஒரு சோதிட ஏடு இருக்கிறது.

வரிசை எண் : **1472** சுவடி எண் : **797(k)**

## உவமான சங்கிரக வெண்பா

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 8—10 வரிகள். அளவு : 25 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 80. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது

தொடக்கம் :

" கொண்டலுங்கூந் தற்கமுகுங் கொன்றைக்கா யும்மிருளுந்
தண்டலையுங் கார்மணலுஞ் சைவலமும்—வண்டினமுந்
தண்குழலை யொப்பாந் தனிவா னுதற்குநிகர்
வெண்பிறையுஞ் செஞ்சிலையு மே ". -க

முடிவு

" பாயற் பிடிவேழம் பைந்துவி யன்னநடை
சாயற்கு முன்னமுதந் தாமயிலா—நேயமிகு
மாந்தளிர்பொன் செண்பகப்பூ மாமேனி யம்மேனிப்
பூந்திதலை வேங்கைபசும் பொன் ". -ரு

உவமான சங்கிரக முற்றும்.

ஸ்ரீ சந்தனுசலம். செந்திலாதிபன் துணை.

குறிப்பு :

இந்நூலில் ஆசிரியர் பெயர் கூறப்படவில்லையாயினும், வில்லிப் புத்தூர் 'திருவேங்கடய்யர்' இயற்றியதென அச்சிடப்பட்ட நூலால் அறியக்கிடக்கின்றது. புகழேந்திப்புலவர் இயற்றியதென்பாருமுளர். காப்புச்செய்யுள் இல்லை. கேசாதிபாதாந்தமான உறுப்புக்களுக்கு உவமானப்பொருள்கள் கூறப்பட்டுள்ளன. இதற்கு 'உவமானச் சுருக்கம்' என மற்றொரு பெயரும் உண்டு. சற்றே சிதிலமாயுள்ளது. இந்நூலின் இறுதியில் வேறு 7 சில்லரை ஏடுகள் காணப்படுகின்றன.

வரிசை எண் : 1473                                                    சுவடி எண் : 876

## சருவபட்சணி

ஏடுகள் : 13. ஏட்டின் நிலைமை : மிகச்சிதிலம். பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 20 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 500. ஆசிரியர் : சுப்பிரமணியக்கடவுள். முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

சக்கரப்பாட்டு

" உச்சத்தில் மகார மாகில் உயர்நடுச் சிகார மாகில்
பிச்சத்தில் நகார மாகில் பிறைவட்டஞ் சூலஞ் செய்து
மிச்சத்தில் சித்த ரெல்லாம் வினைகளைத் தீர்க்க வேண்டி
பட்சத்தில் பகர்ந்து பார்த்தால் பகர்ந்திடுமட்
சரங்கள் தானே ".

காப்பு

" சீர்மேவும் வாலையபி ராமி சூலி
திரிபுரசங் காரிகௌ மாரி யாமி
தார்மேவு மயிடசங் காரி துர்க்கை
சாமுண்டி கங்காளி தந்த மைந்தன்
கார்மேவுந் தந்திமுக னொற்றைக் கொம்பன்
கருணைதிரு நயனனிரு கமல பாதம்
பார்மீதி லறுமுகவன் குறுமு னிக்குப்
பகர்சருவ பட்சணிக்குக் காப்ப தாமே ". -க

முடிவு :

சத்துரு சிங்காரம் சிவமந்திரம்
மங்நங்சிங்சிமசிநசிமசி உருவுலட்சம்.

இம்மூன்று மந்திரமும், இவ்விரண்டு சக்கிரமும் பா. கு. சொல்லியது.

குறிப்பு :

இது அகத்தியருக்கு முருகக்கடவுள் உபதேசித்ததாக முதற் செய்யுளால் அறியக்கிடக்கின்றது. இது மந்திர சாத்திரங்களுள் ஒன்றாகும். சக்கரங்களுடன் விளங்குகின்றது. இதன் காப்புச் செய்யுள், சுப்பிரமணியர் விஞ்சை என்னும் 881-ம் சுவடியில் காணப் படுகின்றது.

வரிசை எண்.: **1474** சுவடி எண்.: **974**

## சருவார்த்த சிந்தாமணி

ஏடுகள் : *134.* ஏட்டின் நிலைமை: பூச்சியரித்து உள்ளது. பக்கத்திற்கு: *13—15* வரிகள். அளவு: *11.5 × 3.5* செ.மீ. எழுத்து: தமிழ். கி.எண்ணிக்கை: *4000.* ஆசிரியர்: அறியக்கூடவில்லை. முழுமை: முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

“ மறுவத்த் வடனூலால் வாரியை மேகம் வாங்கிச்
சறுவத்த சிந்தா மணித்தமி ழலங்கா ரத்தைக்
கெறுவத்தை யொளித்துக் கிரிடியாயிப் புளிக்கீழ்யோகம்
பெறுசித்தாங் கையீன்ற பிள்ளைபொற் பாதங் காப்பே ”.

**முடிவு :**

“ சென்மமென வருங்காலங் குளிக னேடே
தியாச்சியமும் நன்றாகத் திருந்துஞ் சேய்க்கு
யென்னபலன் தலையோட்டி யெழுத்தை நொந்து
பிச்சையெடுப் பனவன் ஏது மாந்தி
முன்னை நாள்க் கொண்டாந்தங் குளிகன் கூடில்
மொழிந்தபல னக்கினைகள் முடியுங் கோலால்த்
தன்னவ னுய்ப்பவர் கூடச் சகலாரிட்டஞ்
சார்ந்திடுமே குளிகன்பலஞ்சற்றே சொன்னோம்.

**குறிப்பு :**

இது சோதிட நூலைச்சார்ந்தது. ஏடுகளின் எண்ணிக்கையில் லாததால் தொடர்ச்சி புலப்படவில்லை. பாவக பலன் இதில் கூறப் பட்டுள்ளது.

வரிசை எண் : 1475 சுவடி எண் : 721 (a)

## சல்லியம்

ஏடுகள் : 23. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்துள்ளது. பக்கத்திற்கு : 4—6 வரிகள். அளவு : 34.5 × 2.8 செ. மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 300. ஆசிரியர் : சல்லியன். முழுமை : முற்றும் உள்ளது.

**தொடக்கம் :**

ஆதியா மாந்தரீக மாயனும்முனிவர் தம்மில்
நீதிசேர் சல்லியனென்பொன் நிலத்தினிற் செய்தநூலைத்
தீதறு தமிழினாலே செப்பவே புளைக்கையான்தன்
சோதிசெர் செம்பொற்பாதம் சூட்டினேன் சென்னிமீதே.

**முடிவு :**

" குருவரு ளாலே சல்லியன் கூறியதொழில் களெல்லாங்
குருவரு ளாலே கண்டு குறிப்புடனறிய வேணுங்
குருவருள் தானே தெய்வங் குருவருள் தானேமுத்தி
குருவிரு பாதங் கண்டு கொண்டனென் சென்னிமீதே. "

முகிந்தது முத்தும்.

**குறிப்பு :**

இது ஒரு மாந்திரீக நூல். 'சல்லியன்' என்னும் முனிவர் வடமொழியில் செய்தநூலைத் தமிழில் கூறுவது. தமிழில் இயற்றியவர் பெயர் அறியக்கூடவில்லை. வசியம் முதலிய எட்டுவகைக் கன்மங்களையும் பற்றிக் கூறுகின்றது. ஏடுகள் நன்றாக இருக்கின்றன. ஏடுகள் சூசம் பக்கத்திலிருந்து தொடங்குகின்றன. அடுல் முடிவதால் மொத்த ஏடுகள் 23 ஆகும். இது அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை. 85, 86-ம் ஏடுகளில் சக்கரங்களும் மந்திரங்களும் உள்ளன.

வரிசை எண் : **1476** சுவடி எண் : **721(b)**

## ஒட்டியம்

ஏடுகள் : 8. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 5—7 வரிகள். அளவு : 34.5 × 2.8 செ.மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 150. ஆசிரியர் : ஒட்டிய முனிவர். முழுமை : முற்றும் உள்ளது.

தொடக்கம் :

"சிரணி கொன்றை சூடுஞ்
செஞ்சடை யுடையான் பங்கில்
நாரணி கெவுரி முக்கண
ணுயகி புவனம் பெத்த
காரணி யுமையாள் சோதிக்
கருமங்கள் தாளுய் நிற்கும்
பூரணி பெத்த ஆனை
முகவனைப் பொத்தி செய்வாம்".

முடிவு :

இல்லமும் பிரமு மாகி
யெங்குமாய் நின்ற தேவி
சொல்லிய கரும மாறுஞ்
சூஷ்த்திர மாட்டுத் தேவி
யெல்லம்மை யான தேவி
யிகத்திற் கைகண்ட வித்தை
புல்லிய கட்டை யொன்றிற்
புதுவுருச் செய்ய வேண்டும்.

ஒட்டிய முத்தும்

குறிப்பு :

இது ஒரு மாந்திரீக நூல். வசியம் முதலிய கன்மங்களைப் பற்றிக் கூறுவது. பூசாவிதி கடைசியில் கூறப்பட்டுள்ளது. ஏடுகள் நன்முக இருக்கின்றன. இது அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

வரிசை எண் ; 1477 சுவடி எண் : 783

## சாதகசிந்தாமணி

ஏடுகள் : 50. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்து உள்ளது. பக்கத்திற்கு : 7—10 வரிகள். அளவு : 41 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 2200. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

சூரியனுக்கும் லெக்கனதிபதிக்கும் உறவாகில் தீர்க்காயுசு. வயசு-ரா. சமமாகில் மத்திபவயசு சுயசு. பகை யாகில் அர்ப்பாயிசு நயந.

### நூல்

பூமருவும் பரதத்தை தவருச
முனிராசர் புகழ்ந்து கூற
மாமருவு மேருகிரி யேடாக
வெளுத்தா ணிவண் கொடகத்
தேமருவும் பொருளுணர்ந்து விரைந்தெளுது
காரணத்தன் செவ்வேள் முன்னோன்
காமருவுமோர் கொம்பனிரு சேவியனமும்
மதநால்வாயைங் கரத்தோன் காப்பு ''.

**முடிவு :**

போருலவு மதகரியை வடகிரியைப் பழித்தே பூரித்தே இளகி விம்மிப்புடைத்தெழு பூண்முலையே ாஅச. லெக்கன பாவபலன் முற்றும். விருத்தம் நயஎயசு. யினிபேசுகிறது. துவாதேச பாவகப்பலன்.

**குறிப்பு :**

இது சோதிட நூல்களுள் ஒன்று. இன்னின்ன லக்கினத்துக்கு இன்னின்ன பலன் என்பதைக் கூறுகின்றது.

வரிசை எண்.: **1478** சுவடி எண்.: **763**

## சாமுத்ரிகா லட்சணம்

ஏடுகள்: 35. ஏட்டின் நிலைமை: சிறிது பூச்சி அரித்துளது. பக்கத்திற்கு: 6—7 வரிகள். அளவு: 30 × 3 செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 500. ஆசிரியர்: சாமுத்திரியன். முழுமை: முழுவதும் இல்லை.

**தொடக்கம்:**

கீழாளுவன். தலையானது வட்டமாய்ப் பெருத்திருந் தால் செல்வமுண்டு. வட்டமாய்ச் சிறுத்திருந்தால் அழகுஞ் செல்வமுண்டு. நீண்டிருந்தால் வறுமை. தலைமயிர் நுணி பிளந்திருந்தால் வெகுசெல்வமுண்டு.

**முடிவு:**

கால் விரல் நகங்கள் வட்டமாய்ச் சிவந்திருந்தால் அழகும் ஆயித்துமுண்டு. மிருதுவாயிருந்தால் போகம் யென்னேரமும் உண்டு வெளுத்திருந்தால் யிச்சைப் படுவள். உரத்திருந்தால் நாணமில்லை. நீண்டிருந்தால் யெவர்பேரில்... ... ... ... ... ...

**குறிப்பு:**

இந்நூல் ஆடவர், பெண்டிர்களின் அவயலட்சணமும், அதனல் ஏற்படும் பலாபலனும் கூறுவது. இது அகத்திய முனிவர்க்கு முருகக் கடவுள் உபதேசித்தது. முதல் ஏடு காணவில்லை.

---

வரிசை எண்: **1479** சுவடி எண்: **764**

## சாமுத்திரிகா லட்சணம்

ஏடுகள்: 22. ஏட்டின் நிலைமை: பூச்சியரித்து உள்ளது. பக்கத்திற்கு: 6 வரிகள். அளவு: $32 \times 2\frac{1}{2}$ செ.மீ. எழுத்து: தமிழ். கி. எண்ணிக்கை: 450.

ஆசிரியர் : சாமுத்திரியன். முழுமை : முழுவதும் இல்லை.

குறிப்பு :

இந்நூல் நெ. 763 சுவடியைப்போன்றது.

---

வரிசை எண் : **1480** சுவடி எண் : **798**

## சாமுத்திரிகா லட்சணம்

ஏடுகள் : 54. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்து உள்ளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 27 × 3 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1500. ஆசிரியர் : சாமுத்திரியன். முழுமை ; முழுவதும் உள்ளது.

குறிப்பு :

இது 763-ம் சுவடி போன்றது. இது சாமுத்திரியன் என்பான் தமிழில் செய்தது என்பது இதன் காப்புச் செய்யுளால் அறியலாம்.

---

வரிசை எண் : **1481** சுவடி எண் : **828**

## சாமுத்திரிகா லட்சணம்

ஏடுகள் : 49. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்துளது. பக்கத்திற்கு : 4 வரிகள். அளவு : 35 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 400. ஆசிரியர் : சாமுத்ரிகன். முழுமை : முழுவதும் இல்லை.

குறிப்பு :

இது 763 போன்றதாயினும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. முதற்பாட்டில் சரநூல் என்ற சொல் காணப்படுகிறது. இதில் 102 செய்யுட்கள் உள்ளன. முதல் இரண்டு ஏடுகள் காணப்படவில்லை.

---

வரிசை எண் : 1482 சுவடி எண்: 946

## சாமுத்ரிகா லட்சணம்

ஏடுகள் : 7. ஏட்டின் நிலைமை : பூச்சியரித்தும், எலிகடித்தும் உள்ளது. பக்கத்திற்கு : 8 வரிகள். அளவு : 29×3 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை: 250. ஆசிரியர் : சாமுத்ரிகர். முழுமை : முழுவதும் இல்லை.

குறிப்பு :

இது முன் பிரதி போன்றதாயினும் வேறுபாடுகள் மிகுதியும் காணப்படுகின்றன

வரிசை எண் : 1483 சுவடி எண் : 728

## சோசியம்

ஏடுகள் : 10. ஏட்டின் நிலைமை : ஓரங்கள் சிதைந்துள்ளன. பக்கத்திற்கு : 7–8 வரிகள். அளவு : 31.5×3 செ.மீ. எழுத்து : தமிழ். கி.எண்ணிக்கை : 400. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

"வந்திக்குங் கதிர்குங் கங்குல்
மதிக்குச் சித்திரை செயக்கொடி
புந்துக்கு விட்டமப் பொன்னுக்குக்
கேட்டை புகற்குப் பொய்கை
கெந்திக்குஞ் சனிக்குந் தோணி
கிளமைகள் பிறந்த நாளாம்
சிந்திக்கும் கரும மெல்லாம்
தீமையாய் விளையு மாதே."

என்றது நாயத்துக்கிளமை பரணி திங்கள்கிழமை சித்திரை. செவ்வாய்க்கிளமை கேட்டை. வெள்ளிக்கிழமை பூரம். சனிக்கிழமை ரேவதி. இவைகள் கிளமை பிறந்த நாள். இவையத்தில் ஒரு காரியமுஞ் செய்யலாகாதென்பது.

முடிவு :

மார்கழி மாச முற்பத்தில் மூனு நடுப்பத்தில் மூனரை பிற்பத்தில் நாலு. தைமீ முற்பத்தில் நாலு நடுப்பத்தில் மூனரை பிற்பத்தில் மூனு மாசிமீ முற்பத்தில்..............

குறிப்பு :

1 முதல் 10 ஏடுகள் வரை காணப்படவில்லை. இது பொதுவான தொரு சோதிட நூல். (M. No. 729 ஜாதகங்கள்)

---

வரிசை எண் : **1484** சுவடி எண் : **785**

## சோதிடநூல் - அட்டவர்க்கம்

ஏடுகள் : 60. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 3-6 வரிகள். அளவு : 19 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 450. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

“ செங்கதி ரம்புலி சேய்புதன் சீவன்செழும் புகரோன்
பங்கர வஞ்சிக் கியாம்நவக் கோள்களும் பண்புறவே
மங்கல மைந்தரும் வாழ்வுடன் சீரும் நிறைவயதும்
பொங்குநற் செல்வமுந் தந்தருள் வாய்புகர் மாமுனியே.”

முடிவு :

ஈசுர வருடம் வைகாசிமீ அவ சனித்தசாகனுக்கு பரா பவ வருடம் வைகாசிமீ எவ வரையிற் சென்ற வயது ருசுூ.

இந்நேர மகர சக்கரத்துக்கு வயது ருள. மீ. ௨. ச. நாழிகை. ஙய மேல் ராகு. மகரதிசை ய௮.

குறிப்பு :

இந்நூலில் கிரகநிலை, விந்து பலன் முதலியனவும் நோக்கப்பட்டுள்ளன. சோதிட சாத்திரத்தைச் சார்ந்தது.

---

வரிசை எண் : **1485** சுவடி எண் : **776**

## சோதிடம்

ஏடுகள் : 56. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 4-5 வரிகள். அளவு : 12 × 2 செ. மீ. எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 300. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுதுமில்லை.

தொடக்கம் :

செந்தமிழ் வல்லோர் முன்னே தெரியவே உரைத்த வண்ணம்
சந்தனக் கயத்தி னாலே தானவர் கயறு சேர்த்து

முடிவு :

உத்தது லூரும் லூரும் ரெண்டும்வந் துதிக்கு மாகில்
மெத்தவே மனையும் உண்டு வினையது நீங்கும் கண்டாய்
சனிபகை தீர்ந்து போச்சு அடுத்தவர் உதவி யுண்டு
அரசர்கள் சகாயம் உண்டு வெற்றியவ னுக்கு வெல்லும்

குறிப்பு :

2, 11, 22, 23, 24, 27, 35, 36, 41, 49, 59, 65 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. இந்நூல் சோதிட சம்பந்தமான எல்லாச் செய்திகளையும் கூறுகின்றது. முழுதுமில்லை.

வரிசை எண் : **1486** சுவடி எண் : **778(a)**

## சோதிடம்

ஏடுகள் : 16. ஏட்டின் நிலைமை : சிறிது சிதிலம். பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 11.5×3 செ. மீ. எழுத்து : கிரந்தம். கி. எண்ணிக்கை : 140. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

**தொடக்கம் :**

அஷ்ட வேதார்க்க மித்யேஷாம் ஐயந்திரிதி புந: புந: I
அயமேவ ஸமாக்யாதம் த்ரிய ஆஸ்த்தம் புந: புந: II

**முடிவு :**

உத்திரட்டாதி பாலபசுக்கொட்டான் வெளம்பு ரேவதி பொன்னனை வலத்தால் இலுப்பை ஆகநட்சத்திரம் 27. நாரடகவட்சி. ஆக கக.

**குறிப்பு :-**

இது நட்சத்திரங்களின் பலன் முதலியவற்றைக் கூறுவது. தெளிவாக இல்லை. பிழைகள் அதிகம்.

வரிசை எண் : **1487** சுவடி எண் : **778(b)**

## வாஸ்து லட்சணம்

ஏடுகள் : 14. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 11.5×3 செ.மீ. எழுத்து : கிரந்தம். கி.எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

## யாகாதி மண்டப லட்சணம்

நவஹஸ்தம் ருத்ர ஹ்ஸ்தம்ச பானு ஹஸ்தம்
ததைவச சூயது பஞ்ச ஹஸ்தம் சம்மத பங்காரயேத்புத

முடிவு :

பிரதமம் பூபலம் சைவ முபாநம் சிவரூபகம்
ஜகதிம் விஷ்ணு ரூபம்ச கம் உதகம்
பிரம்ம ரூபகம் பாசினும்

காலம் : (Colophon)

யுவ-ஹு பங்குனி-மீ 2௳ சனிக்கிழமை சூரியன் உதித்து நாழிகை ௰ விருஷப லக்கினம் உ.த்திரட்டாதி நட்சத்திரம் குழந்தைக்கி ஜனித்தது.

குறிப்பு :

இது இந்நூலின் (778-ன்)d போன்றது. இது தெளிவாக இல்லை. பிழைகள் அதிகம்.

---

வரிசை எண் : **1488** சுவடி எண் : **778(c)**

## பைரவ தியானங்கள்

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : சிதிலம். பக்கத்திற்கு : 7 வரிகள். அளவு : 11.5 × 3 செ.மீ. எழுத்து : கிரந்தம். கி. எண்ணிக்கை : 40. ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

இர்த்தவாமம் கௌபீனதண்ட கர்தட்சிண ஹல்தபீடே
ரக்தஜ்வால ஜடாதரம் சசிதரம் ரக்தாங்கதேஜோமயம்
ஹஸ்தை: சூலகபால பாசடமரும் லோகஸ்யரட்சாகரம்
நித்ராணம். ஸ்வான வாஹனம்.

முடிவு :

ஓ ஹ்ரீம் ஜனுத்மனே நம: பஞ்சோபசாரன் க்ருத்வா
அபாத்மானம் கம்லம். கல்பயாமி லம்ப்ருதி

குறிப்பு :

31-ம் ஏடு இல்லை. 32-ம் ஏடு முதல் இருக்கிறது. பிழைகள் அதிகமாயுள்ளன. எழுத்துக்கள் தெரியவில்லை.

வரிசை எண் : 1489 சுவடி எண் : 778(d)

## யாகாதி மண்டப லட்சணம்

ஏடுகள் : 31. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 11.5×3 செ.மீ. எழுத்து : கிரந்தம். கி.எண்ணிக்கை : 250. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் உள்ளது.

தொடக்கம் :

நவஹஸ்தம் ருத்ர ஹஸ்தம்ச பானுஹ ஸ்தம்
ததைவசூயயத்வம் பஞ்சஹஸ்தம்ச மண்டபம்
காரயேதபுத

முடிவு :

ஆயம்மிடுந்து சிலகுரைந்துயிருப்பது. சருவசம்பத்தும் கூடிவரும். ரூபம் குரைந்து சிலவு அதியமானல் சருவநூலை முண்டுயென்றவாறு.

குறிப்பு :

இது இந்நூலின் (778-ம்)b போன்றது. அதைவிட அதிகமாயும், தெளிவாயும் உள்ளது. இதில் மற்றும் உள்ள சில்ப லட்சணங்களில் சில கூறப்பட்டுள்ளன.

வரிசை எண் : **1490** சுவடி எண் : **778(e)**

## சோதிடம்

ஏடுகள் : 13. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 6—7 வரிகள். அளவு : 11.5×3 செ.மீ. எழுத்து : கிரந்தம். கி.எண்ணிக்கை : 100. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

**தொடக்கம் :**

ராசிபலன்; நட்சத்திர பலன்; த்வஜம் பூதார்த்தமுண்டு சூலம்வைகரமுண்டு. சிம்மம் ஐயமுண்டு. ஸ்வானம் புனர்தம் உண்டு. விருக்ஷபம் சௌக்கியமுண்டு.

**முடிவு :**

" பாம்பாகில் பலயகின்ற ரெண்டுசொல் பரிதிசனி
செவாயில்—நிரயில்லையென்று சொல்காற்காட்டும்
புதனுகில் கல்லென்றுசொல். கணமயிலே குருவாகில்
நீற்சுரப்பம். காச்சிதானே ".

**குறிப்பு :**

இந்நூலில் (778) பல நூல்கள் கலந்து காணப்படுகின்றன. எழுத்துக்கள் தெளிவாக இல்லை. இந்நூலில் இடையிடையே 12, 9, 27, 28, 29, 38, 35, 36. 37, 38, 39, 51 ஆகிய ஏடுகள் இல்லை.

வரிசை எண் : **1491** சுவடி எண் : **779(a)**

## சோதிடம்

ஏடுகள் ; 4. ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 9 வரிகள். அளவு : 22×3.5 செ.மீ. எழுத்து : தமிழும், தெலுங்கும், கிரந்தமும். கி. எண்ணிக்கை : 30. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

குருப்பியோநம.

............ராஜசே குச பார்க்கவா. அர்க்கார்க்க ஸௌம்ய வாரேஷு தாமவேளாம் சதுஹு கடிஹி. வாய்ந்த மதிபொன்னுக்கு வந்தனுக்கு

முடிவு:

ஸ்தீரிகால புருஷகாலம். ஞாயற்செவ்வா, வியாலன், சனி 6 மணி முதல் ஆறரை மணி வ்ரையில் ஆண் யெனவும் ஆறரை முதல் யேளுவரை பெண் யெனவும், திங்கள், புதன், வெள்ளி இவ்வாரங்களில் 6 மணி முதல் ஆறரை மணி வரை பெண்யெனவும், யேளுமணி வரை ஆணெனவும் பார்க்கவும்.

குறிப்பு :

இதில் தெலுங்கு எழுத்தில் எழுதிய நட்சத்திரங்களின் பெயர்கள் உள்ளன.

வரிசை எண் : 1492 சுவடி எண் : 779(b)

## நட்சத்திரப் பலன்

ஏடுகள் : 10. ஏட்டின் நிலைமை : சிறிது பூச்சி அரித்தது. பக்கத்திற்கு : 9 வரிகள். அளவு : 22 × 3.5 செ. மீ. ... எழுத்து ; தமிழும், கிரந்தமும். கி.எண்ணிக்கை : 130. ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முழுவதும் இல்லை.

தொடக்கம் :

ஆயுசுவித்தை தன்ம யோகம்—சுகம்—வாகனம்—அரிய லெக்கினாதிபதியும்—அஷ்ட்டமாதிபதியும், தேமாதிபதியும் கேந்திர—திரிகோணங்களில் யிருந்தால் தீர்க்காயிசு.

